# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Tuesday, the 3rd July 1962.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half-past eight of the clock, Mr. Speaker (THE HON. SRI S. CHELLAPANDIAN) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

### STARRED QUESTIONS.

*அரசாங்க அதிகாரிகள் (உதவி நிதி வசூலித்தல்)*

* 87 கேள்வி.—திரு. அ. ப. அழகமுத்து : கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

அரசாங்க அதிகாரிகள் உதவி நிதி வசூலிக்கும் காரியங்களில் ஈடுபடுவதை தடை செய்யும் உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Rule 5 of the Government Servants' Conduct Rules prohibits Government servants from collecting funds or subscriptions except with the prior sanction of the Government.

திரு. அ. ப. அழகமுத்து : பொது ஸ்தாபனங்களுக்கு நன்கொடை வசூலித்துத் தருவதில் அதிகாரிகள் ஈடுபடும்போது தாஙகுவோர், தாங்காதோர் என்ற பாகுபாடு இன்றி வசூலிக்க ஆரம்பிப்பதால் ஏழை விவசாயிகளும், சிறிய வியாபாரிகளும் அதிகமாகப் பாதிக்கப்படுகின்றனர். ஆகவே அதைத் தடுக்க முயற்சி எடுக்கப்படுமா ?

கனம் திரு. எம். பக்தவத்சலம் : குறிப்பிட்ட வகையில் எந்த விதமான தவறு நடக்கிறது, எப்படித் தொல்லை செய்கிறார்கள் என்பதைப் புகார் மூலம் எழுதி அனுப்பினால் அது கவனிக்கப் படும்.

திரு. மீ. கலியாணசுந்தரம் : கடந்த ஆண்டில் திருச்சி ஜில்லாவில் இருந்து எந்தெந்தக் காரணங்களுக்காக அதிகாரபூர்வமாக அரசாங்க அதிகாரிகள் நன்கொடை வசூல் செய்வதற்கு அனுமதி கோரியிருக்கிறார்கள். அப்படி அனுமதி கேட்டிருந்தால் எந்த எந்த வகையில் ?

கனம் திரு. எம். பக்தவத்சலம் : அதைப்பற்றி தனியாகக் கேள்வி கேட்க வேண்டும். என்னிடம் இப்போது தகவல் இல்லை.

*Producer-cum-consumer co-operative societies (revival)*

* 88 Q.—SRI C. CHIRANJEEVULU NAIDU : Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(a) whether there is any proposal to revive producer-*cum*-consumer co-operative societies; and

(b) if so, when?

[3rd July 1962

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : (*a*) & (*b*) There are no Producer-*cum*-consumer Co-operative Societies functioning in this State, and there is also no proposal to organise such societies.

ஒதுக்கக் காடுகள்

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : As Question Nos. 89 and 90 relate to the same subject they may be taken up together.

MR. SPEAKER : Yes, the Hon. Minister may answer both the questions together.

* 89 கேள்வி.—திரு. சா. கணேசன் : கனம் கூட்டுறவு அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மேய்ச்சல் காடாக இருந்துவந்த பொட்டல் காடுகளை எல்லாம் "Reserve Forest Act" -ன்கீழ் கொண்டுவந்ததனால் விவசாயிகள் பெரிதும் கஷ்ட நஷ்டம் அடைகிறார்கள் என்பது அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்ததா ?

(இ) இவர்களின் குறை நீக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளது ?

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : (அ) & (இ) : Reservation of any land under the Madras Forest, Act, 1882, is done only after taking all relevant factors into consideration. Though entry of goats into the Reserved Forests is altogether prohibited, sheep, cows, bulls and buffaloes are generally allowed to graze in the Reserved Forests on payment of nominal charges. If the hon. Member brings to the notice of the Government specific instances of hardship they will be looked into.

* 90 கேள்வி.—திரு. சா. கணேசன் : கனம் கூட்டுறவு அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

காடு என்று சொல்லற்கொவ்வாத முள்ளுச் செடிகள் மண்டிக் கிடக்கும் பகுதிகளைக்கூட "Reserve Forest Act" -ன் கீழ் கொண்டு வந்திருப்பதனால் ஏழை மக்களும், சலவைத் தொழிலாளர்களும் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை அரசாங்கம் அறியுமா ? அவர்கள் குறைகளைப் போக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளது ?

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : Reservation of any land under the Madras Forest Act, 1882, is done only after taking all relevant factors into consideration. If the hon. Member brings to the notice of the Government specific instances of hardship, they will be looked into.

திரு. சா. கணேசன் : எங்கள் பகுதியில் பல இடங்களில் காடுகளுக்குள் விவசாயிகளுடைய மாடுகள் போனதற்காக மாடு ஒன்றுக்கு 50 ரூபாய் அபராதம் காரைக்குடி சப்-மாஜிஸ்ட்ரேட்

3rd July 1962]

கோர்ட்டில் விதிக்கப்பட்டிருக்கிறது. அதுபோலவே ஆடுகள் ஒவ்வொன்றுக்கும் 10 ரூபாய் அபராதம் அதே கோர்ட்டால் விதிக்கப்பட்டிருக்கிறது. விவசாயிகளுக்கு இத்தகைய துன்பங்கள் ஏற்படுவதைத் தவிர்ப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்க முன்வருமா? அதைப்பற்றி அறியவிரும்புகிறேன்.

**கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்றாடியார் :** ரிசர்வ் காடுகளுக்குள் ஆடுகள் விடுவதை அனுமதிக்கமாட்டார்கள். மற்ற எல்லாவற்றுக்கும் லைசென்சு வாங்கிக்கொண்டிருந்தால் எந்த விதமான தொல்லையும் கிடையாது.

**திரு. சா. கணேசன் :** வயலில் பயிர் வைத்தபிறகு ஆடுமாடுகள் மேய்வதற்கு வேறு இடமே கிடையாது. நிர்ப்பந்தமில்லாமல் இங்கே மேய்வதற்கு வசதி அளிப்பதுதான் உதவியாக இருக்கும். மேய்ச்சல் காடாக இருந்துவந்த பொட்டல் காடுகளை எல்லாம் முன்போலவே ஆடுமாடுகள் மேய்வதற்கு வசதியாக இருக்கும்படி செய்வார்களா?

**கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்றாடியார் :** நான் சொல்லக்கூடியது ரிசர்வ் காடுகளுக்கு மட்டும்தான். ரெவின்யூ காடுகள் விஷயத்தில் எந்தவிதமான கஷ்டமும் இருக்காது என்று தெரியப்படுத்த விரும்புகிறேன்.

SRI C. CHIRANJEEVULU NAIDU : Are the Government aware of the fact that some of the lands which are fit for cultivation purposes are also being acquired by the Forest Department and most of the ryots have been evicted in certain areas where the lands have already been under cultivation?

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : No, Sir.

**திரு. ஜே. மாதா கவுடர் :** கிராமத்தை ஒட்டினாற்போல உள்ள இடங்களையெல்லாம் காடுகளாகச் செய்துவிட்டதன் காரணமாகத்தான் இந்தத் தொல்லைகள் எல்லாம் ஏற்பட்டுக்கொண்டு வருகின்றன. ஆகையால் சர்க்கார் இதைப் பரிசீலனை செய்து கிராமத்தை ஒட்டினாற்போல உள்ள நிலங்களில் காடுகளை உற்பத்தி செய்யாமல் இருப்பார்களா?

**கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்றாடியார் :** ஊருக்குப் பக்கத்தில் இருந்த ரெவின்யூ நிலங்களில் எல்லாம் முன்பு உருளைக்கிழங்கு பயிரிட்டுவந்தார்கள். இப்போது அங்கே சர்க்கார் மரங்களை நட்டுவருவதை ஏற்கனவேயே ஆட்சேபித்துக் கொண்டிருக்கிறார்கள். அதைத்தான் சொல்கிறார்கள் என்று நினைக்கிறேன் . . .

**திரு. டி. கார்ச்சா கவுடர் :** நீலகிரி ஜில்லாவில் கூடலூர் தாலுகாவிலுள்ள பட்டா நிலங்களில் தனிப்பட்ட பூமிகள் சிறு சிறு ரிசர்வ் காடுகளாக மாற்றப்படுவது விவசாயிகளுக்குப் பெருத்த தொல்லை விளைவிப்பதால் அதைத் தடுத்துநிறுத்த

வேண்டுமென்று பொதுமக்களிடமிருந்து ஏற்கனவே கோரிக்கைகள் அனுப்பப்பட்டிருக்கின்றன. அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கின்றது என்பதை கேட்க விரும்புகிறேன்.

**கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்றுடியார் :** அதற்குத் தனியாகக் கேள்வி போடும்படி கனம் அங்கத்தினரைக் கேட்டுக்கொள்கிறேன்.

திருமதி ஏ. எஸ். பொன்னம்மாள் : தலைவர் அவர்களே, ஊரின் பக்கத்திலிருக்கிற சிறிய சிறிய குன்றுகளைக்கூட ரிசர்வ் பாரஸ்ட் என்று கண்டு மாடுகள் போகக்கூடாது என்று தடுப்பது கஷ்டமாக இருக்கிறது. ஆகவே இந்தக் குன்றுகளையாவது விலக்கிவிட முன் வருவார்களா ?

**கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்றுடியார் :** குன்றுகள் என்று சொல்லும்போது அங்கே எந்தவிதமான மரமும் வளராது, புல்லும் முளைக்காது.

திரு. சா. கணேசன் : என்னுடைய கேள்வி 145-ல் (கேள்வி 90) காடு என்று சொல்லற்கொவ்வாத முள்ளுச் செடிகள் மண்டிக் கிடக்கும் பகுதிகளைக்கூட ரிசர்வ் காடுகள் என்று கொண்டு வந்திருப்பதால் ஏழை மக்களும், சலவைத் தொழிலாளர்களும் முள்ளுப் பொறுக்கக்கூட, கஞ்சி காய்ச்சக்கூட வசதியின்றி தவிக்கிறார்கள். இதை நீக்காவிட்டால் தேசத்தின் ஏழை மக்களின் பொருளாதார வாழ்வு பாதிக்கப்படும். ஆகவே கனம் அமைச்சர் அவர்கள் இதைப்பற்றிக் கவனம் செலுத்தி அவற்றை விலக்க நடவடிக்கை எடுத்துக்கொள்வார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்றுடியார் :** நான் முன்பே சொன்னேன். அதற்கு முந்தின கேள்வியும் இதுவும் ஒன்றுதான். முன்பாகவே லைசென்சு வாங்கி இந்த ரிசர்வ் காடுகளிலிருந்து முள்ளு எடுத்துச் செல்லலாம், வெள்ளாடுகளைத் தவிர மாடுகள், எருமைகள் முதலியவற்றை மேய்க்கலாம். இவற்றுக்கு எல்லாம் பர்மிட் கொடுக்கிறோம்.

திரு. ஜே. மாதா கவுடர் : ஊருக்கு அருகில் உள்ள நிலங்களில் விவசாயிகள் உருளைக்கிழங்கு போடுகிறார்கள் என்றால் போடாவிட்டால் அவர்களுக்குச் சாப்பாட்டுக்கு என்ன செய்வது. ஆனால் முன்பு ஒவ்வொரு ஊரிலும் மாடுகள் மேய்ப்பதற்கு என்று மேய்ச்சல் நிலங்கள் வைத்திருந்தார்கள். அவற்றை இன்றைய தினம் ரிசர்வ் பாரஸ்ட் என்று வைப்பதனால் மாடுகள் மேய்வதற்கு இடையூறாக இருக்கிறது. அம்மாதிரி காடுகள் வளர்ப்பதை ஏற்கனவே ஆட்சேபித்திருக்கிறோம். ஆகவே ஒவ்வொரு கிராமத்திலும் எங்கெங்கே காடுகள் வளர்க்கலாம் என்று பரிசீலித்து நிர்ணயிப்பதற்கு அங்கங்கே பாரஸ்ட் அட்வைசரி கமிட்டி ஏற்படுத்துவதற்காவது முன்வருவார்களா ?

3rd July 1962]

**கனம் திரு. ந. நல்லசேனுபதி சர்க்கரை மன்ருடியார் :** ஏற்கனவே இதுமாதிரி ஒரு அட்வைசரி கமிட்டி இருக்கிறது. அங்கே நல்ல முறையில் பரிசீலனை செய்துதான் காடுகள் வளர்க்கப் படுகின்றன. ஊரில் உள்ளவர்கள் பாரஸ்ட் நிலம் வேண்டுமென்று சொல்வது நியாயமில்லை என்று கனம் மெம்பருக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

**திரு. மு. ஷண்முகம் :** ஒவ்வொரு கிராமங்களிலும் மாடுகள் மேய்வதற்கு புறம்போக்கு நிலம் இருந்து வந்திருக்கிறது. ஆனல் சில காலமாக அந்தப் புறம்போக்குகள் எல்லாம் தனி நபர்களால் ஆக்கிரமித்துக்கொள்ளப்பட்டுவிட்டால் சர்க்காரால் பராமரிக்கப் படாமல் போய்விட்டது அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்திருக் கிறதா? அப்படியிருந்தால் மறுபடியும் அவற்றை மேய்ச்சல் நிலமாக மாற்றுவதற்கு ஏதாவது நடவடிக்கை எடுக்க முடியுமா?

**கனம் திரு. ந. நல்லசேனுபதி சர்க்கரை மன்ருடியார் :** அந்த விபரத்துக்கு தனிக் கேள்வி போடும்படி கனம் மெம்பரை கேட்டுக்கொள்கிறேன்.

**திரு. சா. கணேசன் :** இந்தக் காடுகள் விஷயத்தில் ஒன்றைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். மற்றப் பகுதிகளிலுள்ள காடு களுக்கும் ராமநாதபுரம், புதுக்கோட்டை, தஞ்சை போன்ற பகுதி களில் உள்ள காடுகளுக்கும் ஒரு விதமான சம்பந்தமும் இல்லை. இங்கிருக்கும் செடிகள் ஒரு முழம் இரண்டு முழத்திற்கு மேல் வளருவது இல்லை. நீலகிரி காடுகளோடு இவற்றை ஒப்பிட்டுக் காட்டுவது சரியல்ல.

MR. SPEAKER : What is the question which the hon. Member wants to put?

**திரு. சா. கணேசன் :** I want to explain. இந்தக் காடு நீலகிரி காடுகளோடு ஒப்பிட்டால் வேறு முறை அனுஷ்டிக்கப் படுமா என்று அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. ந. நல்லசேனுபதி சர்க்கரை மன்ருடியார் :** அதற்குத் தனிக் கேள்வி போடும்படியாக கனம் மெம்பர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

### கூட்டுறவு விவசாய பாங்கு (வேட்டவலம்)

*** 91 கேள்வி.—திரு. கு. கோபாலக் கவுண்டர் :** கனம் கூட்டுறவு அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) திருவண்ணமலை தாலுகா, வேட்டவலம் கிராமத்தில் கூட்டுறவு விவசாய பாங்கு வேண்டுமென்று கிராம ஜனங்கள் அரசாங்கத்துக்கு மனு செய்துள்ளார்களா?

(இ) அப்படியானல், அதன்மேல் என்ன உத்தரவிடப் பட்டது?

கனம் திரு. ந. நல்ல சேனாபதி சர்க்கரை மன்றாடியார்:

(அ) இல்லை, ஐயா.

(இ) இந்தக் கேள்வி எழவில்லை.

*Public fountains for Tiruchirappalli Municipality*

* 92 Q.—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Health be pleased to state—

(a) whether proposals for opening additional public fountains in Tiruchirappalli municipal area were received by the Sanitary Engineer from the Municipal Council of Tiruchirappalli;

(b) if so, the details thereof; and

(c) the reasons for the delay in communicating the sanction?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM: (a) Yes, Sir.

(b) The Municipal Council, Tiruchirappalli has asked for the installation of one hundred and sixty-one additional public fountains at the rate of six for each ward.

(c) The Chief Engineer's report has recently been received and it is under consideration.

திரு. மீ. கலியாணசுந்தரம்: எனக்குக் கிடைத்திருக்கும் தகவலின்படி இந்தத் திட்டமானது சானிடரி எஞ்சினியருக்கு அனுப்பப்பட்டு ஒரு வருஷத்திற்கு மேலாகிறது. இவ்வளவு கால தாமதத்திற்குக் காரணம் என்ன? இந்தத் திட்டம் உடனடியாக அனுமதிக்கப்படுமா?

கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம்: சானிடரி எஞ்சினிய ருடைய தகவலுக்காக வேண்டித்தான் அரசாங்கம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. அது வந்த உடனே உடனடியாக நடவடிக்கை எடுக்கப்படும்.

*Presidents of panchayats (training)*

* 93 Q.—SRI V. KRISHNAMOORTHY: Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) whether there is any scheme to give training to the panchayat presidents; and

(b) if so, the cost of such training?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) Yes, Sir.

(b) Rs. 4·32 lakhs.

திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி: சார், ரூ. 4,32,000 செலவழித்து இப்போது இருக்கும் பஞ்சாயத்துத் தலைவர்களுக்குப் பயிற்சி அளித்திருப்பதாக அமைச்சரவர்கள் சொல்கிறார்கள். இப்போது இருக்கும் தலைவர் அவர்கள் பெற்ற பயிற்சியை கிராம மக்களுக்கும் மற்றைய முறைகளிலே அனுபவ சாத்தியமாகச் செய்வதற்கு இருக்கிற காலவரையை ஒத்தி வைக்க அரசாங்கம் முன் வருமா?

3rd **July 1962]**

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** இன்னும் இந்தப் பயிற்சி முடிவு பெறவில்லை. 12,500 பஞ்சாயத்துத் தலைவர்களும், 12,500 பஞ்சாயத்து உப-தலைவர்களும் இருக்கிறார்கள். அவர்கள் இந்தப் பயிற்சியைப் பெறவேண்டும். ஒவ்வொரு வட்டாரத் தலைமை ஸ்தானத்திலும் இந்தப் பயிற்சி வாரத்தில் மூன்று நாட்கள் நடைபெறும். இவர்கள் முதலில் பயிற்சி பெற்றால் இவர்கள் மூலம் கிராமத்திலுள்ளவர்கள் பயிற்சி பெறலாம்.

**திரு. மீ. கலியாணசுந்தரம் :** பஞ்சாயத்துத் தலைவர்களுக்கும் உப-தலைவர்களுக்கும் பயிற்சி கொடுப்பவர்கள் யார்? அவர்களுக்கு என்ன பயிற்சி கொடுக்கப்பட்டது?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** இவர்களுக்குப் பயிற்சி கொடுப்பவர்கள் பஞ்சாயத்து ஆபீசர்கள். பஞ்சாயத்து ஆபீசர்களில் முக்கியமாக 11 பேரை பொறுக்கி எடுத்து அவர்கள்மூலம் பயிற்சி கொடுக்கப்படுகிறது. அவர்களுக்கு, பயிற்சி அளிக்கக் கூடிய தகுதி இருக்கிறது.

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி :** சார், இவ்வளவு பணம் செலவழித்துப் பயிற்சி கொடுக்கிறோமே, பஞ்சாயத்துத் தலைவர்களுடைய 'டர்ம்ஸ் ஆப் ஆபிசை' ஒத்தி வைக்கும் எண்ணம் உண்டா என்றுதான் வினவினேன். அது பற்றி அமைச்சர் அவர்கள் கருத்து என்ன?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** பஞ்சாயத்துத் தலைவருடைய 'டர்ம்சை'யோ பஞ்சாயத்து உறுப்பினர் 'டர்ம்சை'யோ அதிகப்படுத்த உத்தேசம் இல்லை.

*Panchayats and Panchayat Union Councils*

* 94 Q.—Sri S. MAHADEVAN : Will the Hon. the Chief Minister be pleased to state the number of (i) panchayats; and (ii) panchayat union councils functioning as on 31st December 1961?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : There were 12,535 panchayats and 363 panchayat union councils functioning as on 31st December 1961.

**திரு. எஸ். மாதவன் :** இந்தப் பஞ்சாயத்து யூனியன்கள் பல கால கட்டங்களில் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் ஒரே காலத்தில் எல்லா யூனியன்களுக்கும் தேர்தல் வரவேண்டுமென்ற ஒரு கருத்து அரசாங்கத்திற்கு இருந்து அதற்காகத் தேர்தல்களை ஒத்திப்போடும் உத்தேசம் உண்டா?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** எந்தத் தேர்தலையும் ஒத்திப் போடுவதாக உத்தேசம் இல்லை.

**திரு. ம. கமலநாதன் :** இப்போது இருக்கும் பஞ்சாயத்துகளும் முன்பு அமைக்கப்பட்ட பஞ்சாயத்துக்களும் அமைப்பில் பெரியனவாகவும் சிறியனவாகவும் இருக்கின்றன. நிதி நிலைமையைப்

[3rd July 1962

பொறுத்தும், பஞ்சாயத்து எல்லைக்குள் வாழும் மக்கள் நிலையைப் பொறுத்தும் இந்த எல்லைகளை மாற்றவோ பரப்பளவைக் குறைக்கவோ உத்தேசம் உண்டா ?

கனம் திரு. எம். பக்தவத்சலம் : பஞ்சாயத்துக்களின் எல்லையை சட்டத்தின்படி பிரிப்பது அப்போதைக்கப்போது பரிசீலனை செய்யப்பட்டு முடிவு செய்யப்பட்டுவருகிறது.

*Medical allowance for N.G.Os.*

*95 Q.—SRI T. K. MOOKIAH THEVAR: Will the Hon. the Minister for Health be pleased to state whether there is any proposal to grant medical allowance to N.G.Os. in lieu of the free treatment in Government hospitals?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : No, Sir.

திரு. கே. மூக்கையா தேவர் : சார், இலவசமாக வைத்தியம் செய்கிற காரணத்தால் சரியான மருந்துகள் கொடுப்பதில்லை. கிடைத்தாலும் அந்த வியாதி போகும் அளவுக்கு விலை உயர்ந்த மருந்துகள் கொடுப்பதில்லை. ஆகவே, இந்த இலவச வைத்தியத்திற்குப் பதிலாக அவர்களுக்கு மருத்துவ அலவன்ஸ் கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் : ஏற்கனவே, இலவச மருத்துவ வசதி கொடுக்கும் காரணத்தால் அலவன்ஸ் கொடுப்பது இயலாது.

திரு. மீ. கலியாணசுந்தரம் : சார், சிகிச்சைக்குப் பதிலாகப் பணம் கொடுப்பது ஒருபுறம் இருக்கட்டும். சிகிச்சை ஒழுங்காக நடக்க உத்தரவிடவேண்டும். விலை உயர்ந்த மருந்துகளை அனுமதிக்கக்கூடாது என்று உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள் என்பது உண்மையா ? அப்படி உத்தரவு இருக்கிறது என்று நான் கூறுகிறேன்.

கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் : அரசாங்கத்திடம் அந்த மாதிரி தகவல் ஒன்றும் கிடையாது.

திரு. வை. சங்கரன் : ஒரு சில மருத்துவ மனைகளில் இலவசம் என்பதால் சரியான மருந்துகள் சிகிச்சைக்கு கிடைப்பதில்லை. ஆகவே, மத்திய சர்க்கார் போல், நம்முடைய அரசாங்கமும் ஏன் படி கொடுக்கக்கூடாது என்பதை அமைச்சர் அவர்கள் விளக்குவார்களா ?

கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் : என்.ஜி.ஓ-க்களைத் தனியாகக் கவனிப்பதற்காக தக்க நடவடிக்கைகள் எல்லாம் எடுத்து ஆஸ்பத்திரிகளுக்கு உத்தரவு அனுப்பப்பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்வது அவ்வளவு பொருத்தமல்ல என்று நினைக்கிறேன்.

3rd July 1962]

*Master Plan for Madurai City*

* 96 Q.—SRI V. SANKARAN : Will the Hon. the Minister for Health be pleased to state—

(a) whether the Government have proposed any Master Plan for the development and expansion of Madurai City; and

(b) if so, the details thereof?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : (a) Yes, Sir.

(b) The proposal is to prepare an Outline Development Plan which is a preliminary Master Plan for Madurai Municipal Town and the areas in its vicinity under the plan scheme for "Preparation of Outline Development Plans and Master Plans" in the Third Five-Year Plan.

The special staff which has been sanctioned for the purpose will prepare the Outline Development Plan during the year 1963–64 and a full Master Plan will be prepared afterwards.

திரு. வை. சங்கரன் : முன்னர் மதுரை போலீஸ் அதிகாரியாக இருந்த ஒருவர் மதுரை நகர சம்பந்தமாக மாஸ்டர் ப்ளான் தயாரித்து வெளியிட்டிருக்கிறார். அதையும் அரசாங்கம் பரிசிலனைக்கு எடுத்து நடவடிக்கை எடுக்குமா?

கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் : இது முனிசிபல் கவுன்சில்களிடத்தில் இருந்து வரவேண்டிய தகவல். ஆகவே, அவர்கள் தகவல் கொடுத்தபிறகுதான் இதற்கு நடவடிக்கை எடுக்கப்படும்.

திரு. சா. கணேசன் : இந்த விஸ்தரிப்பின் மூலமாக மதுரை நகரம் ஒரு கார்ப்பரேஷன் நிலைக்கு உயர்த்தப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் : இந்த ப்ளானை இம்பிளிமெண்ட் பண்ணிய பிறகுதான் அந்தத் தகவலுக்குப் பதில் அளிக்கமுடியும்.

புன்னைக்காயலை மீன்பிடித் துறைமுகமாக்குதல்

* 97 கேள்வி.—திரு. எம். எஸ். செல்வராஜன் : கனம் கூட்டுறவு அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்செந்தூர் தாலுகா, புன்னைக்காயலை ஒரு சிறு மீன்பிடித் துறைமுகமாக அபிவிருத்தி செய்யும் திட்டம் உண்டா?

(இ) அந்த வேலை எப்போது தொடங்கும்?

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : (a) & (b) There is a proposal for developing Punnakayal Estuary in Tiruchendur taluk by dredging the bar and channel and making the backwaters an anchorage for canoes. Survey work is in progress and estimates for dredging and maintaining the channel will be drawn up as soon as the survey work is finalized.

[3rd July 1962

SRI M. S. SELVARAJAN : Sir, as a part of the development of this port, is it a fact that Athoor—Punnakayal road is also going to be improved by the Government? If so, to what extent the Fisheries Department is going to contribute for the work?

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : Sir, I want a separate question.

*Taluk headquarters hospital for Paramakudi*

* 98 *Q.*—SRI C. SRINIVASAN : Will the Hon. the Minister for Health be pleased to state when the construction of taluk headquarters hospital for Paramakudi will be completed?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : The acquisition of lands for the construction of hospital buildings at Paramakudi has not been finalized. Plans and estimates for the work are also under examination. The work will be taken up after the lands are taken possession of and the plans and estimates are approved by the Government.

திரு. செ. சீனிவாசன் : அமைச்சர் அவர்களுக்கு, தற்போது கட்ட உத்தேசித்திருக்கும் இடத்திற்குப் பக்கத்திலே ஒரு இடம் இருப்பது தெரியுமா?

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் :** அங்கத்தினர் அவர்கள் கேட்ட கேள்விக்குத் தக்கவாறு அந்த லாண்டை அக்வயர் செய்ய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கிறது. பக்கத்து நிலத்தைப் பற்றிய தகவல் இல்லை.

*Education and general purposes committees*

* 99 *Q.*—SRI R. S. VEERAPPA CHETTIAR : Will the Hon. the Chief Minister be pleased to state the powers and functions of the Education and General Purposes Committees of Panchayat Union Councils constituted under the Panchayats Act of 1958?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Function or duty to be assigned to these committees has not been specified in the Madras Panchayats Act, 1958. However, as these names indicate, the Education Committee is to deal with the Panchayat Union's responsibilities in the development of elementary education and the general purposes committee is to deal with the Panchayat Union's local administrative duties.

SRI C. CHIRANJEEVULU NAIDU : Sir, may I know whether the powers vested with the panchayat union are statutory?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Powers have not been defined in the Act.

**3rd July 1962]**

**சப்-ரிஜிஸ்டிரார் அலுவலகம் (வேட்டவலம்).**

*100 கேள்வி.—திரு. கு. கோபாலக் கவுண்டர்: கனம் செய்தித் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருவண்ணாமலை தாலுகா, வேட்டவலம் கிராமத்தில் ஒரு சப்ரிஜிஸ்டிரார் ஆபீசு திறக்கும்படி அரசாங்கத்துக்கு மனு வந்துள்ளதா ?

(இ) அப்படியானால், அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது ?

THE HON. SRI G. BHUVARAHAN : ( ) No, Sir.

( இ ) Does not arise

*Island Grounds (construction of buildings)*

*101 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Government have received any resolution from the Corporation of Madras protesting against construction of buildings on the Island Grounds; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) This will be kept in view, if and when any proposal for the construction of buildings on the Island Grounds is mooted.

திரு. மீ. கலியாணசுந்தரம் : ஐலண்ட் கிரௌண்டில் கட்டிடம் கட்டுவது சம்பந்தமாக பல செய்திகள் பத்திரிகைகளில் வந்திருந்தன. அதன் உண்மையான நிலை என்னவென்று அமைச்சர் அவர்கள் விளக்குவார்களா ?

கனம் திரு. எம். பக்தவத்சலம் : ஐலண்ட் க்ரௌண்ட்ஸ் ராணுவ ஸ்தாபனத்தினிடம் இருக்கிறது. அவர்களிடம் தகவல் கேட்டிருக்கிறோம். நிலைமை என்னவென்று தகவல் அவர்களிடமிருந்து இன்னும் வரவில்லை.

திரு. மீ. கலியாணசுந்தரம் : நமது ராஜ்ய சர்க்காரைக் கலந்து ஆலோசிக்காமல் அந்த நிலத்தின்மீது எந்தவிதமான கட்டிடமும் போடக்கூடாது என்றாவது அரசாங்கம் ராணுவ இலாகாவிற்கு எழுதியுள்ளார்களா ?

கனம் திரு. எம். பக்தவத்சலம் : ராணுவ இலாகாவினரிடம் என்ன நிலைமை என்றுதான் கேட்டிருக்கிறோம். நிலைமை என்னவென்று தெரிந்த பிறகு அதற்குமேல் இந்த அரசாங்கம் என்ன செய்யவேண்டுமோ அதைச் செய்யும்.

***Examiners in courts***

*102 Q.—SRI V. KRISHNAMOORTHY : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any disparity in emoluments between the examiners in the civil and criminal courts?

[3rd July 1962

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Examiners in civil courts are on a time-scale of pay whereas the Examiners in criminal courts are paid on a piece-rate basis. The question of allowing a time-scale of pay to the Examiners in criminal courts is under the consideration of Government.

திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி : சிவில் கோர்ட்டில் வேலை செய்யும் காப்பிஸ்ட்களுக்கு ஒரு நிலையான வருவாய் இருக்க, அதே சமயத்தில் கிரிமினல் கோர்ட் காப்பிஸ்ட்களுக்கு நிரந்தரமற்ற வருமானம் இல்லாத காரணத்தினால் அதை உடனடியாக பரிசிலனை செய்து கிரிமினல் கோர்ட்களில் வேலை செய்யும் காப்பிஸ்ட்களுக்கும் நிரந்தர வருமானத்தைத் தேடித் தர இந்த அரசாங்கம் முன்வருமா ?

கனம் திரு. எம். பக்தவத்சலம் : இந்த விஷயம் அரசாங்கத்தின் பரிசிலனையில் இருக்கிறது என்று முன்னமேயே சொன்னேன்.

மீனவர்களுக்கு உதவித்தொகை.

*103 கேள்வி.—திரு. எம். எஸ். செல்வராஜன் : கனம் கூட்டுறவு அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மீனவர்கள் உபயோகிக்கும் மீன்பிடி கருவிகளில் நைலான் களைத் தவிர இதரபொருட்கள் எவையேனும் வாங்குவதற்கு ஏதேனும் ( subsidy ) உதவித் தொகை வழங்கப்படுகிறதா ?

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : Yes, Sir. Besides subsidy for the purchase of nylon, subsidy is also given to the fishermen for the purchase of cotton yarn and mechanised boats for fishing purposes.

SRI M. S. SELVARAJAN : Sir, will the Hon. Minister be pleased to give some more details about the subsidy for the materials.

MR. SPEAKER : I would request the hon. Member to put a definite question, if he wants to elicit further information.

திரு. எம். எஸ். செல்வராஜன் : நைலான் தவிர இதர பொருள் களுக்கு, கருவிகளுக்கு கொடுக்கப்பட்டுவரும் சப்ஸிடி என்ன விகிதாசாரத்தில் என்ன என்ன வகையில் என்னென்ன விதத்தில் கொடுக்கப்படுகிறது ?

கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்றாடியார் : நைலானுக்கு கொடுப்பது போக காட்டன் யார்னுக்கும் கொடுக்கப்பட்டு வருகிறது. போட் வாங்கவும் கொடுக்கப்பட்டுவருகிறது. காட்டனுக்கு 25 சதவிகிதம் சப்ஸிடி, 75 சதவிகிதம் திரும்பக் கொடுக்க வேண்டும். போட்ஸ்க்கும், ஹயர் பர்சஸில் வாங்க சப்ஸிடி கொடுக்கப்படுகிறது. 25 சதவிகிதம் சப்ஸிடியும் and 50 per cent subsidy on the cost of engines.

*சப்-டிரஷரி (காரைக்குடி)*

*104 **கேள்வி.—திரு. சா. கணேசன்:** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

காரைக்குடியில் ஒரு சப்-டிரஷரியைத் தொடங்க உத்தேச முண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: There is a proposal under the consideration of the Government to open a sub-treasury at Karaikudi.

*Water-supply for Madras City*

*105 Q.—SRI M. KALYANASUNDARAM:
SRI P. V. SRIRAMULU:
SRI K. A. MATHIALAGAN: } Will the Hon. the Minister for Health be pleased to state—

(*a*) whether the Government have ordered the investigation of the scheme for the supply of drinking water to the City of Madras from the Cauvery; and

(*b*) if so, the result thereof?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM: (*a*) Yes.

(*b*) The investigation report in the matter has recently been received from the Chief Engineer, Public Works Department (General), and it is under examination.

திரு. கே. ஏ. மதியழகன்: கடந்த மூன்றாண்டுகளுக்கு முன்பு ஏழு கிணறு பகுதியில் நடைபெற்ற ஒரு கல்யாணமண்டபத் துவக்க விழாவில், காவேரியில் இருந்து சென்னை நகரத்திற்குப் தண்ணீர் கொண்டுவரும் விஷயத்தில் அதை மிக விரைவில் கவனிப்பதாக கனம் முதல் அமைச்சர் அவர்கள் வாக்குறுதி அளித்தார்கள். மூன்று ஆண்டுகள் ஆன பிறகும் இன்னும் அந்த ஆராய்ச்சி இருந்துகொண்டிருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இந்த நெருக்கடியான பிரச்சனையைத் தீர்ப்பதற்கு கனம் முதல் அமைச்சர் அவர்கள் எடுத்துக்கொண்ட விசேஷ அக்கறை என்ன வென்று அமைச்சர் அவர்கள் சொல்வார்களா?

கனம் திரு. கு. காமராஜ்: கனம் அங்கத்தினர் அவர்கள், சென்னை நகரத்திற்கு குடிதண்ணீர் அளிக்கும் விஷயத்தில் சிரத்தை எடுத்துக்கொள்ளவில்லை என்பதைக் காட்டவேண்டு மென்பதுபோல் கேட்கிறார்கள். அரசாங்கம் செய்யவேண்டிய அத்தனை நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. அரசாங்கம் எல்லாவிதமான நடவடிக்கைகளும் எடுத்துக் கொண்டிருக்கிறது என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

**திரு. மீ. கலியாணசுந்தரம்**: பிரதம என்ஜினியரிடமிருந்து வந்திருக்கும் திட்டங்களின் விவரங்கள் என்னவென்று கூற முடியுமா? சென்னை நகருக்கு வழியில் உள்ள இதர முக்கிய நகரங்களுக்கும் குடிதண்ணீர் வழங்க திட்டமுண்டா?

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம்**: தனிக் கேள்வி போட்டால் பதில் அளிக்கிறேன்.

*Reports of the District Development Councils*

* 106 Q.—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Chief Minister be pleased to state when copies of the Annual Reports of the District Development Councils for the year 1960–61 will be placed on the table of the House?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The reports received from the Collectors are under examination and they will be placed on the table of the House early.

**திரு. மீ. கலியாணசுந்தரம்**: 1960-61-ம் ஆண்டு அறிக்கை இன்னும் சபைக்கு வரவில்லையே. இவ்வளவு காலதாமதம் ஆகலாமா? இந்தச் சட்டத்தின் 11-வது விதிப்படி ஒவ்வொரு வருட அறிக்கையும் அடுத்த வருடம் சட்டசபை முன் வைக்கப்படவேண்டுமென்று இருக்கிறதே, அதன்படி துரிதமான நடவடிக்கைகள் எடுக்க முடியுமா?

9-00 a.m. **கனம் திரு. எம். பக்தவத்சலம்**: குறிப்பிட்ட சட்டத்தின் 14 (2) · (வி) பிரிவின்படி விதிகள் அமைக்கப்படவேண்டும். அந்த விதிப்படி எந்த பாரத்தில் இந்த அறிக்கை வரவேண்டுமென்று நிர்ணயிக்கப்படவேண்டும். விதிகள் அமைக்கப்படுவதில் தாமதமாயிற்று. இன்னும் அந்த விதிகள் பூர்த்தியாகவில்லை. இருந்தாலும் 1960-61-ம் ஆண்டு அறிக்கையை கலக்டர்கள் அனுப்பவேண்டுமென்று, அவர்களே ஏதாவது ஒரு பாரத்தில் அனுப்பவேண்டுமென்று தெரிவித்திருப்பதால் அது வரும், வந்த பின்னர் இந்த மன்றத்தில் வைக்கப்படும்.

**திரு. மீ. கலியாணசுந்தரம்**: ஸார், கனம் அமைச்சர் அவர்கள் கூறிய பதிலில் கலக்டர்களிடமிருந்து பதில் வந்து விட்டது என்று முதலில் சொன்னார்கள். இப்போது, கலக்டர்களுக்கு எந்தவித மான முறையில் பதில் அனுப்பவேண்டும் என்று கேட்டிருந்தோம். அதில் தாமதமானதினால் எந்த வித பாரத்திலாவது பதில் அனுப்பவேண்டும் என்று கேட்டிருக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். இதிலிருந்து அமைச்சர் அவர்களின் பதில் முன்னுக்குப் பின் முரணாக இருக்கிறது. ஆகவே இதில் எது உண்மை என்று தெரியவில்லை. உண்மையிலேயே பதில் வந்து விட்டதா அல்லது வரவில்லையா என்பதை அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்**: என்னுடைய பதிலில் முரண்பாடு ஒன்றும் இல்லை. கலக்டர்களிடமிருந்து பதில்கள் வந்து விட்டன. அவை அரசாங்கத்தின் பரிசீலனையில் இருக்கிறது. பரிசீலனை முடிந்ததும் சபையின் முன்னால் சமர்ப்பிக்கப்படும்.

MR. SPEAKER: Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicate revision by the Member.]

## II.—PRIVILEGE MATTER *re* (1) PRESS INTERVIEW BY CHIEF MINISTER AT MADURAI AND (2) NEWS IN THE PRESS ABOUT GOVERNMENT'S EDUCATIONAL POLICY.

MR. SPEAKER : The hon. Member Sri M. Kalyanasundaram has given notice of a matter of privilege regarding (1) a speech made by the Hon. Chief Minister at Madurai and (2) the publication of news in the Press about the educational policy. Sri M. Kalyanasundaram may now speak.

*திரு. மீ. கலியாணசுந்தரம் : ஸார், நான் இதை விளக்குவதற்கு முன்பாக நான் கொடுத்திருக்கக்கூடிய தீர்மானத்தை வாசித்து விடுகிறேன்.*

" It is a well established convention that the Government should make all policy statements first in the Assembly when it is in session. Secondly, the Budget proposals should not be revealed before they are presented to the Assembly.

Parliamentary conventions and precedents are regarded as rules regulating the procedure of the Assembly. Therefore, conventions must be respected by the Executive.

Of late, I notice a growing tendency on the part of the Executive to release statements or information to the Press, and some of the Ministers availing of public meetings, press conferences, to announce policy statements.

Here are some of the instances.

(1) There is a news item appearing in the Indian Express (Madurai edition), dated Monday, the 18th June 1962, which states as follows :

' Speaking to newsmen in Madurai at the Circuit House on Sunday, Mr. K. Kamaraj, Chief Minister, said that there would be new tax proposals in the Budget to be presented at the next session of the State Legislature.'

Although it may be contended that no details of taxes proposed have been revealed, it is improper for a person occupying the position of a Chief Minister to indulge in such loose talks about Budget proposals, if the report is true.

(2) A second instance is about Educational Policy. ' The Hindu ', Madras, dated 8th June 1962, carries the whole details of a scheme of reorganization of Education under the caption " Four-stage course of Education "—" Madras Government's Comprehensive Plan ", etc. No doubt, this appears as news, reported by the Staff Reporter and not as a statement by the Government. Going through the report, I am convinced it is impossible for a Reporter, to get at the full details of a scheme, unless it was handed out to him by the department. This kind

of unofficial hard-outs is much more serious. Based on this report, a big debate is going on in the Press about the policy, in which even Government officials like the Director of Public Instruction are tempted to participate.

I think, Sir, these instances are enough to show the tendency of the Executive, to avoid facing the Assembly first on policy matters thus relegating this supreme body representing the will of the people to a secondary position.

The Executive is responsible to the Legislature, and it is the Legislature as a whole which is responsible to the people. The people are entitled to know, not only the views of the Government on a policy matter, but the views of all sections of the Legislature simultaneously. Hence it is imperative to discuss policy matters, first in the Assembly. Behind this attitude of avoiding the Assembly, lies the intolerance of the Government to the Opposition. Whoever may be the Opposition, in a parliamentary form of Government, the Opposition and the Government are carried on alike, by agreement. The minority agrees that the majority must govern. The majority agrees that the minority should criticise. This kind of mutual forbearance is essential for the functioning of the parliamentary form of Government.

For these reasons, I feel that the privileges and dignity of this House are sought to be undermined by the Executive and I request you, Mr. Speaker, who is the guardian of the rights and privileges of this House, to give me your consent for raising the matter of privilege related above."

**திரு. கே. ஏ. மதியழகன் :** இதன் பின்னுல் நான் அதிகமாக பேச விரும்பவில்லே. இதிலேயே விவரமாக சொல்லப்பட்டிருக்கிறது. சில கருத்துக்களே மட்டும் இப்போது சொல்ல விரும்புகிறேன். நான் கொண்டு வந்திருக்கும் இந்த உரிமைப் பிரச்னேயின் மீது இந்தச் சபையின் உரிமை பாதிக்கப்பட்டிருக்கிறதா இல்லேயா என்று தீர்மானிப்பது சபாநாயகர் அவர்களுடைய பொறுப்பு. சபாநாயகர் அவர்கள் இதன் மீது தங்கள் முடிவை தெரிவித்த பின்னுல் தான் நான் இதை முறையாக பிரேரேபிக்கவேண்டும். இது ஒரு முக்கியமான பிரச்சனேயாகையால் இதன் மீது இந்த உரிமைப் பிரச்சனே கொண்டு வந்திருக்கிறேன். பிரிட்டிஷ் பார்லிமெண்டிலும் சரி நம்முடைய நாட்டிலும் சரி பல சந்தர்ப்பங்களில் இம்மாதிரியான கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே இதன் மீது நாம் ஒரு முடிவுக்கு வர வேண்டும். இந்த சபையின் உரிமையைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு ஆளும் கட்சிக்கும் எதிர்கட்சிக்கும் இருக்கின்றது. இந்தக் குறிப்பிட்ட பிரச்னே சரியா அல்லது இல்லேயா என்பதில் மட்டும் தீர்ப்பளித்து விடுவதோடு நின்றுவிட வேண்டும் என்பது என் நோக்கமல்ல. . .

MR. SPEAKER : I would like to tell the hon. Member that we are now concerned only with the two matters referred to by him in his notice and not with the general policy of the Government or any other matter.

**திரு. மீ. கலியாணசுந்தரம்:** ஒரு குறிப்பிட்ட சம்பவத்தில் சில தீர்ப்புக்கள் அளிக்கப்பட்டாலும், அது விதிகளாக மாற்றப் படும். சாதாரணமாக கோர்ட்டுகளில் அளிக்கப்படும் தீர்ப்புக்கள் பின்னால் சட்டமாகவே வருகின்றன. ஆகவே இதன்மீது அளிக் கப்படும் தீர்ப்பும் நமக்கு எதிர்காலத்தில் விதிகளாக அமைகின் றன. அந்த அளவில் இது ஓர் முக்கியமான பிரச்னை. இதன்மீது மற்ற கட்சித் தலைவர்களும் தங்கள் அபிப்பிராயங்களை கூற வேண் டியது அவசியம் என்று கருதுகின்றேன். இவைகள் எல்லாம் சட்டசபை நடவடிக்கைகளில் இடம் பெறுகின்றனவாதலால் இதில் மற்றவர்களுக்கும் தங்கள் கருத்துக்களை தெரிவிக்க சந்தர்ப்பம் அளிக்கவேண்டும் என்று பணிவோடு கேட்டுக் கொள்கிறேன்.

MR. SPEAKER: If any hon. Member wishes to speak on this matter, he may speak now.

*திரு. கே. ஏ. மதியழகன்: கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் கொண்டு வந்திருக்கும் உரிமை பிரச்சனைமீது என்னுடைய கருத்துக்களை சொல்ல விரும்புகிறேன். . . .

**கனம் சபாநாயகர்:** சுருக்கமாக தெரிவிக்க வேண்டுகிறேன்.

திரு. கே. ஏ. மதியழகன்: மதுரை ஸர்க்யூட் ஹவுஸில் முதல் அமைச்சர் அவர்கள் வரிகள் விதிக்கப்படும் என்று பத்திரிகை நிருபர்களிடம் சொல்லியிருக்கும் முறை, உண்மையில் இந்த சபை உறுப்பினர்கள் அனைவருடையவும் இந்த சபையினுடையவும் உரிமையை பாதிக்கின்ற முறையில் தான் அமைந்திருக்கிறது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன், . . .

MR. SPEAKER: The hon. Member may please state the reasons as to how these matters constitute a breach of privilege of the House instead of making general observations as such general observations had already been made by hon. Member Sri M. Kalyanasundaram.

திரு. கே. ஏ. மதியழகன்: Yes. I am giving the reasons, Sir. நம்முடைய இந்த சபைக்கு இருக்கிற உரிமையை மீறி, மற்றவர்களுக்கு, இந்த சபைக்கு தெரிவிப்பதற்கு முன்பாக வே தெரிவிப்பது சரியல்ல. முதலாவதாக அறிந்து கொள்ளக் கூடிய உரிமையை பெற்றிருக்கிறது இந்த சபை. அப்படியிருக்க இந்த சபையில் நிதிநிலை அறிக்கை சமர்ப்பிக்கப்படுவதற்கு 13, 14 நாட்களுக்கு முன்பாகவே நம்முடைய முதலமைச்சர் அவர்கள் இதைப்பற்றி சொல்லியிருக்கிறார்கள். இன்னும் அதிகமாக 29-ம் தேதியன்று, நிலமில்லாதவர்களுக்கு எந்தவிதமான வரியும் கிடை யாது, வீடில்லாதவர்களுக்கு வரி கிடையாது என்று சொல்லி யிருக்கிறார்கள். இதுவே பட்ஜெட் லீக்கேஜ் என்று சொல்லலாம். இந்த அளவில் பத்திரிகை நிருபர்களுக்கு அவர்கள் கூறியது இந்த சபையின் உரிமையை பாதிப்பதாகவே அமைந்திருக்கிறது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். . . .

[3rd July 1962

MR. SPEAKER : I would like to point out to the hon. Member that there is no reference to these matters in the notice that I have received from the hon. Member Sri M. Kalyanasundaram.

**திரு. ஜே. மாதா கவுடர் :** ஸார், 'ஆன் எ பாயிண்ட் ஆஃப் ஆர்டர்'. இதில் உரிமை பிரச்னை இருக்கின்றதா இல்லையா என்று கனம் சபாநாயகர் தீர்ப்பளிப்பதற்கு முன்பாகவே இது "ப்ரீச் ஆஃப் ப்ரிவிலேஜ்" தான் என்று சொல்வது சரிதானா என்று அறிய விரும்புகிறேன்.

* **கனம் திரு. கு. காமராஜ் :** கனம் சபாநாயகர் அவர்களே, இதில் எந்தவிதமான உரிமைப் பிரச்னை கிளப்பப்பட்டிருக்கிறது என்று தெரியவில்லை. சரியாக புரிந்து கொள்ளாமல் தான் இதை கொடுத்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். காரணம் என்னவென்று கேட்டால், மதுரையில் பத்திரிகை நிருபர்களை சந்தித்தபோது அவர்கள் "புதிய வரிகள் உண்டா" என்று கேட்டதற்கு, 'புதிய வரிகள் வரலாம்' என்று சொன்னது உண்மைதான். புதிய வரிகள் வரும் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம்தான். தெரியாத புதிய விஷயம் ஒன்றுமில்லை. இங்கு தான் இவற்றை எல்லாம் தெரிவிக்கவேண்டும் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்னார்கள். ஆனால் இவர்கள் மட்டும் நிதிநிலை அறிக்கை படித்து முடித்தவுடன் பத்திரிகை நிருபர்களிடம் தங்கள் கருத்தை சொல்லிவிடுகிறார்கள். . . (குறுக்கீடு) இது சரியா என்பதும் சிந்திக்கவேண்டிய விஷயம். மேலும் நான் கூறியதில் இன்னின்ன இனங்களுக்கு வரி வரும் என்று சொன்னால் தான் பட்ஜெட் வருவதற்கு முன்னால் விஷயத்தை வெளியிட்டுவிட்டேன் என்று சொல்ல முடியும். அப்படி எதுவும் இதில் வரவில்லை. ஆகவே இதில் உரிமைப் பிரச்னை எழுப்புவதற்கு நியாயமே இல்லை என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

* **திரு. இரா. நெடுஞ்செழியன் :** கனம் அவைத் தலைவர் அவர்களே. நிதிநிலை அறிக்கையில் வரி இருக்கிறதா இல்லையா என்கிற விஷயங்களை எல்லாம் வெளியிடாமல் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு அரசாங்கத்திற்கு இருக்கிறது. நிதிநிலை வெளியிடுகின்ற பொழுதுதான் வரி இருக்கிறதா இல்லையா, துண்டு விழுகின்ற நிதிநிலை அறிக்கையா, மிச்சம் வருகின்ற நிதிநிலை அறிக்கையா என்று அறிந்து கொள்ளவேண்டும், அதற்கு முன்பாக இவ்விபரங்களை ரகசியமாக வைத்துக்கொள்ளவேண்டும் என்கிற மரபினை எல்லா பாராளுமன்றங்களும் கடைப்பிடித்து வருகின்றன. அதற்கு முன்பாக வரி வரும் என்று சொல்வது ரகசியத்தை வெளியிட்டதாக அமையும். அந்த முறையில் முதலமைச்சர் அவர்கள் குறிப்பிட்டது உரிமைப் பிரச்சனைக்கு உட்பட்டதாகவே அமையும். எதிர் கட்சியினர் நிதிநிலை அறிக்கைபற்றி கருத்து தெரிவித்தது, நிதி நிலை அறிக்கை வெளியிட்ட பின்புதானே தவிர அதற்கு முன்பாக அல்ல என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

3rd July 1962]

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த உரிமைப் பிரச்னையைக் கிளப்பிய கனம் அங்கத்தினா கலியாணசுந்தரம் அவர்கள் வேண்டியதைப் பேசி விட்டார்கள். அவர்களுடைய நோக்கம் நிறைவேறி விட்டது என்றே கருதலாம். இது உரிமைப் பிரச்னைக்கு உரியதா, இல்லையா என்று சொல்ல வேண்டியது. நான் மேலும் ஒரு உரிமைப் பிரச்னையைக் கிளப்புவதாகவும் இல்லை. கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் இந்தப் பிரச்னையைக் கிளப்பி இருக்கிறார்கள். அவர்களுடைய போக்கைப் பற்றி நான் குறிப்பிடலாம் என்று நினைத்தேன். அதற்குப் பிறகு எதிர்க்கட்சித் தலைவர் அவர்களும், அவரைச் சார்ந்த திரு. மதியழகன் அவர்களும் கூட இந்தப் பிரச்னையில் கலந்துகொண்டதால் நான் வேறு சில விஷயங்களை குறிப்பிட விரும்புகிறேன் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். முதல் அமைச்சர் அவர்கள் இந்த வரியைப் பற்றிச் சொன்ன விஷயம் இருக்கிறதே, அதைப்பற்றி நினைக்கும்போது ஒருபக்கம் வரியே கூடாது என்று கிளர்ச்சி செய்யப்பட்டு ஆட்சேபிக்கப்படுகிறது. இதற்கு சில சட்டமன்ற உறுப்பினர்களும் சேர்ந்துகொண்டு வரி வரப்போகிறது, வரி வரப்போகிறது, ஆகவே இப்படிப்பட்ட வரிகள் கூடாது என்று ஒரு கிளர்ச்சி, அதற்கு ஆர்ப்பாட்டம் என்று சொல்லப்படுகிறது, அதற்கு என்ன அர்த்தமோ தெரியாது, ஆர்ப்பாட்டம் என்று பத்திரிகையில் போடப்படுகிறது. இவ்வாறு வரி போடுவது தப்பு, தப்பு என்று சொல்லும்போது, அதற்குப் பதில் சொல்லக்கூடிய வகையில் முதல் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அப்படி என்ன சொல்லிவிட்டார்கள்? நிலம் இல்லாதவர்களுக்கு வரி கிடையாது என்று சொல்லியிருக்கிறார்கள்? நிலம் இல்லாதவர்கள் எப்படி வரி கொடுக்க முடியும்? இது ஒரு ரகசியமா? நிலம் சொந்தம் இல்லாதவர்களுக்கு வரி கிடையாது என்று சொன்னது, ரகசியமே இல்லை. இது மாத்திரமல்ல. சென்ற இன்டரீம் பட்ஜட்டை நான் மேல் சபையில் சமர்ப்பித்தேன். அப்போது நான் பேசியது எனக்கு நினைவு இருக்கிறது. கனம் அங்கத்தினர்களுக்கும் நினைவு இருக்குமென்று நம்புகிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைச் சரிகட்ட 35 கோடி ரூபாய் குறைவாக இருக்கிறது. அதைப் புதிய வகையிலே சரிக்கட்ட வேண்டுமென்று சட்ட மன்றத்திலே நான் தெரிவித்திருக்கிறேன். இதைப் பொதுவாக வரி போடுவார்கள் என்று சொல்லியிருப்பதில் தவறு ஒன்றுமில்லை. மற்றொரு இடத்திலே அதாவது மகாராஷ்டிராவில் மசோதாவையே பட்ஜட்டுக்கு முன்னால் சமர்ப்பித்து விட்டார்கள். இதன் பேரில் உரிமைப் பிரச்னை கிளப்பப்பட்டது. அதற்கு இதிலே உரிமை ஒன்றுமில்லை என்று சொன்னார்கள். அப்படி ஒன்றும் நாம் பட்ஜட்டுக்கு முன்னால் மசோதாவைக் கொண்டு வரவில்லை. வரி போடலாம் என்றுதான் தெரிவிக்கப்பட்டது. சட்டமன்றத்திலே நான் 30-ம் தேதி காலை 11 மணிக்கு மேலே பட்ஜட்டை சமர்ப்பிப்பதற்கு முன்பே வெளியிலே இருந்து கொண்டு கூட்டம் வரி போடக்கூடாது என்று ஆட்சேபணை, ஆர்ப்

**[கனம் திரு. எம். பக்தவத்சலம்]** [3rd July 1962

பாட்டம் பண்ணுவது என்றால், அதிலும் இந்த சட்ட மன்றத்திலே அங்கம் வகிக்கும் உறுப்பினர்களும் சேர்ந்துகொண்டு ஆர்ப்பாட்டம் செய்வது என்றால் அது தவறில்லையா இந்த சட்டமன்றத்திலே இல்லாதவர்களுக்கு அப்படிச் செய்ய உரிமை இருக்கலாம். அவர்களுக்கு வேறு வகை இல்லை. அதைக்கூட அவர்கள் பெடிஷன் மூலம் கொடுக்கலாம். இது அவர்களுக்கு தெரிந்திருக்கும். 3,000, 4,000 பேர்கள் சேர்ந்து கையெழுத்திட்டு பெடிஷன் கொடுக்கலாம். அப்போதுகூட இந்த சபையிலே முன்பிருந்த சபா நாயகர் அவர்கள், அவ்வாறு கையெழுத்திட்டு பெடிஷன் கொடுக்கும்போது, இந்த மன்றத்தைச் சேர்ந்த அங்கத்தினர்கள் யாரும் கையெழுத்து போடக்கூடாது; அவர்கள் வேண்டுமானால் பெடிஷனை வாங்கிக் கொடுக்கலாம் என்று சொல்லி இருக்கிறார்கள். ஆனால் இப்போது இவர்கள் கூட்டத்தை கோட்டை முன்பு வைத்துக்கொண்டு, அது சட்டமன்றம் கூடும் நாளன்று சட்ட மன்ற அலுவலகத்திற்கு எதிரே நின்று கொண்டு வரி போடக் கூடாது என்று சொல்வது, உரிமைப் பிரச்சனையாகாதா? இது ஒரு உரிமைப் பிரச்னையாகக் கருதப்பட்டாலும், நான் கிளப்பப் போவதில்லை.

அதேமாதிரி மற்றொன்று. இப்போது முதல் மந்திரி அவர்கள் கூட குறிப்பிட்டார்கள். 6 நாட்களுக்கு நாம் இந்த மன்றத்திலே பொது விவாதம் செய்து, பின்னல் டிமாண்ட்களை எடுத்துக் கொள்ளப் போகிறோம். இப்படி 6 நாட்களுக்கு இதன்மேல் விவாதம் செய்ய வேண்டுமென்பதை நாங்களும் மதிக்கிறோம். எதிர்க் கட்சியில் உள்ளவர்களும் மதிக்கிறார்கள். அரசாங்கமும் மதிக்கின்றது. ஆனால் அப்படி விவாதம் செய்து, ஒரு முடிவெடுப்பதற்கு முன்னலேயே, இதைப்பற்றி அங்கத்தினர்கள் பத்திரிகைக்காரர்களிடம் இந்த பட்ஜட்டிலே ஒன்றுமில்லை. இது ஏழைகளை மிகவும் பாதிக்கும் என்று குறிப்பிடுவது உரிமைப் பிரச்சனைக்கு உரியதாகாதா? அப்போது எதற்கு இந்தப் பொது விவாதம்? அதையும் நான் இப்போது கிளப்பவில்லை. பத்திரிகைக்காரர்கள் கேட்கலாம். நான் பட்ஜட் உரையைப் படித்தவுடனேயே, ஒரு நிமிஷம்கூட ஆகவில்லை, என்னைச் சபாநாயகர் அவர்கள் அழைத்தார்கள். அங்கு போவதற்குள்ளாகவே, எதிர்க்கட்சி உறுப்பினர்கள் வெளியே சென்று, இதிலே ஒன்றுமில்லை இது ஏழைகளை மிகவும் பாதிக்கும் என்று சொல்வது நல்லதா? இதை கனம் அங்கத்தினர்கள் சிந்திக்க வேண்டும். அதைகூட நான் சீரியசாக எடுத்துக்கொள்ளவில்லை. அதன்மேல் உரிமைப் பிரச்னையும் கிளப்பப் போவதில்லை.

மற்றொன்று. ஏதாவது அரசாங்கத்தின் கொள்கை, அரசாங்கத்தின் திட்டம் இருந்தால், அதை இந்த சட்ட மன்றத்திலே பிரரேபிக்கப்பட்டு, தெரிவிக்கப்பட்ட பிறகு சொல்ல வேண்டுமென்று சொன்னார்கள். கனம் உறுப்பினர் அவர்கள் தந்த ஸ்டேட்மெண்டிலே" **"when the Legislature is in Session"—**

3rd July 1962] *[கனம் திரு. எம். பக்தவத்சலம்]*

'இன் செஷன்' அதாவது சட்டமன்றம் இப்போது 30-ம் தேதியி லிருந்து தொடங்கியதைக் கொள்ளாமல், முன்பு தொடங்கியதை வைத்துக்கொண்டு அந்த அர்த்தத்தில் சொல்லியிருக்கிருர்கள் என்று கருதுகிறேன். அப்படி செஷன் இருக்கிறதென்று சொன்னல், சட்டசபை கூடி இருக்கிறது. அப்போது சட்டசபை கூடி ஒருமாதமாயிற்று. அதாவது ஜுன் 8-ம் தேதி கல்விக் கொள்கையைப்பற்றி தெரிவித்ததாக சொன்னர்கள். ஜுன் மாதம் 8-ம் தேதி தெரிவிக்க வேண்டியிருந்தது. அந்தக் கல்வி டிமான்டின் அவசரம் உங்களுக்குத் தெரியாது. அரசாங்கத்திற் குத்தான் அதன் அவசரம் தெரியும். இதை அவர்கள் குறிப்பிட்ட போது பிரிட்டிஷ் பாராளுமன்றத்தைப் பின்பற்றவில்லை என்று சொன்னர்கள். லார்ட் ஆட்லி அவர்கள் பிரிட்டிஷ் பிரதம மந்திரி யாக இருந்தபோது, இம்மாதிரியான ஒரு பிரச்னை அங்கிருந்த ஒரு அங்கத்தினரால் பிரிட்டிஷ் பாராளுமன்றத்திலே கிளப்பப் பட்டு, அதற்கு இம்மாதிரியான ஒரு ஆட்சேபனை தெரிவிக்கப்பட் டது. ஆனல், அதற்கு ஆட்லி அவர்கள் விடை அளிக்கும்பொழுது எந்த இடத்திலே, எந்தச் சந்தர்ப்பத்திலே எதைச் சொல்ல வேண்டுமென்ற பொறுப்பை அரசாங்கத்தினிடம் விட்டு விட வேண்டும் என்று சொன்னர்கள். அதை பாராளுமன்றமும் ஒப்புக் கொண்டது. அதைப்போல், இதை அரசாங்கத்தின் முடிவுக்கு விட்டுவிட வேண்டும். ஆகவே, இது பாராளும் மன்றத்தைப் பின்பற்றிச் செய்யவில்லை என்றும் சொல்ல முடியாது. அந்த அளவிலேதான் நான் இங்கும் பதில் அளிக்கிறேன் என்று சொல்லி முடித்துக் கொள்கிறேன். இதிலே எவ்வித உரிமைப் பிரச்னையும் கிடையாது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. மீ. கலியாணசுந்தரம்:** 'ஆன் எ பாயின்ட் ஆப் பர்சனல் எக்ஸ்பளனேஷன், ஸார், கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் என்னுடைய பிரரேபணையைப் பற்றிச் சொல்லி இருந்தால் சரியாக இருக்கும். ஆனல், பத்திரிகையில் சொன்ன விஷயங்களை வைத்துக்கொண்டு, இந்தச் சபையின் உரிமை பாதிக்கப்படாது என்ற அர்த்தத்தில் கூறுகிருர்கள். நான் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். உரிமைப் பிரரேபணை கொண்டு வந்திருக்கும்பொழுது ஏதோ போகிற போக்கிலே சொல்லிவிட்டுச் செல்லக்கூடாது. எனக்குத் தோன்றியதைப் பிரரேபணையாக எடுத்துச் சொல்லி இருக்கிறேன். கனம் அமைச்சர் அவர்களும் வேண்டுமானல், இதைப்போல் தீர்மானமாக ஒரு உரிமைப் பிரரே பணையைக் கொண்டு வரட்டும். என்னுடைய உரிமைப் பிரரே பணை அநுமதிக்கப்படலாம், அல்லது நிராகரிக்கப்படலாம். அது வேறு விஷயம். நான் கூறியது அவர்களுக்கு குறுகுறுப் பாக இருக்கிறது என்பதற்காக, இப்படி போகிற போக்கிலே பதில் சொல்லக்கூடாது. எங்களுடைய பிரதிபலிப்பை நாங்கள் பத்திரி கையிலே தெரிவித்திருக்கிறோம். இந்த உரிமையைப் பறிப்பதற்கு இவர்களுக்கோ, இந்த அரசியல் சட்டத்திற்கோ அதிகாரம் கிடை யாது, என் இந்தச் சபைக்குகூட உரிமை கிடையாது என்பதை பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி:** 'ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர், ஸார்.' கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் சொல்லுகின்றபோது எதிர்க்கட்சி அங்கத்தினர்கள்கூட வெளியே நின்றுகொண்டு ஆர்ப்பாட்டங்கள் செய்தார்கள் என்று சொன்னார்கள். கனம் அமைச்சர் அவர்களுக்கு, நாங்கள் வரி கொடுக்கக் கூடியவர்கள்தான் என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

MR. SPEAKER: The hon. Member cannot make a speech. Let him say what exactly the point of order is.

* **திரு. இரா. நெடுஞ்செழியன்:** மதிப்பிற்குரிய அவைத்தலைவர் அவர்களே, கருத்துக்கள் பரிமாறப்படுகின்ற அளவிலே பொதுமக்களும், சட்டமன்ற உறுப்பினர்களும் பொதுக்கூட்டத்தின் மூலமாகவும், ஆர்ப்பாட்டத்தின் மூலமாகவும் தீர்மானங்களின் மூலமாகவும் பேரணியின்மூலமாகவும் தங்களது ஆட்சேபணைகளை எடுத்து வைப்பதிலே எவ்வித உரிமைப் பிரச்னையோ, தவறோ இருப்பதாக நான் கருதவில்லை. பொதுக் கூட்டங்கள் மூலமாக பொதுமக்கள் கருத்துக்களை பரிமாறிக் கொள்கிறார்கள். ஆனால், பொறுப்புள்ள அதிலும் இத்தகைய ஆட்சிப் பொறுப்பிலுள்ள அமைச்சர்கள் நிதி நிலை அறிக்கை வெளியே வரக்கூடிய வரையில் அதை முன்கூட்டி அறிவிக்காமல் ரகசியமாகப் பேணி காப்பாற்றுவது ஒரு மரபாக இருந்து வந்திருக்கிறது. அப்படிப்பட்ட ஒரு நிதிநிலை அறிக்கையானது வெளியானவுடன், அதைப்பற்றிச் செய்தித்தாள் நிருபர்கள் எதிர்க்கட்சியைச் சார்ந்தவர்களானாலும், ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களானாலும் அவர்களை கண்டு கருத்துரை கேட்பது என்பது, கூடிப் பேசுவது நீண்ட ஒரு பெரும் மரபாக இருந்து வருகிறது. இதன் மூலம் முதல் முதலாக இந்தச் சட்ட மன்றத்தில் வீற்றிருக்கின்ற எதிர்க்கட்சியாளர்கள் செய்தியாளர்களுக்கு இந்தக் கருத்துக்களை வழங்கிவிடவில்லை. நீண்ட நெடுங்காலமாகவே எந்த நிதி நிலை அறிக்கை பாராளுமன்றத்தில் வைக்கப்பட்டாலும், இந்த சட்ட மன்றத்தில் வைக்கப்பட்டாலும், உடனடியாகப் பல்வேறு அரசியல் தலைவர்களையும், பொருளாதார நிபுணர்களையும் பத்திரிகை ஆசிரியர்கள் கருத்துக்கள் கேட்பதும், அவர்கள் தங்கள் கருத்துக்களை வழங்குவதும் காப்பாற்றப்பட்டிருக்கக்கூடிய மரபாக இருந்துவருகிறது. அந்த மரபை ஒட்டித்தான் நாங்களும் எங்களுடைய கருத்துக்களை நிதிநிலை அறிக்கை இந்த மன்றத்தில் வைக்கப்பட்டவுடன் எடுத்துவைத்தோம். வரக்கூடிய நிதிநிலை அறிக்கையில் வரி இருக்குமா, இருக்காதா என்ற ரகசியத்தை வெளியிடாமல் இருப்பது தான் மரபு, அந்த மரபு புறக்கணிக்கப்பட்டது என்பதைச் சுட்டிக்காட்டத்தான் நாங்கள் விரும்புகிறோம். நாங்கள் எங்களுடைய கருத்துக்களை எடுத்துச் சொன்னது எந்த மரபுக்கும் மாறுபட்ட இயல்பு இல்லை என்பதை பணிவோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன். பொதுக் கூட்டத்தின் மூலம் கருத்துக்களை பொதுமக்களோடு நின்று

வழங்குவதுபோல மாநாடுகளில் வழங்குவது போல, தீர்மானங்களாக வழங்குவது போல, எங்களுடைய கருத்துக்களை பேரணியின் மூலம் வழங்கினோமே தவிர, எந்த அதிகாரத்தின் அடிப்படையிலும் அதைச் செய்யவில்லை. அது உரிமைக்கு மாறானதுமல்ல என்பதையும் நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

* **கனம் திரு. கு. காமராஜ்:** கனம் சபாநாயகர் அவர்களே, நிதிநிலைமையைப்பற்றி வரவு செலவுத் திட்டம் வெளியிடுவதற்கு முன்னால் சொல்லக்கூடாது என்ற மரபு எதற்காக ஏற்பட்டது என்றால், வரி ஏதாவது ஒரு பொருளின்மீது போட்டால் அதை பதுக்கிவிடுவார்கள், லாபம் சம்பாதித்துவிடுவார்கள் என்பதற்காகத்தான். இந்தந்த அயிட்டத்திற்கு வரி போடப்படுகிறது, வரி போடப்படவில்லை என்பது தான் வெளியே முன்கூட்டியே தெரியக்கூடாது என்பது மரபாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. நான் சொல்லக்கூடியது என்னவென்றால், அவர்கள் கேட்ட கேள்வி புதிய வரி வருமா என்பதுதான். வரலாம் என்று சொன்னேன். ஏனென்றால், புதியவரி வரும் என்பது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நாம் ஏற்கெனவே ஏற்றுக்கொண்ட காலத்தில் முடிவு செய்யப்பட்ட விஷயம். ஒளிவு மறைவான விஷயம் அல்ல. நேற்று நண்பர் கருணாநிதி அவர்கள் நிதி விஷயத்தைப்பற்றிச் சொன்னார். 'எனக்கு முன் கூட்டியே தெரியும், 7 கோடி ரூபாய்க்கு வரி போடப்படும் என்று நாங்கள் விளம்பரம் செய்தோம் என்று சொன்னார்கள். அவர்களுக்கு எப்படித் தெரிகிறது, நாம் ஏற்கெனவே ஏற்றுக்கொள்ளாவிட்டால், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நாம் ஏற்றுக்கொண்டிருக்காவிட்டால், அவர்களுக்கு எப்படி தெரிந்திருக்க முடியும்? ஆகையினால், வரி போடப்படும் என்ற விஷயம் பகிரங்கமான விஷயம். இந்தச் சபை மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தை ஏற்றுக்கொண்ட காலத்திலேயே தெரிந்திருக்கக்கூடிய விஷயம். ஏனென்றால், அதிக திட்டங்களைப் போட்டு அபிவிருத்தி செய்யக்கூடிய காலத்தில் வரி விதிக்காமல் முடியாது என்பது இந்தச் சபைக்குத் தெரியும். ஆகையினால், இது ஒழுங்குப் பிரச்னைக்குத் தகுந்தது அல்ல என்பது என்னுடைய அபிப்பிராயம்.

**கனம் சபாநாயகர்:** கனம் அங்கத்தினர் கலியாணசுந்தரம் அவர்களால் எடுத்துக்கொள்ளப்பட்ட இரண்டு விஷயங்களையும் கவனித்தால், முதலாவது விஷயம் முதல் அமைச்சர் அவர்கள் மதுரையில் சொன்ன வார்த்தைகள் ஆகும். அதுபற்றி 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பத்திரிகையில் வந்த செய்தியை என்னிடம் கொடுத்திருக்கிறார்கள்.

'There would be new taxation proposals in the Budget to be presented at the next Session of the Legislature.'

என்னுடைய அபிப்பிராயத்தில் "வரி வரலாம் அல்லது வரும்" என்று சொன்னதை மட்டும் வைத்துக்கொண்டு உரிமை பிரச்னை கொண்டுவர இயலாது என்றுதான் நான் முடிவு செய்கிறேன்.

கனம் முதல் அமைச்சர் வார்த்தைகளில் 'பட்ஜெட் டிஸ்க்ளோஷர்' ஒன்றுமில்லை, பட்ஜெட் ரகசியங்கள் ஒன்றும் வெளியிடப்படவில்லை. ஆகவே, இந்தப் பிரச்னையைப்பற்றி என் முடிவைக்கூறிவிட்டேன்.

அடுத்து, கல்வியைப் பற்றி பெரிய ஒரு அறிக்கை வந்திருக்கிறது. அசெம்பிளி கூட்டம் நடந்துகொண்டிருக்கும்பொழுது அந்த அறிக்கை வெளி வந்திருந்தால், ஒரு வேளை உரிமைப் பிரச்னை ஆகலாம். ஆனல், அது பல நாட்களுக்கு முன்பே வெளியிடப்பட்டிருக்கிறது. அதிலும் அந்த அறிக்கையை மந்திரி அவர்கள் வெளியிட்டதாகவும் கூறப்படவில்லை. எங்கேயோ 'ஸ்டாப் ரிப்போர்டர்' ஒருவர் கவர்ன்மெண்ட் அதிகாரி ஒருவரிடம் இருந்து தகவல்களைச் சேகரித்து அறிக்கையை அனுப்பியிருக்க வேண்டும். அது எப்படியிருந்தபோதிலும், எந்த நேரத்தில் எது அவசியம் என்று முடிவு செய்யவேண்டிய விஷயம் சர்க்காரைப் பொருத்ததே. ஆகையால், இந்த இரண்டாவது விஷயமும் இந்தச் சபையினுடைய உரிமையைப் பாதிக்கக்கூடியது என்று நான் கருதவில்லை. ஆகவே, இதையும் உரிமைப் பிரச்னை ஆகாது என்று நான் தள்ளுபடி செய்கிறேன்.

### III.—CALLING ATTENTION TO THE DIFFICULTIES CAUSED BY NEW ORDERS UNDER THE PALAR BASIN RULES

MR. SPEAKER: The hon. Member, Sri M. Kalyanasundaram will now call the attention of the Hon. Minister for Works to an urgent matter of public importance, viz., difficulties experienced by ryots in North Arcot district consequent upon the new orders under the Palar Basin Rules.

**திரு. மீ. கலியாணசுந்தரம்:** வட ஆற்காடு ஜில்லாவில் பாலாற்றங்கரையில் இரு புறங்களிலும் இருக்கக்கூடிய ரயத்துக்களிடமிருந்து எனக்கு சில புகார்கள் வந்திருக்கின்றன. பாலாற்றங்கரையில் கிணறு வெட்டி, பம்பு செட்டுகள் வைத்து தண்ணீர் இறைத்து . . . . .

**MR. SPEAKER: The hon. Member should only read the notice.**

**திரு. மீ. கலியாணசுந்தரம்:** தமிழிலே சொல்லிவிடுகிறேன். என்னுடைய 'நோட்டீஸ்' ஆங்கிலத்தில் இருக்கிறது.

**கனம் சபாநாயகர்:** தமிழிலே சொல்லிவிடுங்கள். பிரசங்கம் பண்ணக்கூடாது. **This should not become a precedent for others to make a statement.**

**திரு. மீ. கலியாணசுந்தரம்:** நான் பிரசங்கம் பண்ணவில்லை. பாலாற்றங்கரையில் கிணறு வெட்டி பம்பு செட்டுகள் வைப்பது சம்பந்தமாக உள்ள விதிகளில் சமீபகாலத்தில் அரசாங்கம் செய்திருக்கக்கூடிய மாறுதல்கள் அந்த ஜில்லாவில் இருக்கக்கூடிய விவசாயிகளை பாதிக்கக் கூடிய காரணத்தினல், அந்த மாறுதல்களை

3rd July 1962] [திரு. மீ. கலியாணசுந்தரம்]

ரத்து செய்து, வழக்கம்போல அவர்கள் கிணறு வெட்டுவதற்கும், பம்பு செட்டுகள் வைத்துக்கொள்ளுவதற்கும் அனுமதி கொடுக்க வேண்டும் என்ற விஷயத்தை கனம் அமைச்சர் கவனத்திற்கு கொண்டுவருகிறேன். இனி இதற்கு பதில் சொல்லும்படியாகக் கனம் அமைச்சரவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI V. RAMAIAH : Mr. Speaker, Sir, as early as 1931, it was recognised that the Palar was overburdened with irrigation beyond its capacity. In June 1931, the Government therefore, accepting the recommendation of the Palar Irrigation Committee directed that no new irrigation works should be construsted in the Palar basin, that no extension of existing works should be undertaken with the object of increasing the amount of water impounded or drawn off, and that no dry land should be registered as wet and no ' single ' crop wet land as ' double ' crop wet. These directions are called the Palar Basin Rules. In effect there was a total prohibition regarding sinking of wells in the Palar basin.

During the Grow More Food drive in the late forties, the Palar Basin Rules were relaxed in favour of sinking of new wells or tube wells for irrigation of ' dry ' lands in the basin and extension of irrigation to dry lands for an irrigation crop after a favourable north-east monsoon. With a view to safeguard the interest of the existing ayacut, it was considered necessary that the new wells must be 2,000 feet away from the spring heads of channels and that the Public Works Department should be consulted for sinking of new wells near water resources. This relaxation was in force up to April 1961.

On receipt of a number of representations, the question of further relaxation of the Palar Basin Rules was examined and orders were issued in May 1961, relaxing the rules further. The Member obviously refers to these orders. According to these orders, new wells may be permitted for irrigating the lands in the Palar basin, provided such wells are two furlongs away from the spring heads of channels and one furlong away from the spring channel. The crops grown should, however, correspond to the classification of the land as registered and the horse-power of each pumpset should not exceed five. Permission to sink wells or instal pumpsets in accordance with the above orders is to be given by the Collector in consultation with the Executive Engineer, Public Works Department, who will examine each case and decide on its merits.

Actually after the issue of the above orders, a number of fresh applications are being received for the issue of clearance certificates for the installation of pumpsets and they are issued by the Collector expeditiously. It will be observed that the Government's policy has been one of liberalising the Palar Basin Rules and the latest orders are in furtherance of it. These orders seek to ease the difficulties of the ryots and there has been no shortage in food production. The statistics showing pumpsets that were supplied with electricity during the past four years in North Arcot district

do not prove the contention of the hon. Member that shortage in food production is also due to non-availability of connection for pumpsets. The number of pumpsets supplied with electricity for the period from May 1961 to April 1962 after the issue of the latest orders, is the highest, viz., 4,160 as against the averages of about 3,600 during the last three years.

There have therefore been no difficulties for the ryots consequent on the issue of the new orders and food production has not suffered; on the contrary it is bound to increase.

IV.—REVISED BUDGET FOR 1962-63—GENERAL DISCUSSION—*cont.*

9-30 a.m. * SRI C. CHIRANJEEVULU NAIDU: Mr. Speaker, Sir, every year when the budget is presented to this House, members of this House including those in the Opposition and the public outside get a chance to voice their views on the Government's performance and also the policies pursued by Government in respect of matters like financial, economical and fiscal. Very often the Finance Minister, while presenting the budget, is criticised. This is not surprising if we criticise, for the tax gatherer who collects the tax will seldom be popular with the tax payer. The taxes that are being collected vary from village to urban areas.

Before considering the budget proposals, let us consider certain reviews which have been made in respect of agriculture, medical, education and co-operation. Coming to the question of agriculture, in the Second Five-Year Plan it is stated that food production to the tune of 53 lakhs of tons have been achieved and for the Third Plan, 70 lakhs tons of foodgrains has been fixed as the target to be achieved. With this aim in view, Government have taken responsibility to supply fertilizers, agricultural implements, improved seeds, etc., to the ryots. But I would like to point out that in the recent supply of agricultural implements and fertilizers, the position was not commendable. The fertilisers do not reach the agriculturists in time. It is supplied out of season and not during the season. It only goes to enrich private dealers. The co-operative societies are not given a chance to have the supply and distribute the same in time, viz., during agricultural operations. Every year the agricultural implements supplied to the villages vary. I do not think even the minimum implements required for agricultural operations are available freely and the agriculturists are not in a position to get the supply of implements they require and that too in the right time. The implements now supplied are not sufficient. Some more agricultural implements must be made available to them for more food production.

Regarding manures, it is said that production of rural compost had increased by nearly 12.75 lakhs tons in 1961-62. Taking into consideration the targets fixed for the Second Five-Year Plan and if the achievements shown thereunder regarding the digging of compost pits are to be believed to be true, I am afraid the villages that are covered by pits must be definitely in the pit and the members who are asked to believe this also will be in the pit.

3rd July 1962] [Sri C. Chiranjeevulu Naidu]

This is not a happy state of affairs. Regarding the organic manures we see here that certain of the green manures like 'indigo' (which was widely grown in rural parts) had now disappeared. The revival of production of 'indigo' and its export to foreign countries will earn us the much needed foreign exchange, and manure for the fields. So Government may consider this also.

Regarding co-operative farming, it has been told there has been much headway. I am not one who would agree to co-operative farming societies being formed out of compulsion. Voluntary co-operative farming societies and service co-operatives may be encouraged, but not co-operative farming societies out of compulsion. Co-operative forming societies formed in the matter have not shown good results in other countries. Such sort of compulsion is not in any way conducive for more food production.

Then I come to Education. It is a subject for which sizable amount has been allotted in the budget. I welcome that gesture. But the standard of education obtaining in our school is very low when compared to 'Convent Education' or education obtaining in missionary schools. That is evident when we see the S.S.L.C. results and the results of other examinations, which are very poor. The standard of education in schools run by Corporation and other local bodies should be improved. For this purpose, eminent educationists and wise thinking personages may be given an opportunity to express their views to gear up the standard of education.

Then we come to taxation proposals. We have now fixed the ceiling for land. The Hon. Minister has pointed out that the revenue accounts on wet lands have not been revised for thirty years. It may be correct in respect of land revenue. But the land tax, wet assessment, I mean the cess relating to revenue account which has been paid to Government from time immemorial, had been raised from 5 nP. to 45 nP. all these years. Due to democratic decentralization and with the panchayat unions coming up, they have been given the discretion and also the advantage to collect surcharge on the cess. Most of the panchayat unions have livied surcharge ranging from 25 nP. to 90 nP. The wet ayacutdar is paying 100 to 125 per cent more than his land revenue. With the addition now proposed, the percentage would come to 200 per cent what the wet ayacutdar has to pay. Such a thing is not very conducive for the proper development of agriculture.

Coming to the question of amenities, the villager is more hit than the man living in an urban area. For whatever amenity that is needed in a village, nothing is done without 'contribution'. For starting a secondary school, contribution is collected from villagers. For starting a primary health centre, five acres of land and Rs. 10,000 is required as contribution. Is this because the poor villagers do not have an association of their own to fight against the Government measures? Much is talked about land and its improvement but amenities for the villagers are not forthcoming quickly. Government is afraid of the urban population. Why

[Sri C. Chiranjeevulu Naidu] [3rd July 1962

should villages go uncared for when taxes are collected from villagers? Why should not they be provided with necessary facilities like the urban population? When the wet ayacutdar pays more than 100 per cent tax, as I have described above, it is but proper that he is provided with sufficient amenities.

Regarding the proposed tax on motor vehicles, I welcome this measure. Many of the bus operators are making good money. While on this subject, I might say that Government may consider the question of auctioning of bus routes. Government may get more money on this score. At the same time, Government should see to it that the present taxation measure is not taken advantage of by the bus operators to increase passenger fares.

The stamp duty has been increased to $9\frac{1}{2}$ per cent. This seems to be rather peculiar. Why should there be a fraction of a rupee, i.e., 8 annas? I would suggest that this may either be reduced to 9 per cent or increased to 10 per cent. That would facilitate the ryots to purchase stamp papers without any difficulty.

Coming to the aspect of wastage, there is room for improvement in that direction. There is leakage and wastage in Government spending. The Accountant-General every year submits the Audit Report. When irregularities are pointed out by the Public Accounts Committee and the Estimates Committee, the recommendations of the Committees are not given proper weightage and they are treated more as routine and inescapable formalities of parliamentary form of Government. However, serious the irregularities are, they are invariably treated in an unusually casual manner. So I request that wastage should be avoided and to get over this, certain changes should be made.

Besides, there is also tax evasion. Sales tax and certain other taxes that are due to the Government are not properly collected. There is lot of evasion. To avoid this, the check-posts should be tightened in all places and the sales tax should be properly collected. I am sure this will yield an additional revenue of five crores of rupees. I would request the Government to reconsider the wet assessment proposal and drop the same for the benefit of the agriculturists. With these observations I conclude my speech. Thank you, Sir.

* **திரு. மீ. அழகிரிசாமி:** கனம் சபாநாயகர் அவர்களே, 1962-63 வருடத்திற்கான நிதிநிலை அறிக்கையை கனம் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கிறார். அதை வரவேற்று என்னுடைய சில கருத்துக்களை கூற விரும்புகிறேன். மிகத் திறமையுடனும், தொலை நோக்கத்துடனும் இந்த அறிக்கையை கனம் அமைச்சர் அவர்கள் தயாரித்திருக்கிறார். ஆகவே அதற்கு அவரை நான் பாராட்டுகிறேன். பட்ஜட் அறிக்கையானது கொஞ்சம் நீண்டதாகத்தான் இருக்கிறது. இருந்தாலும்கூட கனம் அங்கத்தினர்கள் தெரிந்துகொள்ளவேண்டிய பல விஷயங்கள், அதிக புள்ளி விவரங்கள் முதலியவைகளுடன் தயாரிக்கப்பட்டு கொடுக்கப்பட்டிருக்கின்றன. திட்டமிட்ட பொருளாதாரத்தை நாம் ஏற்றுக்

3rd July 1962] [திரு. மீ. அழகிரிசாமி]

கொண்டிருக்கிறோம். அப்படி திட்டமிட்ட பொருளாதாரத்தை ஏற்றுக்கொண்டதன் காரணமாக நம்முடைய நாட்டினுடைய செல்வ வளர்ச்சியும் வேலை வாய்ப்புகளும் அதிகரித்திருக்கின்றன. ஆகவே இன்னும் வேலை வாய்ப்புகளும் செல்வ வளர்ச்சியும் அதிகரிக்க வேண்டுமானால் திட்டத்தினுடைய அளவையும் திட்டத்தினுடைய வேகத்தையும் அதிகரித்துக்கொண்டே போக வேண்டும். அவ்வாறு செய்வதன் மூலம் தான் நம் நாட்டினுடைய செல்வ வளத்தைப் பெருக்க முடியும் அதிகப்படியான வேலை இம்மாதிரி வாய்ப்புகளை தேடிக்கொள்ள முடியும். இப்படி வளர்ந்து கொண்டே இருக்கக்கூடிய நேரத்தில் திட்டத்தினுடைய அளவையும் வேகத்தையும் குறைக்கவேண்டுமென்று சொன்னால் அதனால் ஏற்படும் பலன்கள் மிகவும் விபரீதமாக இருக்கும் என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். வளர்ந்து கொண்டே இருக்கக்கூடிய மேலே நாடுகளிலெல்லாம் தொழில் துறைகளிலும் மற்றும் இதர துறைகளிலும் புதிய புதிய முறைகளைக் கையாண்டு வருவதால் அதன்மூலம் வேலைகள் எல்லாம் வெகுவேகமாக முன்னேறிக்கொண்டுவருகிறது. அதே நிலையில் நாமும் இந்த திட்டத்தினுடைய அளவையும் வேகத்தையும் அதிகரிக்க வேண்டும். அப்படி அதிகரிக்காமல் குறைத்தால் அதன் பயனாக நம்முடைய தொழிலானது மிகவும் பாதிக்கப்படும் என்பதை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இப்படி பல்வேறு திட்டங்களை நாம் நிறைவேற்றுவதன் காரணமாக நம்முடைய செலவும் அதிகரித்துக்கொண்டே இருக்கிறது. உதாரணமாகச் சொல்ல வேண்டுமானால் 1955-56-ம் வருடத்தில் நம்முடைய சர்க்காரானது கல்விக்காக கிட்டத்தட்ட 11 கோடி ரூபாய் செலவு செய்திருப்பதை நாம் காண்கிறோம். ஆனால் இந்த ஆண்டு அதாவது 1962-63-ம் ஆண்டில் கிட்டத்தட்ட ரூ. 25 கோடிக்கும் அதிகமான அளவுக்கு நாம் செலவு செய்யப்போவதாக திட்டமிட்டிருக்கிறோம். அப்படிப்பட்ட ஒரு நிலைமை இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. சமீப காலமாக அதாவது சுதந்தாம் வந்த பிறகு கிராமங்களில் இருக்கக்கூடிய மக்கள் எல்லோரும் தங்களுடைய குழந்தைகள் படிக்கவேண்டும் என்ற எண்ணம் கொண்டிருக்கிறார்கள். கிராமங்களிலுள்ள எல்லா குழந்தைகளும் படிக்க வேண்டுமென்ற எண்ணம் எல்லோருக்கும் ஏற்பட்டிருக்கிறது. அதன் காரணமாக சில குக்கிராமங்களில்கூட: உயர்நிலைப் பள்ளிகள் வேண்டும் என்றும் கேட்கிறார்கள். விதிக்கக்கூடிய நிபந்தனைகளையெல்லாம் பூர்த்தி செய்வதற்குக்கூட முன் வருகிறார்கள். அதன் காரணமாக கிராமப் புரங்களில் நூற்றுக்கணக்கான உயர்நிலைப் பள்ளிகளைத் திறக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இந்த ஆண்டிலும் சரி கடந்த ஆண்டிலும் சரி அதிகப்படியான உயர்நிலைப் பள்ளிகளை கிராமப்புரங்களில் திறக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட ஒரு அவசியமும் ஏற்பட்டிருக்கிறது. அதன் காரணமாக சர்க்காருடைய கல்விச் செலவும் அதிகரித்துக்கொண்டிருக்கிறது. அதனால்தான் ரூ. 25 கோடி வரையில் கல்விக்கு என்று ஒதுக்க வேண்டியதான நிலைமை ஏற்

பட்டிருக்கிறது. சில திட்டங்களை வேண்மானாலும் ஒத்திப் போட லாம். ஆனால் கல்விக்கு செலவழிப்பதை ஒத்திப் போட வேண்டும் என்று இந்த மன்றத்தில் யாரும் சொல்ல மாட்டார்கள். ஆனால் வேறு எந்தத் திட்டத்தை வேண்டுமானாலும் ஒத்திப் போடலாம். மாணவர்களுடைய படிப்பை கொஞ்ச காலத்திற்கு ஒத்திப் போட வேண்டும் என்று சொல்லக்கூடியவர்கள் இந்த மன்றத்தில் யாரும் இருக்கமாட்டார்கள் என்று நினைக்கிறேன். ஆகவே இம்மாதிரியான கல்வித்துறை மட்டுமல்ல இன்னும் மற்ற ஏனைய துறைகளிலும் அதாவது பொது சுகாதாரம், கூட்டுறவு, விவசாயம் இன்னும் பல துறைகளிலும் ஏற்படக்கூடிய செலவினங்கள் அதிகரித்துக்கொண்டே இருக்கின்றன. அதன் காரணமாக சர்க்காருடைய செலவும் அதிகமாகிக்கொண்டே இருக்கிறது. இப்பொழுது இருக்கக்கூடிய ஒரு நிலைமையில் நாம் பல்வேறு அபிவிருத்தி வேலைகளையும் எடுத்துக்கொண்டிருக்கிறோம். அதன் காரணமாக ஏற்படக்கூடிய செலவுகளை சரிக்கட்டுவதற்கு வரி போடவேண்டியதாக இருக்கிறது. அப்படி வரி போடவேண்டியது தவிர்க்க முடியாத அம்சமாகி விடுகிறது. அதன் காரணமாக கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கக்கூடிய பல வரி இனங்களை முழு மனதுடன் ஆதரிக்கிறேன்.

அடுத்தபடியாக இந்த மன்றத்தில் குறிப்பாக எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் பேசும்போது விலைவாசி உயர்வைப்பற்றி பேச தவறுவது கிடையாது. உயர்வின் காரணமாகத்தான் நீண்டகால மாக, பல ஆண்டு காலமாக கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த விவசாயி கள் இப்பொழுது கொஞ்சம் நல்ல சௌகரியமாக இருக்கிறார்கள் என்பது என்னுடைய அபிப்பிராயம். இப்பொழுதுதான் அவர் கள் நல்ல நிலைமையில் இருக்கிறார்கள். ஆகவே விலைவாசியைக் குறைக்கவேண்டும் என்று எந்த நடவடிக்கை எடுத்தாலும் அது விவசாயிகளை பாதிக்கும். அப்படி எடுக்கக்கூடிய நடவடிக்கை அவர்களுடைய வாழ்க்கைத்தரத்தைக் குறைக்கக்கூடிய நடவடிக் கையில் வந்து முடியும் என்பது என்னுடைய கருத்து. பல்வேறு தொழில்களுக்கான மூல பொருள்களை விவசாயிகள்தான் உற்பத்தி செய்கிறார்கள். விலைவாசியைக் குறைக்க நடவடிக்கை எடுத்துக் கொண்டால் உற்பத்தி செய்வதில் அவர்களுக்கு ஊக்கம் குறைந்து போகும். அவர்களுடைய உற்சாகம் குறைந்து போகும். தொழில் களை பாதிக்கக்கூடிய அளவில் கொண்டுபோய்விடும் என்பதை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்து என்னுடைய தொகுதியில் சில வேலைகளைச் செய்ய வேண்டும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். என் னுடைய தொகுதியில் நீண்ட நாட்களாகவே ஒரு திட்டத்தைப் பற்றி மக்கள் சர்க்காரிடம் எடுத்துக்கூறிக்கொண்டு வந்தார்கள். அதாவது மஞ்சளாறு என்று சொல்லக்கூடிய ஒரு திட்டத்தை மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் எடுத்து நடத்துவதாக சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு என்னுடைய மகிழ்ச்சியை என் சார்பாகவும் என்னுடைய தொகுதி மக்களின் சார்பாகவும் தெரி வித்துக்கொள்ளுகிறேன். அதற்கு என் நன்றியையும் தெரிவித் துக்கொள்ளுகிறேன்.

3rd July 1962] [திரு. மி. அழகிரிசாமி]

அடுத்து என்னுடைய தொகுதி கொடைக்கானல் மலைப் பிராந்திய தொகுதி. அங்கே பேரிசம் என்ற ஒரு ஏரி இருக்கிறது. அதிலிருந்து பெரியகுளம் நகரத்திற்கு குடி தண்ணீர் சப்ளை செய்யப்படுகிறது. இன்னும் பெரியகுளம் பக்கத்தில் இருக்கக்கூடிய பல கிராமங்களுக்கும் விவசாயத்திற்கு சப்ளை செய்யப்படுகிறது. பல வருடங்களில் அங்கு தண்ணீர் தட்டுப்பாடு ஏற்படுகிறது. அப்படி தட்டு ஏற்படாமல் இருக்க அந்த ஏரியின் கரையை உயர்த்துவதற்கு வாய்ப்பு இருக்கிறது. அப்படி அதன் கரையை உயர்த்தினுல் இன்னும் அதிகப்படியான தண்ணீரை அதில் நிரப்பி வைத்துக்கொண்டு தண்ணீர் தட்டு இல்லாமல் பார்த்துக்கொள்ளலாம். அதன் கரையை உயர்த்தினுல் நஞ்சை நிலங்களுக்கு தண்ணீர் கொடுப்பதற்கும் வாய்ப்பும் ஏற்படும், அதன் மூலம் வருடா வருடம் ஏற்படக்கூடிய தண்ணீர் தட்டு ஏற்படாமல் பார்த்துக்கொள்ளலாம் என்பதையும் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

கொடைக்கானல் பகுதியிலே மேல் மலைப் பகுதியில் இருக்கக்கூடிய சீதோஷ்ண நிலை, "ட்ரப்ட்" என்ற பிரசித்தி பெற்ற ஒரு வகை மீன் வளர்க்க வாய்ப்பு இருக்கிறது. அந்த மலைப் பிராந்தியத்தில் பல இடங்களில் மீன் வளர்ப்பதற்கான நீர் நிலையங்களை சொற்பச் செலவிலே அமைக்க வாய்ப்புகள் இருக்கின்றன. ஆகவே, 'ட்ரப்ட்' என்ற பிரசித்தி பெற்ற ஒரு வகை மீன்களை அந்தப் பகுதியில் வளர்ப்பதற்கான நடவடிக்கைகளை எடுக்க இது சம்பந்தப்பட்ட அமைச்சர் அவர்களும் இலாகாவினரும் முன்வரவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

பெரியகுளம் நகரில் சென்னை அரசினரால் பெண்களுக்காக ஒரு உயர்நிலைப் பள்ளி நடத்தப்பட்டுவருகிறது. ஆனுல், அந்தப் பள்ளியில் பக்கத்துக் கிராமங்களிலிருந்து வந்து படிக்கிற பெண் குழந்தைகள் அங்கே தங்கிப் படிப்பதற்கான வாய்ப்புகள் இல்லை. கிராமப்புரங்களிலிருந்து வரக்கூடிய பெண்கள்கூட அந்த நகருக்கு தங்கிப் படிப்பதற்கேற்ற வகையில், அந்த உயர்நிலைப் பள்ளியை ஒட்டி, மாணவிகள் தங்கும் விடுதியொன்று கட்டுவதற்கான ஏற்பாடுகளை அரசினர் செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

சங்கம் வைத்து தமிழ் வளர்த்த பெருமை மதுரை நகருக்கு உண்டு. தமிழ்நாட்டில் மூன்ருவது சர்வகலாசாலையாக வரக்கூடியது அந்த நகரில் வருமோ வராதோ என்ற ஐயப்பாடு இருந்தது. ஆனுல், அமைச்சர் அவர்கள் கூறியதிலிருந்து நிச்சயமாக அந்த சர்வகலாசாலை மதுரைக்கு வரப்போகிறது என்பதைக் கேட்டு நாங்கள் எல்லோரும் மகிழ்ச்சி அடைகின்ருேம்.

இந்த வரவு-செலவுத் திட்டத்தை முழு மனதுடன் வரவேற்று என்னுடைய உரையை இத்துடன் முடித்துக்கொள்கின்றேன்.

*புலவர் திரு. கா. கோவிந்தன் : மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, கடந்த பத்து ஆண்டு காலமாக, இந்தக் கோட்டையில்

[புலவர் திரு. கா. கோவிந்தன்] [3rd July 1962

கோலோச்சிவிட்டு, இப்பொழுது செங்கோட்டைக்குச் சென்றிருக்கின்ற முன்னாள் நிதி அமைச்சர் அவர்கள், சென்ற ஆண்டு டிசம்பர் மாதத்தில் இங்கு வெளியிட்ட இடைக்கால நிதி நிலைஅறிக்கையினையும் தம்முடைய அமைச்சர் பதவியின் வெள்ளி விழாவினை அடுத்து வருகிற ஆண்டில் கொண்டாட இருக்கிற முதுபெரும் அமைச்சராகிய நம்முடைய கனம் திரு. பக்தவத்சல முதலியார் அவர்கள் இப்பொழுது அளித்திருக்கின்ற இந்த நிதிநிலை அறிக்கையினையும், அந்த அறிக்கைகள் எந்த எந்த ஆண்டுகளுக்கு உரியவை என்ற விளக்கத்தைத் தரக்கூடிய புள்ளிவிவரங்களை எடுத்துவிட்டு, ஒரு பொருளாதார நிபுணரிடத்திலே கொடுத்தால், அவர் முன்னைய நிதிநிலை அறிக்கை, 'தேர்தல் வருகிறது, வரி போட்டால் வாக்காளர்கள் நமக்கு வாக்கினை வழங்கமாட்டார்களே, அவர்களுக்கு ஏதாவது புதிய சலுகைகளைச் செய்யாமற்போனால், அவர்கள் நம்மைவிட்டுப் போய்விடுவார்களே என்ற அச்சத்தின் காரணமாக வெளியிட்ட நிதிநிலை அறிக்கை என்றும், பின்னால் வெளியிட்ட அறிக்கை, தேர்தல் முடிந்துவிட்டது, கோட்டையிலே குடி புகுந்துவிட்டோம், இனி ஐந்தாண்டுகளுக்கு நம்மை அசைக்கிறவர் இல்லை என்ற அச்சமற்ற நிலை ஏற்பட்டுவிட்ட காரணத்தால் வெளியிட்ட அறிக்கை என்றும் தெளிவாகக் கூறுவார்கள்.

[கனம் உதவி சபாநாயகர் தலைமை.]

இடைக்கால பட்ஜெட்டுக்கான அந்த நிதிநிலை அறிக்கை எட்டு பக்கங்களை உடையதாக இருப்பினும், அந்த எட்டுப் பக்க அறிக்கையிலே இரண்டு பக்கங்களுக்கு மேலாக அவர்கள் வாரி வழங்கியிருக்கிற நிகழ்ச்சிகளைக் கூறவேண்டும். ஏழு கோடி ரூபாய் துண்டு விழுந்தும், வரி விதிக்கத் தயங்கிவிட்டு, பொறியியற் கல்லூரிகளையும், தொழிற் பயிற்சி நிலையங்களையும், தொழிலியல் பட்டறைகளையும், சைனிக் பள்ளிக்கூடத்தையும், கட்டாயத் தொடக்கக் கல்வித் திட்டத்தையும், மதிய உணவுத் திட்டத்தையும், குழந்தைகளுக்கான பயிற்சிப் பள்ளிகளையும், அவர்களுக்கான மருத்துவ மனையினையும், மாணவர்களுக்கு வட்டியில்லாக் கடனையும், ஆசிரியர் ஓய்வு ஊதியத்தையும், க்ஷேம நல நிதித் திட்டத்தையும், முதியோர்க்கு ஓய்வு நிதியையும் ஆக இப்படிப்பட்ட திட்டங்களை வாரி வழங்கியிருக்கின்ற அந்த நிதிநிலை அறிக்கையினையும், இப்பொழுது இந்த நிதிநிலை அறிக்கையிலே துண்டு விழுந்த தொகை ஏழு கோடி ரூபாய் என்றும், அந்த ஏழு கோடிக்காக நாங்கள் ஒன்பது பேர்கள் இருக்கிறோம் இந்த மந்திரி சபையில் என்ற காரணத்தினால், பஸ்ஸுக்கு வரி, லாரிக்கு வரி, மின்சாரத்திற்கு வரி, ஸ்டாம்புக்கு வரி, நிலத்திற்கு வரி, நீருக்கு வரி, நகர் நிலத்திற்கு வரி, பந்தயத்திற்கு வரி, கரும்புக்கு வரி என்று ஒன்பது புது வரிகளைப் போட்டுவிட்டு, என்.ஜி.ஓ.-க்களிலே 150 ரூபாய்க்குக் குறைவாகச் சம்பளம் வாங்குகிறவர்களுக்கு மட்டும் ஐந்து ரூபாய் என்ற அளவிலே ஒரு சிறு உதவியை மட்டும் அளித்திருக்கின்ற இந்த நிதிநிலை அறிக்கையினையும் பார்க்கும் எவருக்கும் அந்த எண்ணம்தான் தோன்றும்.

3rd July 1962] [புலவர் திரு. கா. கோவிந்தன்]

நம்முடைய கனம் முதல் அமைச்சர் அவர்கள், ஒரு வணிகர் கூட்டத்திலே பேசுகின்ற நேரத்தில், "வணிகர்கள் ஒரு நல்ல செயலுக்காக நிதி திரட்டினால், அதை 'நன்கொடை' என்று சொல்கிறார்கள்; அரசாங்கம் ஒரு நல்ல காரியம் செய்யவேண்டும் என்று நிதி திரட்டினால் அதை 'வரி' என்று சொல்கிறார்கள்" என்று கூறி, அரசாங்கம் விதிக்கின்ற வரியை நன்கொடை என்ற அளவுக்கு உயர்த்திப் பார்த்திருக்கிறார்கள். அவர்கள் ஒரு படிக்காத மேதை. ஆனால்,

"கல்லாதான் ஒட்பங் கழியநன் றாயினும்
கொள்ளார் அறிவுடை யார்"

என்ற ஒரு உண்மையை உலகுக்கு அளித்த வள்ளுவப் பெருந்தகையார் அந்த வரிக்குக் கொடுத்திருக்கின்ற தகுதி வேறாக இருக்கிறது. அரசர்கள் அல்லது அரசிலே இருக்கின்ற அமைச்சர்கள் பொது மக்களிடத்திலே சென்று, இரு கைகளையும் ஏந்தி 'வரி தாருங்கள்' என்று கேட்கின்ற நிலை இருக்கிறதே, அது, கள்ளன் காட்டு வழியிலே நின்று கொண்டு வழியிலே வருகின்றவர்களிடம் கத்தியைக் காட்டி, 'மடியிலே இருப்பதை வைத்துவிட்டுச் செல்' என்று சொல்வதற்கு ஒப்பாகும் என்று கூறியிருக்கிறார். அரசர்களும், அமைச்சர்களும் வாங்கும் வரி கொள்ளைப் பொருளுக்குச் சமமாகும் என்று கூறியிருக்கிறார்.

"வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு"

என்று கூறப்பட்டிருக்கிறது. ஆக, வரியினுடைய கொடுமை இப்படி இருக்கிறது.

இப்படி வரி விதிப்பதிலே இப்பொழுது எத்தனையோ வரிகளைப் போட்டிருக்கிறார்கள். அந்த வரிகளெல்லாம் ஏழைகளைப் பாதிக்கும் என்றால் இவர்கள் ஒப்புக்கொள்ள மாட்டேன் என்று சொல்கிறார்கள். இந்த மன்றத்தில் விற்பனை வரி என்ற ஒன்று வந்த நேரத்தில் ஆட்சிப் பீடத்தில் இருந்தவர்கள் என்ன சொன்னார்கள்? 'இந்த வரி விற்பனை வரி; ஆகவே, வியாபாரிகள் கட்ட வேண்டிய வரி' என்று சொன்னார்கள். உண்மையிலேயே விற்பனை வரி வியாபாரிகள் தலையிலா விழுந்தது? இல்லை; ஏழைகள் தலை மீதுதான் அது விழுந்துகொண்டிருக்கிறது. அதுபோல, இப்பொழுது போடப்பட்டிருக்கும் வரிகள் அனைத்தும் ஏழைகள் தலை மீதுதான் விழும். உதாரணமாக நான் சொல்கிறேன். பஸ்ஸுக்கு வரி போட்டிருக்கிறார்கள். அமைச்சர் கனம் திரு. வெங்கட்டராமன் அவர்கள், 'நாங்கள் சர்க்கார் நடத்தும் பஸ்களில் கட்டணம் உயர்த்தப் போவதில்லை' என்று சொல்லியிருக்கிறார்கள். செய்யாற்றிலிருந்து சென்னைக்கு பஸ் கட்டணம் ரூ. 1.75 என்றாலும், திருவிழா, திருமணம் போன்ற காலங்களில் அது இரண்டு ரூபாயாகக் கூடிவிடுகிறது. அதற்குச் சட்டம் இடம் தருகிறது. இப்பொழுதிருக்கின்ற நிலையில், இனி இரண்டு ரூபாயை நிரந்தரக் கட்டணமாக்கி வசூலிக்கக்கூடும். அதை அரசாங்கம் தடை

செய்ய முடியாது. புதிய சட்டம் போட்டு, அதற்கு ஒரு தடை விதிக்கலாம் என்றால், இந்திய அரசியல் சட்டத்திலே ஆங்காங்கு விடப்பட்டிருக்கிற ஓட்டை உடைசல்கள் சட்டத்தைச் செல்லாத தாக்கிவிடும். இந்த நிலையில் இந்த வரி ஏழை மக்கள் தலைமீது தான் விழும் என்று நான் கூறக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இதற்கு வேறு வழி இல்லையா என்றால், இருக்கிறது. திராவிட முன்னேற்றக் கழகத்தாராகிய நாங்கள் சொல்கிற திட்டத்தை ஏற்றுக்கொண்டால், இதற்கு ஒரு நிரந்தரமான வழி செய்ய முடியும். தமிழ்நாட்டில் சுமார் ஏழாயிரம் பஸ்கள் இருக்கின்றன என்று கணக்கு கூறுகிறது. அன்றாடச் செலவுகள் அத்தனையையும் நீக்கிப் பார்த்தாலும், பஸ் ஒன்றுக்கு நூறு ரூபாய் வரையில் நாளொன்றுக்கு நிற்கும். அந்த அளவிலே பார்த்தால், ஏழாயிரம் பஸ்களுக்கு ஓராண்டுக்கு 25 கோடி ரூபாய் வருமானம் வரும் என்ற நிலையை நாம் அறிகிறோம். அப்படி 25 கோடி ரூபாய் வரக்கூடிய நிலையில் பஸ்களையெல்லாம் தேசிய மயமாக்க முடியும் என்ற எங்களுடைய திட்டத்தைப் பின்னால் தள்ளுவதற்காக 'பாருங்கள், பஸ்காரர்களுக்கு வரி போட்டிருக்கிறோம்' என்று சொல்கிறார்கள். இந்த நிலையில் பஸ் சொந்தக்காரர்கள் கட்டணத்தை உயர்த்தி ஐந்து கோடி ரூபாய் வசூலித்து, சர்க்காருக்கு இரண்டு கோடி ரூபாய் கொடுத்துவிட்டு, பாக்கி மூன்று கோடி ரூபாயை வைத்துக்கொள்வார்கள். ஆக, 25 கோடி ரூபாய் வருமானத்தோடு மூன்று கோடி ரூபாயும் சேர 28 கோடி ரூபாயாக அவர்கள் தங்களுடைய வருமானத்தைப் பெருக்கிக்கொள்ளத் தான் அரசாங்கம் வழி செய்திருக்கிறது. இந்த வரி ஏழை எளியவர்களுக்கு நன்மை தரக்கூடிய வரி அல்ல என்று நான் கூறிக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஆகவே இப்படிப்பட்ட நிதி நிலை அறிக்கையை நாங்கள் பாராட்டுவதற்கு இல்லையென்று கூறி, இந்த நிதி நிலை அறிக்கையில் முன்னுக்கு முரண்பாடாக உள்ள சில புள்ளிவிவரங்களை எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

10-00 p.m. உணவு உற்பத்தி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இலக்காக 61-62-ஆம் ஆண்டு வரவுசெலவு அறிக்கையில் 61.17 லட்சம் டன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் இப்போது அளித்திருக்கிற அறிக்கையில் 70 லட்சம் டன் நம்முடைய இலக்கு என்று சொல்கிறார். அதேபோல் உரத்தை பற்றிச் சொல்கிறபோது நெய்வேலி உரத்தொழிற்சாலையில் 3.50 லட்சம் டன் அமோனியத்துக்குச் சமமான 1.5 லட்சம் டன் யூரியா உரம் அடுத்த ஆண்டு உற்பத்தி செய்யப்படும் என்று சொன்னார்கள். ஆனால் இந்த நிதி நிலை அறிக்கையிலே "நெய்வேலி உரத்தொழிற்சாலை இயங்க ஆரம்பித்தால்" என்று இழுப்பு போடப்பட்டிருக்கிறது. அது மட்டுமல்லாமல் "யூரியா உப்பு உற்பத்தித் தொழிற்சாலை இத்தாலியர்களின் உதவியைக்கொண்டு உருவாகி வருகிறது. இதற்கான கட்டிட வேலைகள் நடந்துகொண்டிருக்கின்றன. இயந்திரங்களில் ஒரு பகுதியும் வந்து சேர்ந்து

3rd July 1962] [புலவர் திரு. கா. கோவிந்தன்]

விட்டது" என்ற நிலை இருக்கிறது. பாசனத்தைப்பற்றிச் சொல்கிற நோத்தில் 2-வது ஐந்தாண்டுத் திட்டங்களின் முடிவில் 2.09 லட்சம் ஏக்கரா நிலங்கள் புதிய பாசன வசதியைப் பெற்றன என்று 61-62-இல் கூறியிருக்கிறார்கள். ஆனால் இந்த அறிக்கையில் 2.92 லட்சம் ஏக்கரா நிலம் புதிய பாசன வசதியைப் பெற்றிருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. முன்பு சொல்லப்பட்டபடி 2.09 லட்சம் ஏக்கரா என்பது உண்மையா? அல்லது இப்போது சொல்லப்பட்டிருக்கிறபடி 2.92 லட்சம் ஏக்கரா என்பது உண்மையா? எது சரியென்று தெரியவில்லை. மின்சாரத்தைப்பற்றிச் சொல்கிற நோத்தில் நெய்வேலியில் 1962 டிசம்பரில் 2 லட்சம் கிலோவாட் உற்பத்தி செய்ய முடியும் என்று 61-62 அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த அறிக்கையில் ½ லட்சம் கிலோவாட் உற்பத்தியளவுள்ள முதல் பகுதிக்கான இயந்திரங்கள் முழுவதும் வந்து, கட்டிட வேலைகள் எல்லாம் பூர்த்தியாகியிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதுவும் வேலை எதுவும் நடக்காத நிலையைக் காட்டுகிறது. இப்படிப்பட்ட முரண்பட்ட புள்ளிவிவரங்களைக் காட்டி மக்களை ஏமாற்றுகின்ற ஒரு திட்டத்தை நாங்கள் வரவேற்க முடியாத நிலையில் இருக்கிறோம். ஆகவே தான் இந்த நிதி நிலை அறிக்கையை திராவிட முன்னேற்றக் கழகத்தினர் பாராட்ட முடியவில்லை. பாராட்டினால் அது பொதுமக்களுக்குச் செய்கிற துரோகமாகும் என்று அஞ்சி இந்த அறிக்கையை வரவேற்றுப் பாராட்டாமல் என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* **திரு. கே. பொன்னையா:** மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-ஆம் வருஷத்து நிதி நிலை அறிக்கையை ஆதரித்து நான் ஒரு சில வார்த்தைகளைப் பேச விரும்புகிறேன்.

முன்னாள் நிதி மந்திரி அவர்கள் இந்த நாட்டின் வருமானம் நூறு கோடியாக வேண்டுமென்று விரும்பினார். ஆனால் இன்று புதிய நிதி மந்திரியாக வந்திருக்கக்கூடியவர் 110 கோடி அளவுக்கு உயர்த்தியிருப்பது அவருடைய பெரும் பாக்கியம் என்று எண்ணி என்னுடைய மகிழ்ச்சியை தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக இந்த பட்ஜெட்டை எதிர்க்கட்சிக்காரர்கள் அவர்கள் கண்ணாடியில் நோக்குகிறார்கள். ஒரு கட்சிக்காரர் அவருடைய கண்ணாடியில் நோக்கினால், இன்னொரு கட்சிக்காரர் அவருடைய கண்ணாடியில் நோக்குகிறார். இப்படி நோக்கும் காலத்தில் ஒரு சில வரிகளை திராவிட முன்னேற்றக் கட்சிக்காரர்கள் எதிர்க்கிறார்கள். சுதந்திரா கட்சியைச் சேர்ந்தவர்கள் வரியே போடக்கூடாது என்று சொல்கிறார்கள். இவர்கள் இரண்டுபேரும் தேர்தல் காலங்களில் கூடிக் குலவுகிறார்கள். அதே சமயத்தில் சக்களத்திப் போராட்டமும் நடத்துகிறார்கள். இவர்கள் ஒருகால் ஆட்சிக்கு வந்தால் வரி போடாமல் எப்படி நடத்துவார்கள்? இதை நோக்குகிறபோது எனக்கு ஒரு பழமொழி நினைவுக்கு வருகிறது. " பழைய சோறு இருந்தால் போடுங்கள். நான் பசியா வரம் தருகிறேன்" என்று ஒருவன் சொன்னானாம். அது

[திரு. கே. பொன்னையா] [3rd July 1962

போல 2 நூறு கோடி ரூபாய்க்குத் திட்டம் போட்டால் அப்போது இவர்கள் ஆயிரம் கோடிக்குத் திட்டம் போடுங்கள் என்று சொல்கிறார்கள். அப்படி ஒரு பக்கம் சொல்லிவிட்டு வரி போடக்கூடாது என்று சொல்வார்களேயானால் இது முன்னுக்குப்பின் முரணாக இருக்கிறது. இதை திராவிட முன்னேற்றக் கழகத்தினர் சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக வால்பாறை பிராந்தியத்தில் மிகப்பெரிய பஞ்சாயத்து இருக்கிறது. அதை டவுன்ஷிப்பாகக் கொண்டுவர வேண்டுமென்று இரண்டு மூன்று ஆண்டுகளாகச் சர்க்காருக்குச் சொல்லிவருகிறேன். டவுன்ஷிப்பாக மாற்றுவதற்கு தேவையான அம்சங்கள் எல்லாம் அங்கே நிறைந்திருக்கின்றன. ஒரு "ஹெல்த் ரிசார்ட்" ஆகவும் இருக்கிறது. நம்முடைய திட்டங்களுக்குள் மிகப் பெரிய திட்டமாகிய பரம்பிக்குளம்-ஆளியாறு திட்டம் அங்கேதான் உருவாகிக்கொண்டிருக்கிறது. பெரிய பெரிய மலைகளை எல்லாம் குடைந்து நதிகளை தமிழ்நாட்டுக்குக் கொண்டுவரக் கூடிய இடமாக அமைந்துள்ள வால்பாறையை டவுன்ஷிப்பாக மாற்றியமைக்க வேண்டுமென்று இந்தச் சமயத்திலும் கேட்டுக்கொள்கிறேன்.

ஸ்கூல் படிப்புக்கு மாணவர்களுக்குச் சலுகை அளிக்க வருமான வரம்பை 1,500 ரூபாயாக உயர்த்தியிருப்பது போதாது. குறைந்தது 2,000 ரூபாயாகவாவது உயர்த்தித் தர வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் அநாதைக் குழந்தைகளை அந்த இல்லங்களில் சேர்க்க வேண்டுமென்றால் 300 ரூபாய் வருமானத்திற்குக் குறைவாய் உள்ளவர்களின் குழந்தைகளைத் தான் சேர்த்துக்கொள்கிறார்கள். இந்தக் காலத்தில் மிக ஏழையாக உள்ளவனுக்குக் கூட 300, 400 ரூபாய் வருஷ வருமானம் வரக் கூடும். சம்பளம் வாங்கும் சக்தி மக்களிடத்தில் பெருகியிருக்கிறது. ஆகவே வருஷத்திற்கு 500 ரூபாய்க்குக் குறைவாக உள்ளவர்களின் குழந்தைகளையும் அநாதை இல்லங்களில் சேர்த்துக் கொள்வதற்கு வசதி இருக்கும்படியாக அந்த வருமான வரம்பை 500 ஆகவாவது உயர்த்தித்தர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, வால்பாறை பிராந்தியத்தில் பெண்களுக்கு என்று ஒரு ஹைஸ்கூல் வேண்டும். அங்கே தனிப்பட்ட ஒருவர் இது சம்பந்தமாக உதவி செய்ய முன்வந்திருக்கிறார். அதையும் கவனித்து உடனடியாக அந்தப் பிராந்தியத்தில் அவசியம் பெண்களுக்கு என்று ஒரு ஹைஸ்கூல் ஏற்படுத்துவதற்குச் சர்க்கார் முன்வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அந்தப் பிராந்தியத்தில் குடிசைத் தொழில்கள் நிறுவுவதற்கு வேண்டிய மூலப் பொருள்கள் ஏராளமாகக் கிடைப்பதால் அங்கே என்ன என்ன குடிசைத்தொழில்களை ஏற்படுத்தலாம் என்பதைப் பற்றி ஆராய்ச்சி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கோயம்புத்தூர் நகரம் என்ஜினியரிங் தொழிலில் சிறந்து இருக்கிறது. தொழில் துறையில் அது வெகுவாக உயர்ந்து கொண்டு வருகிறது. மேலும் இதில் ஹரிஜனப் பிள்ளைகள் நான்

3rd July 1962] [திரு. கே. பொன்னையா]

காம் பாரம், ஐந்தாம் பாரம், ஆறும் பாரம் தேருதவர்கள் எல்லாம்கூட போய்ச் சேருகிறார்கள். இவர்களுக்காக ஜூனியர் பாலிடெக்னிக் ஆரம்பித்து இருக்கிறார்கள். ஆகவே உடனடியாக கோவையில் ஒரு என்ஜினியரிங் ஹாஸ்டல் ஏற்படுத்திக்கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன். மதராஸிலும், மதுரையிலும் எப்படி ஏற்படுத்தியிருக்கிறார்களோ அப்படியே கோவையிலும் அவசியம் அமைத்துத்தர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக பரம்பிக்குளம்-ஆளியாறு ப்ராஜெக்டில் காண்டூர் கனல் 32 மைல் தூரத்தில் ஆரம்பித்து உடுமலை தாலூக்காவில் போய் முடிகிறது. இந்தக் கால்வாய் மலையோரமாகச் செல்கிறது. சமவெளிக்கும், மலைக்கும் இரண்டு மூன்று மைல்கள் இருக்கும். அங்கே வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு, தொழிலாளர்களின் குழந்தைகளுக்கு ஆஸ்பத்திரி வசதி, படிப்பு வசதி, போஸ்டாபீஸ் வசதி எதுவுமே கிடையாது. கடைகள் இல்லை. ஆகவே அங்கே மொபைல் ஹாஸ்பிடல், மொபைல் போஸ்டாபீஸ், மொபைல் கடைகள் வைத்து அவர்களுக்கு வேண்டிய வசதிகளை மொபைல் வான்மூலம் செய்துகொடுக்கும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக அங்கே பாரஸ்ட் ஹில் ஹாஸ்பிடல் இருக்கிறது. அது மிகவும் சிறியதாக இருக்கிறது. மலைப்பிராந்தியத்தில் வெடி மருந்துகள் எல்லாம் வைத்து வேலை செய்வதால் விபத்துக்கள் ஏற்படுகின்றன. ஆகவே அந்த பாரஸ்ட் ஹாஸ்பிடலை பெரிதாக்குவதோடு கூட இப்படி மலைப்பிராந்தியத் தொழிலாளர்கள் விபத்துக்குள்ளானல் உடனடியாக வானில் எடுத்துச் சென்று அங்கே சிகிச்சை செய்யும்படியாக வான் வசதியும் செய்து கொடுக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

வால்பாறை மலைப்பிராந்தியத்திற்குப் பக்கத்தில் கோளா பிரதேசம் இருக்கிறது. அங்கே மலைவாசிகளுக்கு அதிகச் சம்பளம் வேலைக்குக் கொடுக்கிறார்கள். மலைவாசி ஆணுக்கு 2½ ரூபாய் என்றும், பெண்ணுக்கு 2 ரூபாய் என்றும் அவர்கள் கொடுக்கிறார்கள். அதைப்போல் நாம் கொடுக்காவிட்டாலும் நாம் கொடுப்பது மிகவும் குறைவாக இருப்பதனல் அந்த மலைவாசிகளுடைய சம்பளத்தை ஆணுக்கு 2 ரூபாய் என்றும், பெண்ணுக்கு 1½ ரூபாய் என்றுமாவது உயர்த்திக் கொடுக்க வேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். அப்போதுதான் மலைவாசிகள் நன்ருக வாழ்வார்கள் என்றும் சொல்லிக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக மலைப்பிரதேசத்தில் வேலை செய்யும் பி.டபிள்யூ.டி. தொழிலாளர்களுக்கு பரம்பிக்குளம்-ஆளியாறு ப்ராஜெக்ட் ஏரியாவில் வேலை செய்தால் நூற்றுக்கு 50 சதவிகிதம் உயர்த்திக் கொடுக்கும்படியாக இருக்கிறது. பி.டபிள்யூ.டி. ஷெட்யூல்லில் கண்டபடி அதை 50 சதவிகிதமாக உயர்த்திக் கொடுத்து அந்தத் தொழிலாளர்களைக் காப்பாற்றவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக பரம்பிக்குளம்-ஆளியாறு ப்ராஜெக்டில் முக்கியமாக இரண்டு ஆறுகள் சேர்க்கப்படவில்லை. ஆனமலையாறு, இடமலையாறு என்ற இந்த இரண்டு ஆறுகளையும் கூட இத்திட்டத்தில்

[திரு. கே. பொன்னையா] [3rd July 1962

சேர்ப்பதற்கு கேரள அரசாங்கத்தோடு கூடப் பேச்சுவார்த்தை நடத்தி சேர்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதனால் நமக்குச் செலவு குறையும். லட்சக்கணக்கான எக்காரவுக்குப் பாசன வசதியும் கிடைக்கும். துணைக்கரவு அணைக்கட்டு இன்னும் கட்டி முடிக்கப்படவில்லை. இதைக்கட்டி முடித்தால் உடுமலைப் பேட்டை, தாராபுரம், பல்லடம் போன்ற பகுதியிலுள்ள மக்கள் சுபிட்சமாக வாழமுடியும் என்று கூறிக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

*** திரு. அ. ராகவ ரெட்டி :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த பட்ஜெட்டைப் பற்றிப் பேசும்போது முக்கியமாக நில வரியைப் பற்றிப் பேச விரும்புகிறேன். 1911-ம் வருஷத்தில் லாண்ட் ரெவின்யூ செட்டில்மெண்ட் நடந்தபோது போடப்பட்ட நிலவரியை இதுவரை மாற்றப்படவில்லை. இந்த வரியை உயர்த்துவதில் நியாயமிருக்கிறது என்று நம்முடைய நிதியமைச்சர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். புதிதாக நஞ்சை நிலங்களாக மாற்றப் பட்ட நிலங்களுக்கு லட்சக்கணக்கான ரூபாயைச் செலவழித்து அவைகளுக்கு வேண்டிய தண்ணீர் வசதியைச் சர்க்கார் செய் திருக்கிறது. அந்த நிலங்களுக்கு இருக்கும்படியான தண்ணீர் வசதி பழைய நிலங்களுக்குச் செய்யப்பட்டிருக்கவில்லை என் பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இதற்கும் பழைய நிலங்களுக்கும் வசதிகள் செய்து கொடுத்திருப்பதில் வித்தியாசம் இருக்கிறது. இரண்டுக்கும் ஒப்பிட்டுப் பார்த்து வரியை உயர்த்த வேண்டுமென்று சொல்வது நியாயமில்லை. மேலும், தானிய விலை உயர்ந்திருப்பதால் விவசாயிகளுக்கு வரி போடுவதில் நியாயம் இருக்கிறது என்று சொல்லியிருக்கிறார். தானிய விலை ஒன்றுக்கு நான்கு பங்காக உயர்ந்திருந்தாலும் விவசாயிகளுக்கு எவ்வளவு செலவு ஆகிறது என்பதையும் நாம் பார்க்க வேண்டும். 100-க்கு 75 பேர் நம்முடைய நாட்டில் விவசாயிகளாக இருக்கிறார்கள். அவர்களில் எத்தனை சதவிகிதம் பேர் கிராமங்களில் சுபிட்சமாக இருக்கிறார்கள் என்பதைச் சர்க்கார் கவனித்துப் பார்க்கவேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன். எற்கனவே இருக்கும் கிஸ்திப் பணத்தைச் செலுத்தவே அவர்களால் முடிவதில்லை. பத்து பசலி களில் இருந்து கூடக் கட்டச் சக்தி இல்லாமல் இருந்து வருகிறார் கள். ரெவின்யூ அதிகாரிகள் நிலத்தை ஜப்தி செய்துதான் வசூல் செய்து கொண்டிருக்கிறார்கள். இந்த வரியைக் கட்டவேண்டு மென்ற கடமை உணர்ச்சி அவர்களுக்கு இருந்தபோதிலும் இயலா மையால் கட்ட முடியாமல் இருக்கிறார்கள். கிராமங்களில் எற் கனவே அக்ரிகல்சுரல் இன்கம்டாக்ஸ் போட்டிருக்கிறார்கள். அந்த வரியை உண்மையிலேயே யார் கட்ட வேண்டுமென்பதை அதிகாரி கள் தெரிந்து கொள்ள முடியாத நிலைமை இருந்து வருகிறது. சுமார் 20 வருஷங்களுக்கு முன்னர் யார் பெயரில் பட்டா இருந் ததோ அவர்களிடமே வரி வசூலிக்க வருகிறார்கள். அந்த நிலம் வேறு யாருக்காவது விற்கப்பட்டிருந்தாலும்கூட, ரிக்கார்டுகள் சரியாக இல்லாத காரணத்தால் முன்பு சொந்தக்காரர்களாக இருந்தவர்களையே இந்த வரி செலுத்தும்படி தொந்தரவு செய்

3rd July 1962] [திரு. அ. ராகவ ரெட்டி]

கிறூர்கள் மேலும் இந்த வரியை வசூலிக்கும் சிப்பந்திகளுக்கு ஆகும் செலவில் 100-க்கு 90 பங்கு கூட இந்த வரியால் வருவாய் இல்லை. ஆகவே, இந்த வரியை எடுத்து விட்டாலும் பரவாயில்லை. அந்த வரி இருக்க வேண்டுமென்று சொன்னால் சர்க்கார் கணக்கு களைச் சரியாக வைக்கும்படி உத்தரவிடவேண்டும். இப்போது போடப்பட்டிருக்கும் நில வரியைப் போட்டுத்தான் ஆகவேண்டு மென்று சொன்னால் அக்ரிகல்சுரல் இன்கம்டாக்ஸை எடுத்து விட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

கல்விக்காக, நம்முடைய மாகாணத்திற்கு வரும் வருவாயில் நான்கில் ஒரு பங்கை ஒதுக்கியிருக்கிறூர்கள். இலவசக் கல்வி தருவதாகச் சர்க்கார் சொல்கிறது. ஆனல் வருஷ வருமானம் 1,200 ரூபாய்க்கு மேற்படாமல் இருப்பவர்களுக்குத்தான் அந்தச் சலுகை வழங்கப்பட்டிருக்கிறது. மாதம் 100 ரூபாய் சம்பாதிக் கிறவனுடைய குடும்பம் எந்த அளவுக்கு இருக்கும் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். சிறு வேலை செய்பவனுக்குக்கூட 100 ரூபாய் வரும்படி வரத்தான் செய்கிறது. ஆகவே, 1,200 ரூபாய் என்று இருப்பதை 2,500 என்று மாற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ரிஜிஸ்ட்ரேஷன் கட்டணத்தை 8 ரூபாயிலிருந்து 9½ ரூபாய்க்கு உயர்த்தியிருக்கிறூர்கள். முதலிலே 1½ ரூபாயாக இருந்தது பின்னர் 8 ரூபாயாக உயர்ந்தது. 8 ரூபாயில் 3 ரூபாய் ஸ்டாம்புக் கட்டணம் என்றும் மீதி 5 ரூபாய் ஏதோ வரி என்றும் சொல் கிறூர்கள். ஒருவர் தன்னுடைய சொத்தை கஷ்டம் ஏற்படும் போதுதான் விற்கிறூர்கள். வாங்குபவர்கள் ஸ்டாம்புக் கட்ட ணத்தை எல்லாம் நீக்கி விட்டுத்தான் விலை கொடுக்கிறூர்கள். ஆகவே, 8 ரூபாயே அதிகமாக இருக்கும்போது 9½ ரூபாயாக ஆக்குவது நியாயமில்லை. ஓர் உறுப்பினர் முன்னல் பேசியது போல் 10 ரூபாயாக ஆக்கிவிட்டால் ஸ்டாம்ப் வாங்கவாவது வசதியாக இருக்கும். இல்லையென்றல் 8 ரூபாயாகவே வைத்து விடுங்கள் என்று கூறினர். அதுவும் ஒரு வகையில் சரிதான்.

பஞ்சாயத்து யூனியன்களை அமைத்து கிராமங்களில் ராம ராஜ்யம் ஏற்படச் செய்ய வேண்டுமென்று சொன்னூர்கள். இந்தத் திட்டம் நல்ல திட்டம் தான். நடைமுறையில் பார்க்கும்போது பஞ்சாயத்து யூனியன்களுக்கு ஒதுக்கப்பட்ட பணத்தில் எவ்வளவு சதவிகிதம் உண்மையாகக் கிராமவாசிகளுக்குப் பயன்படுகிறது என்று கணக்குப் பார்த்தால், ஒதுக்கப்பட்ட பணத்தில் அதிக சதவிகிதம் அதிகாரிகளுக்கும், வீண் செலவுகளுக்குத்தான் போகிறது என்பதை நாம் தெரிந்து கொள்ள முடியும். பஞ் சாயத்துக் கமிஷனரிடம் ஆரம்பக் கல்விப் பொறுப்பை ஒப்படைத் திருக்கிறூர்கள். இவர்களுக்கு அதிகாரம் கொடுத்திருப்பது தேளுக்கு அதிகாரம் கொடுத்தது போல் ஆகிவிட்டது. ஆசிரியர்களை அனுவசியமாக ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மாற்றித் துன்புறுத்திக் கொண்டிருக்கிறூர்கள் முன்பு, ஜில்லா போர்டாக இருந்தபோது ஒரு ஆசிரியரை மாற்ற

[திரு. அ. ராகவ ரெட்டி] [3rd July 1962

வேண்டுமென்று சொன்னல் கல்வி அதிகாரிக்கு முன்னதாகத் தெரிவித்து முன் உத்தரவை வாங்கிக் கொண்டுதான் மாற்ற வேண்டும். நானும் ஜில்லா போர்டில் இருந்ததால் அனுபவம் இருக்கிறது. ஒரு கமிஷனருக்கே அந்த அதிகாரத்தைக் கொடுத்திருப்பதின் காரணமாக, அவர்கள் அரசியல் காரணங்களுக்காகக் கூட ஆசிரியர்களை ஓரிடத்திலிருந்து வேறு இடத்திற்கு மாற்றி அவர்களைத் துன்புறுத்துகிறார்கள். அதை மாற்றியமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

பஞ்சாயத்து யூனியன்களிடம் ஒப்படைக்கப்பட்ட ஏரி வேலைகள், ரோடு வேலைகள் இவைகளைப் பராமரிக்கும்போது 20,000 அல்லது 30,000 ரூபாய்க்கு எஸ்டிமேட் தயார் செய்து அவ் வேலையை காண்ட்ராக்டரிடம் ஒப்படைக்கிறார்கள். நடைமுறையில் என்ன நடக்கிறதென்றால், செக் மெஷர்மெண்ட் என்று முன்பே இருந்ததுமாதிரி இல்லாமல் முதல் பில்லிலும் கடைசிப் பில்லிலும் செக் மெஷர்மெண்ட் செய்தால் போதும், இடையில் செய்ய வேண்டியதில்லை என்ற முறையில் நடந்து கொண்டிருக்கிறது. 20,000 ரூபாய்க்கு ஒரு வேலை கொடுத்தால் முதல் பில் 100 ரூபாய்க்கு போட்டு வாங்கி விடலாம். அதை, அஸிஸ்டெண்ட் என்ஜினியர் செக் மெஷர்மெண்ட் செய்வார். இடையில் 19,500 ரூபாய்க்கு வேலை செய்வதற்கு ஒன்றுமில்லாது, கடைசியாக செய்வதற்கு 400 ரூபாய்க்கு செக் மெஷர்மெண்ட் செய்கிறார்கள். ஆகவே ஒவ்வொரு வேலைக்கும் அஸிஸ்டெண்ட் என்ஜினியர் செக் மெஷர்மெண்ட் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பின்னர் தொழிற்சாலைகள் அமைப்பதில் எல்லாத் தொழிற்சாலைகளையும் பட்டணங்களில் அமைக்கிறார்களே தவிர கிராமங்களில் அமைப்பதில்லை. அப்படி வந்தால் கிராமங்களில் விவசாய வேலைக்கு ஆள் கிடைக்காமல் போகலாம் என்று சிலர் சொல்வார்கள். இருந்தாலும் இந்த கஷ்ட காலத்தில் மக்களுக்கு அந்தந்த இடத்தில் வேலை கிடைக்க வாய்ப்பு அளிக்கவேண்டுமென்றால், எல்லா ஜில்லாக்களிலும் ஒவ்வொரு மூலையிலும் தொழிற்சாலைகள் அமைத்துக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஹரிஜனங்களுக்கும், மற்ற பின்தங்கிய வகுப்பினருக்கும் கோடிக்கணக்கில் தொகை ஒதுக்கி எவ்வளவோ செய்கிறார்கள், உண்மை. ஆனல் ஹரிஜனங்களும், பின்தங்கிய வகுப்பினரும் 47-ம் ஆண்டில் எங்கு இருந்தார்களோ அங்கேயே இன்னும் இருக்கிறார்களே தவிர ஒரு காலனியில், ஒரு பத்து வீடுகள் கட்டி அதை நன்கு போட்டோ எடுத்து அதை பெரிய அதிகாரிகள், டெல்லியில் இருந்து வரும் அதிகாரிகளிடம் காட்டி சென்னை மாநிலத்தில் இப்படி செய்துவிட்டோம் என்று காட்டுகிறார்களே தவிர, உண்மையில் அங்கு சென்று பார்த்தால் ஒரு காலனி கூட முன்னேறவில்லையென்று சொல்லவேண்டியிருக்கிறது. சில பகுதிகளில் சுதந்திரம் வந்து 15 ஆண்டுகளுக்கு பின்னர் கூட குடி தண்ணீர் வசதி கூட செய்யப்படவில்லை. ஆளுக்கு 5 சென்ட் நிலம் குடியிருக்க வாங்கிக் கொடுக்கிறார்கள். ஆகவே இந்த 5 சென்ட் நிலம், குடிதண்ணீர் வசதி இவைகளையாவது எல்லா ஹரிஜன காலனிகளிலும் உடனே கிடைக்கும்படி

3rd July 1962] [திரு. அ. ராகவ ரெட்டி]

திட்டமிட்டு செய்தால் நன்ருக இருக்கும். என் தொகுதியைப் பொறுத்த மட்டில், அது வடவண்டைகோடியில் இருக்கிறது. அதைத் தாண்டினுல் ஆந்திராப் பகுதி. அங்கு மின்சார வெட்டு வந்த பிறகு, 15 நாட்களாகியும் வெட்டு நேரம் போக மீதி நேரத்தி லாவது மின்சாரம் கொடுக்க வேண்டுமென்று சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் சென்று கேட்டும்கூட, அவர்கள் அதைக்கூட செய்யாமல் அதன் காரணமாக லட்சக்கணக்கில் செலவிட்டு பயிர் செய்திருக்கும் ஆயிரக்கணக்கான ஏக்கரில் உள்ள பயிரும்—சொர்ணவரி பயிர் என்பார்கள்—கெட்டு விட்டு இந்த ஆண்டு பெருத்த நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. இதை ஜில்லா கலெக்டர் அவர்களே உடனடியாக விசாரித்து நிலைமையை தெரிந்து கொண்டு வெட்டு போக மீதி நேரத்தில் எங்களுக்கு மின்சாரம் கொடுக்கு மாறு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எனக்கு இந்த வாய்ப்பு கொடுத்ததற்கு கனம் சபாநாயகர் அவர் களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

* **திருமதி எ. எஸ். பொன்னம்மாள் :** மதிப்பிற்குரிய உதவி சபா நாயகர் அவர்களே, நமது அமைச்சர் அவர்களால் கொண்டு வரப் பட்டிருக்கும் இந்த வரவு செலவு மான்யக் கோரிக்கையை முழு மனதுடன் ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நாம் போடக் கூடிய திட்டங்கள், பொருளதாரத் துறையில் மட் டும் உயரவேண்டுமென்ற நோக்கத்தோடல்ல. இந்த நாட்டிலுள்ள கோடானுகோடி மக்கள் வாழ்க்கை தரம் ஓரளவு உயரவும், மக்களு க்கு சம வாய்ப்பு கொடுப்பதற்கும், சம அந்தஸ்து அளிப்பதற்கும் தான் பல திட்டங்களைத் தீட்டி நாம் படிப்படியாக முன்னேறிக் கொண்டு வருகிறோம். எடுத்த எடுப்பிலே குடிசையில் வாழும் ஒரு ஏழை மாட மாளிகையில் வந்து உட்காரமுடியாது. படிப்படி யாகத்தான் செல்லவேண்டும். அந்த அளவில்தான் திட்டங்கள் போட்டு பல கோடி ரூபாய் செலவு செய்து பல காரியங்களை நிறை வேற்றி வருவதற்காக ஏழை மக்கள் சார்பாக நான் அரசாங்கத் திற்கு நன்றி செலுத்த கடமைப்பட்டிருக்கிறேன். 30-ம் தேதி அந்த வரியை எதிர்க்க வேண்டும், விலைவாசியைக் குறைக்க வேண்டுமென்று வெளியிலே ஆர்ப்பாட்டம் நடந்தது. வளரும் சமு தாயத்தில், முன்னேறக்கூடிய சமுதாயத்தில் விலைவாசியை எப்படி குறைப்பது என்பது எங்களைப் போன்றவர்களுக்கு தெரியாது இருந்து கொண்டிருக்கிறோம். இன்று ரஷ்யாவை எடுத்துக் கொண்டால் அல்லது இதர முன்னேற்றமடைந்த நாடு களை எடுத்துக்கொண்டால் விலைவாசி அதிகமாகத்தான் இருந்து கொண்டிருக்கிறது. வாங்கும் சக்தி மக்களுக்கு வந்துகொண் டிருக்கிறது. நான் இப்படிச் சொல்லும்போது, இந்த அம்மாள் ஹரிஜன சமுதாயத்தில் பிறந்துவிட்டு அவர்களது நிலைமை தெரிந் தும் விலைவாசி உயர்வை ஆதரித்துப் பேசுகிறுர்களே என்று என் தொகுதிக்குப் போய் தப்புப் பிரசாரம் செய்யக் கூடும். ஓரளவு வாங்கும் சக்தி மக்களுக்கு வந்திருக்கிறது என்ற நிலையை தெரிந்து கொண்டுதான், முன்னேற்றமடையும் நாட்டில் விலை வாசியைக் குறைக்கவே முடியாது என்று சொல்கிறேன். அது மட்டுமல்ல. வரி போடுகிறோம், வரி போடுகிறோம் என்கிறுர்கள்.

[திருமதி எ. எஸ். பொன்னம்மாள்] [3rd July 1962

வரி இன்றி எந்தக் காரியத்தையும் செய்ய முடியாது. ஒவ்வொரு ஊருக்கும் ரோடு போட வேண்டும், குடி தண்ணீர் வசதி செய்து கொடுக்கவேண்டும். அதுவும் கயிறு போட்டு இறைப்பதல்ல. குழாய் வைத்துக் கொடுக்கவேண்டும், மின்சார வசதி செய்து கொடுக்கவேண்டும், பள்ளிக்கூடங்கள் கட்டிக் கொடுக்கவேண்டும் என்று இப்படி பல காரியங்கள் செய்து கொடுக்கிறோம். வரி போடாது, வருமானம் இல்லாது எப்படி இக்காரியங்களை செய்து கொடுக்க முடியும் என்று தெரியாமல், வரி போடுகிறார்களே என்று சொல்கிறார்கள். அது நல்லதல்ல. மேலும் ஏழை மக்கள் அதனால் பாதிக்கப்படுகிறார்கள் என்றும் சொல்கிறார்கள். ஏழை மக்களை ஒரு சில வரிகள் பாதிக்கத்தான் செய்கின்றன. சினிமாவிற்கு வரி போட்டிருக்கிறோம், தரை டிக்கட் வாங்குபவர்கள்தான் அதிகமாகச் செல்கிறார்கள். அதே போன்று பஸ்ஸில் ஏறுபவர்கள் ஏழை மக்கள்தான், பணக்காரர்கள் காரிலோ அல்லது விமானத்திலோ செல்கிறார்கள். என் தொகுதி சம்பந்தப்பட்ட மட்டில் சொல்கிறேன். மக்கள் நிலைமையை உணரத் தொடங்கி விட்டார்கள். பள்ளிப் பிள்ளைகளுக்கு மதிய உணவு அளிக்கப்படுகிறது, பள்ளிக்கூட வசதி இப்படி பல்வேறு வசதிகள் செய்து தரப்பட்டு ஊர் முன்னேற பணம் செலவிடப்படுகிறது என்ற உண்மையை மக்கள் உணர்ந்திருக்கும்போது, மக்களிடம் சென்று உங்களுக்கு அதைச் செய்கிறோம், இதைச் செய்கிறோம் என்று சொல்லி வோட்டு வாங்கி வந்து இங்கே வரி போடுகிறீர்களே என்று பேசினால் அது மக்களை பின்னோக்கி செல்ல வைக்கும் நிலையில், துஷ்பிரசாரம் செய்வதுபோல்தான் அமைகிறது. விவசாயத் துறையை எடுத்துக் கொண்டால் அதில் கணிசமானதொரு முன்னேற்றத்தை அடைந்திருக்கிறோம். அறிவு வளர வளர, நாகரிகம் வளர வளர தேவை அதிகப்படுகிறது. ஒரு வேளை சாப்பிட்டவன் இரண்டு வேளை சாப்பிடவும், இரண்டு வேளை சாப்பிட்டவன் பருப்பு ரசம் வேண்டுமென்று கேட்கிற அந்த நிலையில்தான் போய்கொண்டிருக்கிறோம். எங்கெல்லாம் நீர்த்தேக்கங்கள், அணைக்கட்டுகள் இவைகள் கட்டவேண்டுமோ அவைகளை ஓரளவு கட்டியிருந்தாலும் இன்னும் சில சிறு சிறு நீர்த்தேக்கங்கள் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். தற்போதைய நமது நிதியமைச்சர் அவர்களும், சென்ற முறை இருந்த மராமத்து அமைச்சர் அவர்களும் எனது தொகுதியில் நாலைந்து திட்டங்களை நிறைவேற்றிக் கொடுத்தார்கள். அதனால் பல ஆயிரக் கணக்கான ஏக்கர் நிலங்கள் பாசனவசதி பெற்று, அதன் காரணமாக மக்கள் பூரிப்படைகிறார்கள். அதற்காக, எனது தொகுதி மக்கள் சார்பாக அரசாங்கத்திற்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த ஆண்டில் கூட, மஞ்சள் நதி திட்டம் கொண்டுவரப்படுவதாக தெரியவில்லை. இந்த மஞ்சள் நதி திட்டம் என்பது தனியாக இருக்கிறது. இது போன்று இன்னும் பல சிறிய சிறிய திட்டங்கள் இருக்கின்றன. இவைகள் ஒன்றும் இப்போது எடுத்துக்கொள்வதாக தெரியவில்லை. எங்கள் பிரதேசம் மிகவும் வறண்ட பிரதேசமாக இருக்கிறது. இந்த இடங்களுக்கு முக்கியமாக "ஆர்ட்டிஷன் வெல்ஸ்" அதாவது குழாய் கிணறுகள் அதிகமாக வேண்டும். எங்கள் நிலக்கோட்டை தாலுகாவிலுள்ள சட்டைக்காரன்கோவில் என்ற

3rd July 1962] [திருமதி எ. எஸ். பொன்னம்மாள்]

இடத்தில் 1,000 ஏக்கர் புறம்போக்கு நிலங்கள் அப்படியே இருக்கின்றன. இந்த இடத்தை விவசாய அமைச்சராக இருந்த கனம் பக்தவத்சலம் அவர்கள்கூட வந்து பார்வையிட்டிருக்கிறார்கள். இந்த இடத்தில் அதிகமான அளவில் குழாய் கிணறுகளை தோண்டி, கூட்டுறவு முறையில் விவசாயம் செய்தால் இன்னும் அதிகமான அளவில் உணவு உற்பத்தியை அதிகரிக்க முடியும். அதோடு அந்தப் பகுதியிலுள்ள மக்களுக்கும் ஓரளவு வேலை கிடைக்கும். ஆகவே இதில் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்கிறேன். குழாய் கிணறுகளுக்கு 10 சதவிகிதம் மானியம் அளிக்க இருப்பதை 25 சத விகிதமாக உயர்த்தினால் நன்றாக இருக்கும். 10·30 a.m.

அடுத்தபடியாக, உர வினியோகத்தை எடுத்துக்கொண்டால், மக்கள் செயற்கை உரத்தைத்தான் அதிகமாக விரும்புகிறார்கள். செய்ற்கை உரம் போதிய அளவில் மக்களுக்கு கிடைக்கவில்லை. ஆகவே போதிய அளவு இந்த உரம் கிடைப்பதற்கு அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இயற்கை உரத்தைப் பொறுத்த அளவில், பஞ்சாயத்து யூனியன்கள் சார்பில் ஆங்காங்கு இருக்கின்ற கிராம சேவக்குகள் கிராம மக்களிடத்தில் சொல்லியும்கூட, மக்கள் இதைப் பற்றி புரிந்து கொள்ளாத நிலையில்தான் இருக்கிறார்கள். சிறு குழி போட்டு, அதில் அன்றாடம் கிடைக்கக்கூடிய கழிவுப் பொருள்களைப் போட்டால் இயற்கை உரமாக தயாரிக்க முடியும். ஆகவே இதற்கு ஊக்கம் கொடுக்கின்ற முறையில் அரசாங்கம் ஓரளவுக்கு மான்யம் கொடுத்தால் நன்றாக இருக்கும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

கிராப்-இன்ஷுரன்ஸ் திட்டத்தை எடுத்துக்கொண்டால், இதற்கு ஐந்தாண்டுத் திட்டத்தில் வழிவகை செய்யப்படவில்லை என்று கருதுகிறேன். பயிர்களுக்கு அடிக்கடி பூச்சித் தொல்லை ஏற்படுகிறது. வெள்ளம் வந்து விடுகிறது. இதற்கு நிவாரணம் அளிப்பதற்கு துரிதமான நடவடிக்கை எடுத்தும் கூட, இந்த இன்ஷுரன்ஸ் திட்டம் அமலில் இருந்தால் தான் விவசாயிகளின் வாழ்க்கை நல்ல முறையில் அமையும் என்பதை அமைச்சர் அவர்களுக்கு தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கல்வியை எடுத்துக்கொண்டால், அரசியல் சுதந்திரத்தைப் பெற்றிருக்கிற நாம் அனைவரும் பொருளாதார சுதந்திரம் பெற வேண்டும் என்றால் எல்லோரும் படித்தவர்களாக அமைய வேண்டும். அப்போது தான் எல்லோருக்கும் தொழில் வாய்ப்பு ஏற்பட முடியும். அந்த லட்சியத்தின் பேரில் தான் நாம் கல்விக்காக கோடிக்கணக்கான அளவில் செலவு செய்து வருகிறோம். இதைப் பற்றி ஆராய்ந்து பார்க்கும் போது பெண்களுக்கு கல்வி மிகவும் அவசியம் என்பதை உணர்ந்து அமைச்சர் அவர்கள் தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அமைச்சர் அவர்கள் தனது உரையில் "நான் கல்வி இலாகா பொறுப்பை ஏற்ற பிறகு பெண்களிடையே இன்னும் கல்வியைப் பரவலாகச்

[திருமதி எ. எஸ். பொன்னம்மாள்] [3rd July 1962

செய்வதற்கு விசேஷ முயற்சிகள் தேவை யென்று எனக்குத் தோன்றியது. அதுவும் முக்கியமாக பெண்களுக்கென தனி உயர்நிலைப் பள்ளிகள் இன்னும் அதிகம் வேண்டும் என்று பட்டது. எனவே இந்த ஆண்டு அங்கீகாரம் கொடுக்கிற 195 உயர்நிலைப் பள்ளிகளில், 34 உயர்நிலைப் பள்ளிகள் பெண்களுக்கென தனிப் பள்ளிகள்" என்று கூறியிருக்கிறார்கள். இதை நான் மிகவும் வரவேற்கின்றேன். பெண்களின் சார்பாக அதற்கு நான் அமைச்சர் அவர்களுக்கு பாராட்டுதல்களையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால் என்னுடைய தொகுதியைப் பொறுத்த வரையில் அமைச்சர் அவர்களுக்கு என் இரக்கம் வரவில்லை என்று தெரியவில்லை.

சோழவந்தானிலுள்ள பெண்குழந்தைகள் ஒன்றரை மைல் நடந்து சென்று ரயில்வே கிராஸிங் எல்லாம் கடந்து சென்றுதான் இப்போது பள்ளிக்கூடத்திற்கு போய்க்கொண்டிருக்கிறார்கள். இதை தவிர்ப்பதற்காக சோழவந்தானிலேயே ஒரு பெண் பள்ளிக்கூடம் ஏற்படுத்த வேண்டும் என்று முயற்சி செய்தேன். அமைச்சர் அவர்கள் எப்போதும் போல் "பார்க்கலாம்" என்று சொன்னார்கள். நான் இப்படி "பார்க்கலாம்" என்று சொன்ன வார்த்தைகளை நம்பிக்கொண்டிருந்தேன். "பார்க்கலாம்" என்று சொல்லியே பல காரியங்களை சாதித்துத் தந்திருக்கிறார்கள். அந்த முறையில் இதிலும் "பார்க்கலாம்" என்று சொன்னதை நம்பி, பள்ளிக்கூடம் ஆரம்பிப்பதற்கு வாடகை கட்டிடம் கேட்டுப் பார்த்தேன். கிடைக்கவில்லை. பின்னால் பலரிடமிருந்து பணம் வசூல் செய்து இடத்தை வாங்கி அதில் கட்டிடம் கட்டுவதற்காக அஸ்திவாரமும் போட்டு, அதற்கான எல்லா சாமான்களும் வாங்கியாய் விட்டது. இங்கு அடிக்கடி ஓடி வந்து எப்படியாவது பள்ளிக்கூடம் தந்து விட வேண்டும் என்று கேட்டுக்கொண்டிருந்தேன். பள்ளிக்கூடம் திறக்கும் தருவாயில் வந்து கேட்டபோது, "காலம் கடந்து விட்டது, இப்போது நான் என்ன செய்ய முடியும்" என்று அமைச்சர் அவர்கள் சொல்லிவிட்டார்கள். இதைப் பார்த்து நான் வேதனை அடைகின்றேன், வருத்தம் அடைகின்றேன். பெண்களுக்கு எல்லாம் தந்தையாக அமைந்திருக்கிற நமது கல்வி அமைச்சர் அவர்கள் எங்கள் இடத்திலிருந்து ஒன்றரை மைல் தூரம் நடந்து சென்று, ரயில்வே கிராஸிங் தாண்டி பள்ளிக்கூடத்திற்கு போய்க்கொண்டிருக்கும் பெண் குழந்தைகளின் பேரில் தயவு செய்து கருணை காட்ட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். நான் சட்டசபைக்கு புறப்பட்ட நேரத்தில் என் வீட்டின் முன்னால் நூற்றுக்கணக்கான பெண்கள் வந்து நின்று கொண்டு, நீங்கள் எப்படியாவது அமைச்சர்களிடம் சொல்லி, நீங்கள் அவர்களிடம் அழுவீர்களோ அல்லது கெஞ்சுவீர்களோ எங்களுக்குத் தெரியாது எப்படியாவது பெண்களுக்கு என்று ஒரு ஹைஸ்கூல் வாங்கிக்கொண்டுதான் வரவேண்டும் என்று ஆர்ப்பாட்டம் செய்தார்கள். நான் மறுபடியும் கேட்கிறேன் என்று சொல்லிவிட்டு வந்திருக்கிறேன். இப்போதும் கிடைக்கும் என்றுள்ள நம்பிக்கையின் மீது இங்கு வந்திருக்கிறேன். அவர்களிடமும் அந்த உறுதியைத்தான் கொடுத்துவிட்டு

3rd July 1962] [திருமதி எ. எஸ். பொன்னம்மாள்]

வந்திருக்கிறேன். ஆகையினால் நம்முடைய அமைச்சர் அவர்கள், பெண்கள் மீது கருணை காட்டி தயவு செய்து பெண் பள்ளிக்கூடம் ஒன்றை திறப்பதற்கு உடனடியாக அனுமதி கொடுக்கவேண்டும் என்று மீண்டும் பணிவோடு வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, பெண்களுக்கு என்று தனியாக, மதராஸில் ஒரு பாலிடெக்னிக் ஆரம்பிக்கப் போவதாக அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதைப்பார்த்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். அதே நேரத்தில், பல இடங்களிலும் சர்க்கார் ஹாஸ்டல் நடந்து வருகிறது. இவைகளில் தங்கும் மாணவர்கள் ஒரு வருடம் தோற்றுப்போய்விட்டால், அடுத்த வருடத்திற்கு ஹாஸ்டலில் இடம் இல்லை என்று சொல்லிவிடுகிறார்கள். இதை நான் வரவேற்கிறேன். அப்போதுதான் மாணவர்கள் மிகவும் கவனமாக படிப்பார்கள். இருந்தாலும் கூட, பெண்களைப் பொறுத்த வரையில், பள்ளிகளில் தோற்றுவிடுபவர்கள், மீண்டும் படிக்க முடியாத நிலை ஏற்படுவதால், அவர்கள் மீண்டும் போய் நடுவதற்கோ அல்லது வேறு வேலை செய்வதற்கோ வழியில்லாமல் போய்விடுகிறது. இதன் காரணமாக பல கஷ்டங்களுக்கும் ஆளாகிறார்கள். ஆகவே ஒவ்வொரு ஜில்லாவிலும், கனம் குழந்தை அம்மாள் அவர்கள் கூறியது போல், பெண்களுக்கு என்று தனியாக தொழிற் கல்வி அளிக்கும் பள்ளியை நிறுவினால் மிகவும் வசதியாக இருக்கும். எழாவது, எட்டாவது, ஒன்பதாவது வரை படித்துவிட்டு அதில் தவறிவிடும் பெண்களுக்கு ஒரு தொழிலை கற்றுக்கொடுப்பதற்கு வாய்ப்பு கொடுக்கவேண்டும். இதன் மூலம் அவர்கள் தொழிலைப் பயின்று, அவர்கள் தாங்களாகவே சம்பாதிப்பதற்கும் வழி ஏற்படும். ஆகவே அரசாங்கம் ஒவ்வொரு ஜில்லாவிலும் இம்மாதிரியான பள்ளிகளை நிறுவுவதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மின்சாரத்தைப் பொறுத்த வரையில், தண்ணீர் இப்போது குறைவாக இருப்பதால் மின்சாரத்தில் கட் ஏற்பட்டிருக்கிறது. மினிமம் சார்ஜ் போடும் விஷயத்தில், எந்த அளவுக்கு மின்சாரம் உபயோகிக்கின்றார்களோ அந்த அளவுக்கு மட்டும் கட்டணம் வசூல் செய்ய வேண்டுமென்றும் அது தான் ஏழை மக்களுக்கு வசதியாக இருக்கும் என்பதையும் இச்சந்தர்ப்பத்தில் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

விதைப் பண்ணைகள் ஏற்படுத்தும் விஷயத்தில், எங்கள் பக்கத்தில் தென்கரை, வடகரை கண்மாய் இடத்தில் விதைப் பண்ணைகளை ஏற்படுத்துவதற்காக இடம் பார்த்தார்கள். ஆனால் அதில் ஏற்படுவதற்கு இதுவரை நடவடிக்கை எடுத்துக்கொள்ளவில்லை. இதன் காரணமாக இப்போது அதில் அன்—ஆதரைஸ்ட் முறையில் விவசாயம் செய்கிறார்கள். பின்னால் ஏற்படும் கஷ்டங்களுக்கு நம்முடைய கழுத்தை வந்து பிடிக்கிறார்கள். ஆகவே இந்த இடங்களில் சீக்கிரமாக விதைப் பண்ணைகள் ஏற்படுத்தினால் பலவிதமான கஷ்டங்களை தீர்க்க முடியும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

[திருமதி எ. எஸ். பொன்னம்மாள்] [3rd July 1962

அடுத்து, வைகை ஆற்றில் ஜூன் ஒன்றும் தேதி தண்ணீர் திறந்து விட்டாய்விட்டது. இந்த நேரத்தில் நடவு நட்டாக வேண்டும். ஆனல் ஒரு மாதமாக சரியாக தண்ணீர் வராமல் நாற்றை எல்லாம் பாவிவிட்டு அங்குள்ள மக்கள் எல்லாம் கஷ்டமான நிலையில் இருந்துகொண்டிருக்கிறார்கள். இதை மராமத்து அமைச்சர் அவர்கள்—அவர்கள் இப்போது சபையில் இல்லை என்றாலும்—முதல் அமைச்சர் அவர்களும் நிதி அமைச்சர் அவர்களும் இருக்கிறார்கள்—இவர்கள் மராமத்து அமைச்சர் அவர்களிடத்தில் கூறி, விரைவாக இதற்கு தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று அங்குள்ள விவசாய மக்கள் சார்பாக கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, அரிஜன மக்களைப் பொறுத்தவரையில் அவர்களுக்கு நாம் எத்தனையோ மானியங்களை கொடுத்துவந்தாலும் அவர்களுடைய பொருளாதார நிலை இன்னும் முன்னேற்றம் அடையவில்லை. அவர்கள் முன்னேறவேண்டும் என்ற நிலையில், கூட்டுறவு முறையில் பஸ் நடத்தலாம் அல்லது இம்போர்ட்-எக்ஸ்போர்ட் லைசென்ஸ் கொடுத்து கூட்டுறவு முறையில் வியாபாரம் நடத்தலாம் என்று அரிஜன மக்களிடமிருந்து கோரிக்கைகள் வரும்போது, அவர்களுக்கு சலுகை கொடுத்து முதலிடம் கொடுக்கவேண்டும் என்று அமைச்சரவையைக் கேட்டுக்கொள்கிறேன். பல துறைகளில் அவர்களுக்கு சலுகை அளித்திருந்தாலும்கூட, இன்னும் அவர்கள் முன்னேற்றமடையாத நிலையில் தான் இருந்துகொண்டிருக்கிறார்கள். ஆகவே இதைப்பற்றியும் அமைச்சரவை கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, இச் சந்தர்ப்பத்தில் எனக்குப் பேச இடம் தந்ததற்கு கனம் உதவி சபாநாயகர் அவர்களுக்கு நன்றி தெரிவித்து என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* **திரு. ஆ. கு. சுப்பையா:** கனம் உதவி சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்த நிதிநிலை அறிக்கைமீது பேசுகின்ற பொழுது, சர்க்கார் எப்போதும் போல் வரி போடுகின்ற கொள்கையைத் தான் வழக்கம்போல் கடைபிடித்து வருகின்றது என்பதைத்தான் பேசவேண்டியிருக்கிறது. மாநில சர்க்கார் மட்டும் வரி போடுவதில்லை. மத்திய சர்க்காரும் வரி போடுகிறது. அது போலவே பஞ்சாயத்து யூனியன்களும், பஞ்சாயத்துக்களும் வரி போடுகிறது. இது அரசாங்கத்தின் பரம்பரை வழக்கமாகவே இருந்துவந்திருக்கிறதை நாம் பார்க்கிறோம். வரியே போடவேண்டாமென்று நான் கூறவில்லை. வரி போடவேண்டும். யார் வரி கொடுப்பதற்கு தகுதியுள்ளவர்களாக இருக்கிறார்களோ, அவர்களுக்கு வரி போடுவது நியாயமாக இருக்குமே ஒழிய, சாதாரண மக்கள்மீதெல்லாம் வரி போடுவது அநியாயத்திலும் அநியாயம் என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. காரணம் என்னவென்று சொன்னல், இது வரையிலும் கொடுத்துக்கொண்டிருக்கக்கூடிய வரியையே தாங்க முடியாமல் ஒரு பெரும் சுமையாக சுமந்துகொண்டிருக்கிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்திலே மேலும் அவர்கள்மீது வரியை விதிப்பது, அவர்கள் முதுகெலும்பை ஒடிக்கக்கூடியதாக, இன்றையத் தினம் அரசாங்கத்தின் நடவடிக்கையாக அமைந்திருக்கிறது என்பதை

3rd July 1962] [திரு. ஆ. கு. சுப்பையா]

நாம் பார்க்கிறோம். அதற்குப் பதிலாக, பெரிய செல்வந்தர்கள் எல்லாம் இருக்கிறார்கள். பெரிய தொழிற்சாலைகளை வைத்திருக்கக் கூடியவர்கள் எல்லாம் இருக்கிறார்கள். அப்படி லட்சக்கணக்கான, கோடிக்கணக்கான வருமானம் வருகின்ற துறைகளை யெல்லாம் சர்க்கார் எடுத்துக்கொண்டு நடத்துவதற்கு முன்வருவார்களானால், சாதாரண மக்கள்மீது வரி போடவேண்டிய அவசியம் இருக்காது. நில வரி அதிகமாக போடப்பட்டிருக்கிறது. சர்க்கார் வேறு வரி போடுகிறார்கள். பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் வேறு வரி போடுகிறது. திட்டங்கள் நிறைவேற்ற வேண்டுமென்று ரூபாய்க்கு ரூபாய் வரி போடுகிறார்கள். ரூபாய்க்கு 50 நயா பைசா வரி போடுகிறார்கள்; ரூபாய்க்கு 25 நயா பைசா வரி போட்டிருக்கிறார்கள். இப்படி போடப்படுகின்ற வரியை வசூல் செய்ய முடியாமல் இன்றையத் தினம் பஞ்சாயத்து வேலைகள் செய்ய முடியாது, சர்க்கார் மானியமும் பெற முடியாது தேக்கமான நிலைமை இருக்கிறது என்பதை இந்த நேரத்திலே சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

விவசாயத் துறையில் அபிவிருத்தி ஏற்பட்டு இருக்கிறது என்பது உண்மையே. ஆனால் இதில் இருக்கக்கூடிய சில குறைபாடுகளையும் போக்கியாகவேண்டும். ரசாயன உரம் கிடைப்பதிலே, குத்தகை சாகுபடிதாரர்களுக்கு தாராளமாக கிடைப்பதில்லை. காரணம் என்னவென்று சொன்னால், குத்தகை சாகுபடிதாரர்களுக்கு கடன் கொடுப்பதில்லை. கூட்டுறவு சங்கங்களிலே அவர்களுக்கு கடன் கொடுப்பதற்கு முடியாது. இந்த நிலைமையை, குறைபாட்டை போக்கியாகவேண்டும். குத்தகைக்காரர்கள் பாதுகாப்பு சட்டம் இருந்தும்கூட, சில குத்தகைக்காரர்களுக்கு நிலத்தின் சொந்தக்காரர்களால் சீட்டு எழுதி கொடுக்க முடியாத ஒரு நிலைமை இன்றைய தினமும் இருந்துகொண்டுவருகிறது என்பதை இந்தச் சபையின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். இப்படி மிராசுதாரர்களும், குத்தகைக்காரர்களுக்கு சீட்டு எழுதி கொடுப்பதில்லை; அதோடு குத்தகைதாரர்கள் நெல் அளக்கக்கூடியதற்கும் எவ்விதமான ரசீதும் கொடுப்பதில்லை. இத்தகைய நிலையிலே சில குத்தகைதாரர்கள் விவசாயம் செய்து கொண்டு வருகிறார்கள். இதைப் போக்குவதற்கும் அரசாங்கம் நடவடிக்கைகள் எடுத்தாக வேண்டும்.

சிறு நிலக்காரர்கள் கடன் வாங்கியேதான் தங்கள் குடும்பங்கள் நடத்தவேண்டியிருக்கிறது. அத்தகைய முறையிலேதான் கடன் வாங்கி சாகுபடி தொழில் நடத்தக்கூடிய நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. அப்படி வாங்கிய கடனை திருப்பிக் கொடுக்க முடியாத ஒரு நிலைதான் நாட்டிலே இருந்துகொண்டுவருகிறது என்பதை நான் இந்தச் சபையின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். ஆகவே, இந்தக் குடியானவர்களுக்கு, சிறு நிலச் சொந்தக்காரர்களுக்கு கடன் நிவாரண சட்டம் கொண்டுவருவது உசிதமாக இருக்கும் என்பதை இந்தச் சந்தர்ப்பத்திலே தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அதுபோலவே நில வெளியேற்றத்தைத் தடுப்பதற்கான ஒரு சட்டம் அமுலில் இருந்துகொண்டு வருகிறது. இந்தச் சட்டமும் கூடிய சீக்கிரத்தில் ரத்தாகப்

[திரு. ஆ. கு. சுப்பையா] [3rd July 1962

போவதால், இந்தச் சட்டத்தையும் நீடிக்கவேண்டுமென்றும், அப்படி நீடித்து விவசாயிகளுக்கு பாதுகாப்பு கொடுக்கவேண்டு மென்றும் நான் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, குடியிருப்பு மனை சம்பந்தமாக யாரையும் அப்புறப்படுத்தக்கூடாது என்று ஒரு சட்டம் இருக்கிறது. ஆனால் எங்களுடைய ஜில்லாவை எடுத்துக்கொள்வீர்களானால், பெரும் பாலானவர்கள் இன்றையத் தினம் குடியிருப்பிலிருந்து வெளி யேற்றக்கூடிய ஒரு பயங்கரமான நிலைமை இருந்துகொண்டி ருக்கிறது. குடியிருப்புக்காரர்கள் கோர்ட்டுக்குச் சென்று வரு வதும், வக்கீல்கள் வீட்டுக்குச் சென்று அலைந்து வருவதுமான ஒரு நிலைமைத்தான் இருக்கிறது. இன்னும் சிலர் வேறு என்ன செய் வது என்று தெரியாது அலைந்த வண்ணமாய் இருக்கிறார்கள். இப்படி குடியிருப்புக்காரர்கள் இன்றையத் தினம் கஷ்டப்படக் கூடிய நிலைமைதான் இருக்கிறது என்பதையும் நான் இந்தச் ச்பையின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். ஆனால் இம் மாதிரி குடியிருப்பில் உள்ளவர்களை வெளியேற்றக்கூடாது என்று சட்டம் வந்திருப்பது கிராமத்தில் உள்ள ஜனங்களுக்கு தெரியாது. ஆகவே, அதை நல்லமுறையிலே சர்க்கார் தங்கள் நிர்வாகஸ்தர் களின் மூலமாக இம்மாதிரி குடியிருப்பில் இருந்து வெளியேற்றக் கூடாது என்று வந்துள்ள சட்டத்தை விளம்பரப்படுத்தியாக வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

விதை ஆராய்ச்சிப் பண்ணை ஒன்று தஞ்சை மாவாட்டத்திலே அமைக்கப்போவதாக கனம் அமைச்சர் அவர்கள் தங்களுடைய பிரசங்கத்திலே கூறியிருக்கிறார்கள். தஞ்சை மாவட்டத்திலே, மன்னார்குடி தாலுகா மையமாக இருப்பதால் அங்கு இந்த விதை ஆராய்ச்சிப் பண்ணையை அமைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

பஞ்சாயத்து ஆட்சி முறை மிகவும் தாமதமாகவே நடந்து கொண்டிருக்கிறது. எங்களுடைய கிழத் தஞ்சையை எடுத்துக் கொள்வீர்களானால், அங்கு 14 லட்சம் ரூபாய்க்கு வரி போட்டு இருக்கிறார்கள். ஆனால் அப்படி போட்டதிலே, 7 லட்சம் ரூபாய் தான் வசூல் செய்யப்பட்டிருக்கிறது. ஏழு லட்சம் ரூபாய் வசூல் செய்ய முடியாது தேக்கமான நிலை ஏற்பட்டிருக்கிறது. இதற்கு என்ன காரணம் என்று சொன்னால், பஞ்சாயத்து நிர்வாகத் தலைவர் வரி வசூல் செய்துகொண்டுவந்ததை இப்போது கிராம அதிகாரிகளிடம் ஒப்படைத்திருக்கிறார்கள். நிர்வாக மாற்றத்தின் காரணமாக பஞ்சாயத்துத் தலைவர்களுக்கும், கிராம அதிகாரி களுக்கும் சரியான உறவு இல்லை. இப்படி வசூல் செய்ய முடியாத நிலைமை ஏற்பட்டிருப்பதால், பஞ்சாயத்து வேலை களைச் செவ்வனே செய்ய முடியாத ஒரு தேக்கம் ஏற்பட்டிருக் கிறது. இம்மாதிரி நிர்வாகத்தில் உள்ள தடைகளைப் போக்கு வதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்.

அடுத்து, தஞ்சை ஜில்லாவிலே ஆறுகள் நிறைய ஓடுகின்றன. இவைகளை இணைப்பதற்கு ரோடு வசதி கிடையாது. இங்கு பெரிய பெரிய பாலங்களைக் கட்டி, ஒவ்வொரு ரோடுகளையும்

3rd July 1962] [திரு. ஆ. கு. சுப்பையா]

இணைக்கவில்லை என்று சொன்னால், வெள்ளக் காலங்களிலே ஆறு களிலே நிறைய தண்ணீர் வருகின்றபோது இந்த ஆறு களின் குறுக்கே போவது மிகவும் சிரமமாக இருக்கும். ஓர் ஊரி லிருந்து மற்றொரு ஊருக்கு போகவேண்டுமென்றால், பல முறை களுக்கு நடந்து செல்ல வேண்டிய நிலைமை இருக்கிறது. ஆகவே, பல ஆறுகளுக்கு பாலங்கள் கட்டவேண்டியது அவசியமாக இருக் கிறது. அதையும் அரசாங்கத்தின் கவனத்திற்கு நான் கொண்டு வர விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, கடலோர பிரதேசங்களில் வெள்ளக் காலங் களிலே கடல் பொங்கி, அங்குள்ள உப்பு நீர் உள்ளே புகுந்து விடுகிறது. அதன் காரணமாக சாகுபடிக்கு லாயக்கான நிலங்கள் மிகவும் பாதிக்கப்படுகிறது. பயிர்கள் கருகிவிடுகின்றன. அதற்கு பாதுகாப்பு அளிக்கக்கூடிய வகையில், தண்ணீர் உள்ளே வராதபடி பெரிய அணைகள் கட்டியோ அல்லது வேறு வழிகளிலோ அதைத் தடுப்பதற்கான மார்க்கங்களை உண்டாக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, அதற்கு சர்க்கார் ஆராய்ச்சி செய்து பார்த்து அதைத் தடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும்.

அடுத்து, மின்சார வசதியை எடுத்துக்கொள்வீர்களானால், மிகவும் மோசமான நிலைமை இருக்கிறது. நேற்று பேசிய மதிப் பிற்குரிய சட்டமன்ற உறுப்பினர் அவர்கள், தாய் இல்லாத பிள்ளை யாக தஞ்சை ஜில்லா இருக்கிறது என்று கூறினார்கள். ஆனால் நான் சொல்கிறேன். தாய் இல்லாப் பிள்ளை மாத்திரம் அல்ல, தந்தை இல்லாப் பிள்ளையாகவும் இருக்கிறது. இப்படித் தாயும் தந்தையும் இல்லாத அனாதைப் பிள்ளை மாதிரி, மின்சார விஷயத் திலே தஞ்சை ஜில்லா இன்றையத் தினம் இருந்துகொண்டிருக் கிறது என்பதை வருத்தத்தோடு சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். கீழத் தஞ்சையை எடுத்துக்கொண்டால், 737 பஞ்சாயத்து கிராமங்கள் இருக்கின்றன. இந்த 737 பஞ்சாயத்து கிராமங்களில், 252 பஞ்சாயத்து கிராமங்களுக்குத்தான் மின்சார விஸ்தரிப்பு கொடுக்கப்பட்டிருக்கின்றது. மற்ற 435 கிராமங்களுக்கு மின்சார விஸ்தரிப்பு செய்யப்படவில்லை என்பதை இந்தச் சந்தர்ப்பத் திலே தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அதுபோலவே, விவசாயத் தொழில் தொழிலாளர்களுக்கு பல சட்டங்களின் மூலம் பாதுகாப்பு வேண்டும். எல்லாத் தொழிலுக்கும் சட்ட மிருக்கிறது. ஆனால் விவசாயத் தொழிலாளர்களுக்கு சட்டமே கிடையாது. ஆகவே விவசாயத் தொழிலாளர்களுக்கு பல சட்டங்கள் செய்து, பாதுகாக்கவேண்டும். அன்றாடம் வேலை செய்யும் கூலிகளுக்கு குறைந்த பட்ச கூலி நிர்ணயச் சட்டம் செய்யவேண்டும். நிர்ணயமான கூலி விகிதம் இல்லாததால் அகவிலை உயர்வை அனுசரித்து விவசாயத் தொழிலாளர்கள் கூலி உயர்வு கேட்டால், மிராசுதார்கள் கூலி கொடுக்க மறுக் கிறார்கள். மறுப்பது மாத்திரமல்ல, பல்வேறு நெருக்கடிகளும் கொடுக்கிறார்கள். வேலை கொடுக்க மறுப்பதும், குடியிருப்பி லிருந்து வெளியேற்றுவதும், போலீஸில் புகார் செய்து பல தொந் தரவுகள் செய்வதும் போன்ற பழிவாங்கும் நிலைமை ஏற்படுகிறது.

[திரு. ஆ. கு. சுப்பையா] [3rd July 1962

இந்த நிலைமைக்கு ஆளாக்கப்படுவது அதிகமாக ஹரிஜன மக்கள் தான் என்பதை அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டு வருகிறேன். ஆகவே, நான் கூறியதை கவனத்தில் எடுத்துக் கொண்டு ஒரு குறைந்தபட்ச கூலி நிர்ணய சட்டத்தை அவசியம் கொண்டு வரும்படி கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

* **திரு. வி. எல்லம்ம நாயுடு:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையை கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்தச் சபையில் சமர்ப்பித்துள்ளார்கள். அதை ஆதரித்து என்னுடைய கருத்துக்களை இந்தச் சபை முன்பு தெரிவிக்கிறேன். சிறந்த அறிவாளியும், நீண்ட நாட்களாக அமைச்சர் அவையிலே பணியாற்றியவருமான நிதி அமைச்சர் அவர்கள் பல உயர்ந்த நோக்கங்களோடு இந்த நிதிநிலை அறிக்கையும், பட்ஜெட்டையும் சமர்ப்பித்திருக்கிறார்கள்.

குறிப்பாக, விவசாயிகளைப் பற்றி அவர் கொடுத்துள்ள அறிக்கை சம்பந்தமாக ஒன்றிரண்டு வார்த்தைகளைச் சொல்லு கிறேன். விவசாயிகளுக்கு நஞ்சை நிலங்களின்மீது வரி விதிக்க லாம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். நஞ்சை நிலங்களை வைத்திருப்பவர்களில் சிறிய விவசாயிகள், பெரிய விவசாயிகள், நஞ்சை நிலத்தை அதிகமாக நூற்றுக்கணக்கான ஏக்கர்களை வைத்திருப்பவர்கள் இவர்களுக்குள்ளே பாகுபாடு காண்பிக்காமல் இருக்கக்கூடாது. நஞ்சை நிலங்களின்மீது 30 ஆண்டுகளாக வரி உயர்த்தப்படவில்லை என்று சொன்னார்கள். அதுசரியான நியாயம்தான். ஆனால், அதற்காக சராசரியாக எல்லா ஏழை விவசாயிகளுக்கும் கூட இந்த வரி வந்துவிடுமோ என்று பயப்படு கிறார்கள். அம்மாதிரி இல்லாமல் இருப்பதற்கு உரிய முறையை வகுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இரண்டாவதாக, விவசாயிகளுக்கு வரி எவ்வளவு விதித்தாலும் கூட அவர்கள் கொடுப்பதற்கு தயாராக இருக்கிறார்கள். அதே சமயத்தில் அவர்களுக்கு நாம் கொடுக்கவேண்டிய சலுகைகள், செய்து கொடுக்கவேண்டிய வசதிகள் சரியான காலங்களிலும், சரியான முறையிலும் கிடைப்பதில்லை என்றுதான் அவர்கள் சொல்லுகிறார்கள். விவசாய இலாகாவிலிருந்து விவசாயிகளுக்கு வரி விதிக்கிறோம். விவசாயப் பொருள்களின் விலை ஏறிவிட்டது, அதைக் குறைக்கவேண்டும் என்று ஒரு சாரார் கூச்சலிடுகிறார்கள். அதற்காக கூட்டங்கள் போடுகிறார்கள். அம்மாதிரி விலை ஏற்றம் ஏற்படக்கூடாது என்று விவசாயிகள் அவர்களுடைய நியாயமான கோரிக்கைகளை சொல்லிக்கொள்ளுகிறார்கள் அல்லது கேட்கிறார் கள். விவசாய உற்பத்தியில் ஏற்படும் லாபத்தைக் காட்டிலும் பல மடங்கு அவர்கள் பொருள்களுக்கு விலை கொடுத்து வாங்கவேண்டி யிருக்கிறது. அவர்கள் வாங்கும் ஒவ்வொரு சாமானின் விலையும் 4, 5 மடங்கு உயர்ந்துவிட்டது. இலாகாவினால் கொடுக்கப்படு கிற டிராக்டர்கள், புல்டோஸர்களுக்கு 10 ஆண்டுகளுக்கு முன்பு நாம் என்ன வாடகை கொடுத்துவந்தோம், இப்பொழுது என்ன வாடகை அவர்களிடத்திலிருந்து வாங்குகிறோம் என்று பார்த்

3rd July 1962] [திரு. வி. எல்லம்ம நாயுடு]

தால், சுமார் 4 மடங்குக்கு மேலாக வசூலிக்கிறோம். ரூபாய் 7, 9
ஆக இருந்த புல்டோஸர் வாடகை ரூ. 25 ஆக உயர்த்தப்பட்டிருக்
கிறது. இதற்கு மேல் நாம் அவர்களுக்கு வரிகளையும் விதிக்கிறோம்.
அவர்களும் கொடுக்கிறார்கள். மேலும், அவர்களுக்கு கொடுக்கக்
கூடிய இயந்திரங்களாவது சரியானபடி வேலை செய்கின்றனவா
என்றால், இல்லை. ஆண்டுக்கு சராசரி பாதி நாட்களுக்குக் கூட
இந்த இலாகாவில் வேலை நடைபெறுவதாகத் தெரியவில்லை. எப்
பொழுது சென்று கேட்டாலும் தொல்லைதான். விவசாயிகளுக்கு
இந்த இயந்திரங்களை எடுத்துக்கொண்டால் அது ஒரு தொல்லை
யாகவே இருக்கிறது. என்னுடைய தொகுதியில் புல்டோஸர்,
டிராக்டர் வொர்க்ஷாப், என்ஜினியரிங் ஆபீஸ் இருக்கிறது.
அடிக்கடி விவசாயிகள் இப்படித்தான் சொல்லுகிறார்கள். நான்
சென்று பார்த்தாலும் அப்படித்தான் இருக்கிறது. இதற்குரிய
முறையில் நிவாரணம் அளிக்கவேண்டும். இந்த ஆண்டு 10, 14
புதிய இயந்திரங்கள் வாங்கப்போவதாகவும், அடுத்த ஆண்டு 10,
15 இயந்திரங்கள் வாங்கப் போவதாகவும் சொல்லப்படுகிறது.
அப்படி வாங்கினாலும்கூட போதுமா என்று சொல்ல முடியாது.
ஏற்கனவே உள்ள இயந்திரங்கள் நல்ல முறையில் வேலை செய்யும்
படி அவைகளை ரிப்பேர் செய்யவில்லை. ஏற்கனவே உள்ள இயந்திரங்
களை சரியாக ரிப்பேர் செய்வதிலோ அல்லது மற்ற சாதனங்களை
வாங்குவதிலோ ஆங்காங்கு உள்ள அதிகாரிகள் அதிக கவனம்
செலுத்தவேண்டும். உடனடியாக அதை என்ஜினியர்களும்
கவனிக்க ஏற்பாடு செய்தால் நலமாக இருக்கும். குறைந்த
பட்சம் ஒரு தாலுகாவிற்கு ஒன்றாவது இருக்கவேண்டும். இப்
பொழுது சில தாலுகாக்களில் ஒன்றுக்கு மேல் இருக்கலாம்.
அவைகள் சில இடங்களில் தான் இருக்கின்றன, மற்ற இடங்
களுக்கு கிடைக்கவில்லை. அதை மாற்றுவதற்கு அரசாங்கம்
உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவது நல்லது.

கல்வித் துறையிலே நல்ல முன்னேற்றத்தைக் காண்கிறோம்.
ஆனாலும்கூட, நேற்று பல நண்பர்கள் ஆசிரியர்கள் மீது யூனியன்
களும் அரசாங்கமும் நடவடிக்கை எடுக்கின்றன என்று சொன்னார்
கள். மொத்த வருமானத்திலே நான்கில் ஒரு பங்கை அரசாங்கம்
கல்விக்காக செலவு செய்கிறது. அப்படி செலவு செய்தும், அந்தக்
கல்வியின் தரம் எவ்வாறு இருக்கிறது என்று பார்க்கவேண்டும்.
கிராமங்களில் கல்வி புகட்டுபவர்களின் எண்ணம் என்ன என்பதை
யெல்லாம் கவனிக்கவேண்டும். அரசாங்கத்தினிடமிருந்தும், மக்
களிடமிருந்தும் நாம் வரிப் பணத்தைப் பெற்று ஆசிரியர்களுக்
கும், பள்ளிகளுக்கும் செலவு செய்கிறோம். ஆனால் அம்மாதிரி
பணம் செலவழிப்பதில் நல்ல பலன் கிடைக்கவேண்டியது அவசி
யம். எல்லா மக்களும் வரி கொடுக்கிறார்கள். எதிர்க்கட்சிக்காரர்
கள் நாங்களும் கூடத்தான் வரி கொடுக்கிறோம், அதற்காக அவர்
கள்மீது குறை சொல்லவேண்டாம் என்று நினைக்கலாம். எல்லோ
ரும் வரி கொடுக்கிறோம். அந்த வரிப் பணத்தைப் பெற்று வேலை
செய்யும் ஆசிரியர்கள் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதை நாம்
நன்கு கண்காணிக்கவேண்டும். அது ஒரு பெரிய குறை. எல்லா
இடங்களிலும் அரசியல் கட்சி புகுந்துகொண்டு, அவர்கள் அரசி
யல் செய்வதற்கு இடம் கொடுக்கக்கூடாது. பள்ளி ஆசிரியர்களா

[திரு. வி. எல்லம்ம நாயுடு] [3rd July 1962

கவும், ஆசான்களாகவும் இருந்துகொண்டு அவர்கள் இந்த அரசியல் வேலை செய்யவேண்டாம். அவர்கள் கல்வித் துறையில் மட்டும் கவனம் செலுத்துமாறு அரசாங்கம் பார்த்துக்கொள்ளுவது நலம் அதேபோல மின்சாரக் கட்டணம் உயர்த்தப்பட்டிருக்கிறது. அதன் மீது வரி போடலாம் என்று அமைச்சர் அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். மின்சாரக் கட்டணத்தை உயர்த்துவது நியாயம் தான். ஆனால், ஏற்கனவே விவசாயிகளின் மீது அதிக கட்டணம் சுமத்தப்பட்டிருக்கிறது என்பது பல ஆண்டுகளாக சொல்லிவரக் கூடிய ஒன்று. இந்த ஆண்டிலும்கூட விவசாயிகள் உபயோகிக்கும் மின்சாரத்திற்கும், வீட்டு விளக்கிற்கு உபயோகிக்கும் மின் சாரத்திற்கும் வரியை சற்று உயர்த்தலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். அதையெல்லாம் யோசித்து, அதனால் சிறிய விவசாயிகள் பாதிக்கப்படாமல் இருக்கவேண்டும். நாம் எந்த வரியைப் போட்டாலும் போடக்கூடிய வரியானது கீழ்நிலையிலே, கீழ்தட்டிலே உள்ள மக்களை பாதிக்காத முறையிலே போடுவதற்கு உரிய வகையிலே மாறுதல் செய்வது நலம். மற்ற வரிகள் விதிக்கவேண்டிய நிலையிலே தான் இருக்கின்றன. வரி விதிப்பு இல்லை என்றால், அரசாங்கமோ மற்ற அபிவிருத்தி திட்டங்களோ நடைபெறுவதற்கு ஏதுவாக இருக்காது. அப்படி வரி விதித்து, அந்த வரிகளை செவ்வனே நல்ல முறையில் செயல்படுத்த ஆவன செய்வதற்கு அரசாங்கம் நல்ல கண்காணிப்போடு இருந்துவருகிறது, நல்ல முறையிலே செயல்பட்டுவருகிறது.

அதோடுகூட, விவசாயிகளுக்கு உள்ள இன்னும் சில குறைபாடுகளையும் சொல்ல விரும்புகிறேன். அத்தியாவசியமான உரம், சிமிண்டு போன்ற பொருள்கள் கிடைப்பதில்லை. எங்கு சென்று கேட்டாலும், ஒன்றிரண்டு மடங்கு அதிக விலை கொடுத்துதான் வாங்குகிறோம் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். அவைகள் நியாயமான முறையில் விவசாயிகளுக்கு கிடைப்பதற்கு வழி வகைகள் செய்யவேண்டும். குழாய் கிணறுகள் எழுப்புவதற்கு அரசாங்கம் நன்கொடையாகவும், கடனாகவும் பணம் கொடுத்து உதவப் போகிறது என்று குறிப்பிட்டிருக்கிறது. அதேபோல மற்ற கிணறுகள் வெட்டுவதற்குக்கூட கடன் கொடுத்து வந்திருக்கிறோம். அந்தக் கடனில் ஒரு பகுதியை அவர்களுக்கு மான்யமாகக் கொடுத்து உதவினால் நலமாக இருக்கும்.

புறம்போக்கு நிலங்களை பஞ்சாயத்துகளுக்கு கொடுத்து விட்டோம் என்று நாம் சொல்லுகிறோம். ஆனால், கிராமங்களில் ஆக்கிரமிப்பு இல்லாத புறம்போக்கு நிலங்களே அநேகமாக இருக்காது என்று நான் கருதுகிறேன். என்னுடைய அனுபவம் அதுதான். புறம்போக்கு நிலங்களில் உள்ள ஆக்கிரமிப்பை அப்புறப்படுத்திவிட்டு அங்கே உரக் குழிகளை தோண்டுவதோ அல்லது உரம் போடுவதோ அல்லது மற்ற வகையில் உதவி செய்வதோ முடியாமல் பஞ்சாயத்துகளுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ஆக்கிரமிப்பு அப்புறப்படுத்துவதற்கும் நடவடிக்கை எடுப்பதென்றால், அது கிராம அதிகாரிகள் அல்லது ரெவின்யூ அதிகாரிகள் செய்ய வேண்டிய வேலை. மேலே உள்ள அதிகாரிகள் என்ன சொன்னாலும், கீழே உள்ள அதிகாரிகள் அதற்குரிய

3rd July 1962] [திரு. வி. எல்லம்ம நாயுடு]

நடவடிக்கை எடுப்பதாகத் தெரியவில்லை. ஆகையால், புறம் போக்கு நிலங்களை பஞ்சாயத்துகளுக்கு மாற்றியிருப்பதோடுகூட, அதிலே உள்ள ஆக்கிரமிப்புகளை அப்புறப்படுத்துவதற்கு உள்ள அதிகாரத்தையும் பஞ்சாயத்துகளுக்கோ அல்லது யூனியன்களுக்கோ கொடுத்து, ஆக்கிரமிப்பை அப்புறப்படுத்துவதற்கு உதவினுல் நலமாக இருக்கும்.

இன்னொரு விஷயத்தையும் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். என்னுடைய தொகுதியில் குறிப்பாக தொண்டமுத்தூர் தொகுதியில் 1930-ம் ஆண்டிலே சர்வே செய்யப்பட்ட மேல் பவானி திட்டம் என்ன காரணத்தினுலோ கைவிடப்பட்டு விட்டது. இப்பொழுது அதை சர்வே செய்வதாக கேள்விப்படுகிறேன். அந்தத் திட்டமானது நல்ல முறையில் செயல்பட்டால் அவினுசி, கோவை, பல்லடம் தாலூகாக்களுக்கு பாசன வசதி கிடைப்பதற்கு ஏதுவாக இருக்கும். அதற்கு அரசாங்கம் ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இப்போது சர்வே செய்யப்பட்டாலும்கூட, அதையும் தவற விட்டுவிடுவார்களோ என்று அங்குள்ள விவசாயிகளும், பொது மக்களும் கருதுகிருர்கள். ஏனென்ருல் 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்று சொல்லுவது போல் மேல் பவானி திட்டமானது முன்பு கீழ் பவானி திட்டமாக மாறிவிட்டது. அது நல்லது அல்ல. மக்களுக்கு பயனுறும் வகையிலே எங்கே உற்பத்தி ஆகிறதோ அங்குள்ள மக்களுக்கு முதல் சலுகை கொடுக்கப்படவேண்டும், முதல் நியாயம் வழங்கப்படவேண்டும், பின்பு மற்றவர்களுக்கும் வழங்கப்படவேண்டும். அது தான் நியாயம். இப்பொழுது சர்வே செய்யப்படும் அப்பர் பவானி திட்டம் நல்ல முறையில் அமையவேண்டும் என்று அரசாங்கத்தையும், இந்த இலாகாவின் பொறுப்பேற்றுள்ள அமைச்சர் அவர்களையும் நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அதோடுகூட, சிறிய நீர்ப்பாசன திட்டங்களும்கூட விவசாய அமைச்சருடைய இலாகாவின் கீழே இருப்பதாக தெரிவித்தார்கள். நல்ல முறையில் அவைகளை பயன்படுத்தினுல், நமக்கு நீர் வளம் கிடைப்பதோடுகூட, மலையில் இருந்து ஓடி வரும் தண்ணீரானது ஆங்காங்கு தேக்கப்பட்டு அதனுல் படியும் வண்டல் நிலத்திற்கும், உரத்திற்கும் பயன்படத்தக்க வகையில் கிடைக்கும். அவைகளையும் அரசாங்கம் நல்ல முறையில் பரவலாகச் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். 11-00 a.m.

போக்குவரத்துத் துறையிலே இரண்டொரு வேலைகள் பல்லாண்டுகளாக பரிசீலிக்கப்பட்டும் இன்னும் செயல்படவில்லை. கோயம்புத்தூரிலிருந்து சிறுவாணி போகும் வழியில் 11|6 மைலில் நரசீபுரத்திற்குப் போகும் ரோட்டில் நொய்யல் ஆற்றில் ஒரு பாலங் கட்டுவதற்காக 1952-ஆம் ஆண்டிலிருந்து அரசாங்கம் அதற்காக முயற்சி எடுத்துக் கொண்டும், அதற்கான எஸ்டிமேட்கள் தயாரிக்கப்பட்டும், என்ன காரணத்தினுலோ தாமதம் ஏற்பட்டு வருகிறது. அந்த வேலையை துரிதமாகச் செய்து முடிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அப்பொழுதுதான் அங்கேயுள்ள மக்களுக்கு போக்குவரத்து வசதியை செய்து கொடுக்க முடியும்.

[திரு. வி. எல்லம்ம நாயுடு] [3rd July 1962

அடுத்தபடியாக அரசாங்கம் நல்ல முறையிலே கூட்டுறவு சங்கங்களுக்கு உதவியளித்து வருகிறது. ஆனல் நில அடமான பாங்குகளிலிருந்து கடன் வாங்கும்பொழுது 20 ஆண்டுகளுக்கு நீண்டகாலக் கடன்கள் வழங்கப்படுகின்றன. ஆனல் அதற்கிடையில் விவசாயச் செலவுக்காக விவசாயிகள் வேருெரு இடத்தில் இருந்து கடன் வேண்டும் என்று கேட்கிறபொழுது, இந்த நில அடமான பாங்குகளின் சம்மதம் கிடைத்தால்தான் கொடுக்கப்படும் என்று சொல்லுகிருர்கள். இந்த நிலஅடமான பாங்குகள் அதற்கு சம்மதம் கொடுப்பதில்லை. சர்க்கார் கடனுக இருந்தாலும் கூட்டுறவு சங்கங்கள் கடனுக இருந்தாலும் சரி சொத்து மதிப்பு மீது தான் கடன் கொடுக்கப்பட்டு வருகிறது. சராசரியாக சொத்து மதிப்பின் மீது பாதியளவுக்கு கடன் கொடுக்கப்பட்டு வருகிறது. ஆகவே சொத்தின் மதிப்பு இருக்குமேயானல், விவசாயிகள் மீண்டும் கடன் கேட்கும்போது கடன் வசதியளிக்க, சட்டத்தை மாற்றியாவது உதவி செய்ய வேண்டும்.

நமது சர்க்கார் நல்ல முறையிலே திட்டங்களை வகுத்திருக்கிருர்கள் என்பதைத் தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **திரு. எம். தண்டாயுதபாணி**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையை வரவேற்று இரண்டொரு வார்த்தைகள் கூறிக்கொள்ள விரும்புகிறேன். இந்த அறிக்கையிலே, விவசாயம் சம்பந்தமாக குறிப்பிடும்பொழுது, பொறுக்கு விதைகள் கிராமங்களிலே கொடுக்கப்படுவதைப் பற்றி கனம் அமைச்சர் அவர்கள் சொன்னுர்கள். பல்வேறு விதைப் பண்ணைகளிலே தயாரிக்கப்படுவதோடு மட்டும் அல்லாமல், சில மிராசுதாரர்களிடமிருந்து பொறுக்கு விதையை வாங்கி விவசாயிகளுக்கு கொடுத்து வரும் திட்டம் கடந்த ஆண்டிலிருந்து தஞ்சை ஜில்லாவிலே நடைபெற்று வருகிறது. அந்த நிலச்சுவான்தார்களிடமிருந்து அறுவடையான உடனே விதையைப் பெற்றுக் கொள்ள சர்க்கார் திட்டமிட்டிருக்கிருர்கள். ஆனல் பெரும்பகுதி விதையை மிராசுதார்கள் கொடுக்க மறுக்கிருர்கள். அதற்குக் காரணம் என்னவென்ருல், அறுவடைக் காலத்தில் நெல் விலை மிகவும் குறைவாக இருக்கிறது. ஆகவே அதைத் தேக்கி வைத்துக் கொண்டு பிற்காலத்தில் விற்ருல் அதிகமான விலைக்கு விற்கலாம் என்று அவர்கள் கருதுவதால் அந்த விதைகளை வாங்கமுடியவில்லை. ஆகவே அதற்கு சப்ஸிடி கொடுத்து, ஆனி, ஆடி மாதங்களில் நெல் என்ன விலைக்கு விற்கப்படுகிறதோ அந்த விலையைக் கொடுத்தால், கணிசமான அளவுக்கு விதைகளை வாங்கி விவசாயிகளுக்கு கொடுப்பதற்கு வாய்ப்பு ஏற்படும். இதை கனம் அமைச்சர் அவர்கள் பரிசீலித்து ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, நிலங்களின் தரத்தை ஆராய்ந்து, அதற்கு தகுந்தபடி உரமிட விவசாய ஆராய்ச்சி பண்ணைகள் நிறுவியிருப்பதாகவும், இன்னும் சில பண்ணைகளை நிறுவப்போவதாகவும் கூறி

3rd July 1962] [திரு. எம். தண்டாயுதபாணி]

யிருக்கிறார்கள். பட்டுக்கோட்டையில் 25 ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு விவசாய ஆராய்ச்சி பண்ணை இருந்தது. ஆடுதுறை விவசாயப் பண்ணையை விஸ்தரித்ததின் காரணமாக அதை எடுத்துவிட்டார்கள். இந்தப் பண்ணை ஸி.எம்.பி. பிராஜக்ட் வந்த பொழுது, அங்கே மணல் பாங்கான பகுதிகள் இருந்ததால் நிறுவப்பட்டது. ஆடுதுறை விவசாயப் பண்ணை ஏற்பட்ட பிறகு இது சரியான முறையிலே இயங்கவில்லை. ஆடுதுறைப் பண்ணையை பெரிதாக்கியதன் காரணமாக அதை எடுத்துவிட்டார்கள். அதை மீண்டும் பட்டுக்கோட்டையிலே ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தஞ்சை மாவட்டத்திலே தீவிர சாகுபடித் திட்டத்தின்கீழ் ஒருவிதைப் பரிசோதனை நிலையத்தையும் அமைக்கப்போவதாக கூறியிருக்கிறார்கள். ஏற்கனவே பட்டுக்கோட்டையில் இருந்த ஆராய்ச்சி நிலையம் தற்பொழுது ஒரு விதைப் பண்ணையாக உபயோகப்பட்டு வருகிறது. ஆகவே அந்த இடத்தில் இந்த விதைப் பரிசோதனை நிலையத்தை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கால்நடை அபிவிருத்தியைப் பொறுத்தவரையில் ஓரத்தநாட்டில் ஒரு கால்நடைப் பண்ணை நல்ல முறையில் செயல்பட்டு வருகிறது. அந்தப் பண்ணையில் பொலி காளைகள் அதிகமாக இருக்கின்றன. நல்ல ரகப் பசுக்களை வாங்கி அபிவிருத்தி செய்து வருகிறார்கள். ஆனால் பக்கத்திலுள்ள கிராமங்களில் உள்ளவர்களுக்கு நல்ல பசுக்களை விற்பதில்லை. ஆகவே பசுக்களை போதுமான அளவுக்கு பெருக்க முடிவதில்லையென்று கூறுகிறார்கள். இப்பொழுது காளைகள் வாங்குவதற்கும் பாதி மான்யமாகவும் கொடுத்திருக்கிறார்கள். அதேபோல் பசுமாடுகள் வாங்குவதற்கும் மான்யம் கொடுத்தால் கால்நடை அபிவிருத்தியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, பஞ்சாயத்து யூனியன்களுக்கு போதுமான நிதி வசதி கொடுக்கப்பட்டு இருப்பதாகவும், அவைகள் நல்ல முறையிலே செயல்பட்டு வருவதாகவும் கனம் அமைச்சர் அவர்கள் கூறியிருக்கிறார்கள். அதிலே எந்த விதமான குறைவும் இல்லை. தஞ்சை ஜில்லாவைப் பொறுத்தவரையில் ரெயில்வே செஸ் நிதி 1½ கோடி ரூபாய் இருக்கிறது. அந்த செஸ்ஸை 36 பஞ்சாயத்து யூனியன்களுக்குப் பிரித்துக் கொடுக்கவேண்டும் என்று டெவலப்மெண்ட் கவுன்சிலிலே ஒரு தீர்மானம் போட்டும்கூட, அங்கேயுள்ள கலெக்டர் அந்த நிதியைப் பிரித்துக் கொடுக்க முடியாது, அதைப் பள்ளிக்கூடங்களுக்கும், மருத்துவ மனைகளுக்கும் கொடுப்பதாகக் கூறிவிட்டார்கள். அப்படிக் கொடுத்தால் குறிப்பிட்ட ஒரு சில யூனியன்களுக்குத்தான் பணம் கிடைக்குமே தவிர நிரந்தரமாக 36 யூனியன்களுக்கும் கிடைக்கும் வாய்ப்பு இருக்காது. ஆகவே அதை சமமாகப் பங்கிட்டு 36 யூனியன்களுக்கும் கொடுத்தால், எல்லா யூனியன்களிலும் அபிவிருத்தி ஏற்படும். கனம் அமைச்சர் அவர்கள் இதைப் பரிசீலனை செய்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[திரு. எம். தண்டாயுதபாணி] [3rd July 1962

பல இடங்களிலே தொழிற்பேட்டைகளை துவக்கியிருப்பதாக வும், இன்னும் இரண்டு மூன்று இடங்களிலே துவக்கப்போவதாக வும் இந்த அறிக்கையிலே அறிவிக்கப்பட்டிருக்கிறது. பட்டுக் கோட்டையிலே ஒரு தொழிற்பேட்டையை நிறுவுவதற்கு ஏற்பாடு கள் நடந்தன. ஆனால் அது எவ்வித வளர்ச்சியும் இல்லாமல் நின்றுவிட்டது. அதைப்பற்றி இந்த அறிக்கையிலே ஒன்றும் குறிப்பிடப்படவில்லை. ஆகவே பட்டுக்கோட்டையிலே ஒரு தொழிற்பேட்டையை நிறுவவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

போக்குவரவு வசதியைப்பற்றி குறிப்பிடும்போது, தஞ்சை ஜில்லாவைப் பொறுத்தவரையில், எனக்குமுன் பேசிய அங்கத் தினர் ஆற்றுக்கரையை சாலையாக மாற்றும்படி கேட்டுக்கொண் டார். ஆற்றுக்கரையை சாலையாக மாற்றவேண்டும் என்று கேட்கும்பொழுது, ஆற்றுக்கரை பராமரிப்பை கிராமப் பஞ்சா யத்தோ அல்லது பஞ்சாயத்து யூனியனோ எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கூறுகிறார்கள். போதுமான நிதி இல்லாத கார ணத்தால் பஞ்சாயத்தோ அல்லது பஞ்சாயத்து யூனியனோ நல்ல முறையில் அதைப் பராமரிக்க முடியாது. ஆகவே பொதுப் பணி இலாகாவில் இருந்து ஹைவேஸ் இலாகாவுக்கு மாற்றிக்கொடுத்தால் நல்ல முறையிலே பராமரிக்க முடியும். பஞ்சாயத்துக்களுக்கு வருமானம் குறைவு. பெரிய ஆற்றுக்கரைகளைப் பராமரிப்பதற்கு முடியாத நிலையில் பஞ்சாயத்துக்கள் இருப்பதால், ஹைவேஸ் இலாகாவுக்கு மாற்றிக்கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள் கிறேன். தஞ்சை ஜில்லாவிலுள்ள ஈஸ்ட் கோஸ்ட் ரோடை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று ஏற்கனவே குறிப்பிடப்பட்டு எடுத்துக்கொள்வதென்றும் முடிவு எடுத்தார்கள். ஆனால் அதன் பின் அது எடுத்துக்கொள்ளப்படவில்லை. இப்பொழுது அது எந்த நிலையில் இருக்கிறது என்று தெரியவில்லை. அதை அவசியம் எடுத்து நடத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதை எடுத்துப் பராமரித்தால் கன்யாகுமரி வரையில் போக்குவரத்து வசதி ஏற்படுவதற்கு வசதியாக இருக்கும். ஆகவே இந்த ரோடை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன்.

கல்வி விஷயத்தைப்பற்றி குறிப்பிடும்போது கிராமங்களில் உயர்தரக் கல்வியை ஆரம்பிக்க பள்ளிக்கூடங்களை அமைக்க வேண்டும் என்று சொன்னால் அதற்கு 8,200 ரூபாய் வேண்டும் என்றும் அதன் மேல் மானியம் கொடுக்கப்படும் என்றும், அதற்கு முன்கூட்டியே 4,400 ரூபாய் கட்டினால் ஆரம்பிக்கப்படும் என்றும் சொன்னார்கள். அப்படி வசூலித்துக்கொடுத்தால் உயர்தரப் பள்ளிக்கூடங்களை அமைப்பதாக வாக்குறுதி கொடுத்தார்கள். அந்த முறையில் கிராமங்களில் 4,400 ரூபாய் வசூலித்துக்கொடுக் கப்பட்டும் உயர்தரப் பள்ளிக்கூடங்களை இன்னும் ஆரம்பிக்க வில்லை. பொதுமக்களிடமிருந்துதான் பணம் திரட்டிக் கொடுக்கப் பட்டது. அந்த முறையில் இந்த ஆண்டு 192 பள்ளிக்கூடங்களுக்கு

3rd July 1962] [திரு. எம். தண்டாயுதபாணி]

அங்கிகாரம் அளிக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி இருந்தும் நாங்கள் 4,400 ரூபாய் வசூல் செய்து கொடுத்தும் எங்களுக்கு இன்னும் உயர்நிலைப் பள்ளி அமைப்பதற்கு அங்கிகாரம் கிடைக்கவில்லை. ஆகவே பணம் வசூலித்துக்கொடுத்திருப்பதால் அங்கு ஒரு உயர்நிலைப் பள்ளியை ஆரம்பிக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தப்படியாக நில வரியைப்பற்றி குறிப்பிட வேண்டியதாக இருக்கிறது. இந்த நில வரியை இரண்டு விதமாக பிரிக்கப்பட்டிருக்கிறது. புதியதாக பாசனத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்கிற ஒரு பகுதி பழைய பாசனத்திலுள்ளது, மற்றொரு பகுதி ஆக இரண்டு பகுதிகளாக பிரிக்கப்பட்டிருக்கின்றன. புதியதாக பாசனத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்கும் நிலங்களுக்கு 100-க்கு 60 சதவிகிதம் உயர்த்தி இருக்கிறார்கள். உச்ச வரம்புச் சட்டம் வந்த பிறகு சாதாரணமாக தஞ்சை ஜில்லாவில் ஒரு மிராசுதாருக்கு முப்பது ஏக்கர் நிலம்தான் இருக்கும். அதன் பிறகு 60-40 சட்டம் வேறு அமுலில் இருக்கிறது. ஒரு ஏக்கருக்கு 12 கலம் வரும் என்று வைத்துக்கொண்டாலும் முப்பது ஏக்கருக்கு 360 கலம்தான் கிடைக்கும். தற்கால விகிதப்படி பார்த்தால் ஏக்கருக்கு 18 ரூபாய் என்று விதிக்கப்பட்டுள்ளது. அந்த முறையில் முப்பது ஏக்கருக்கு 540 ரூபாய் ஆகிறது. நில வரி இதில் அந்த மிராசுதார் விவசாய வருமான வரி 120 ரூபாய் கட்ட வேண்டியதாக இருக்கிறது. ஆக நில வரியும் சேர்த்தால் 660 ரூபாயாகிறது. ஆனால் அவனுக்கு நிலத்திலிருந்து வரக்கூடிய வருமானம் முதலியவைகளைக் கணக்குப் பார்த்தால் குறைவாகத்தான் வருகிறது. இப்பொழுது போடப்பட்டிருக்கிற வரி 260 ரூபாயாகிறது. இதற்கு முன் இருக்கக்கூடிய 660 ரூபாயுடன் இதையும் சேர்த்துக்கொண்டால் 920 ரூபாயாகிறது. ஆனால் அவனுக்கு வருமானம் வரக்கூடியதோ 3,600 ரூபாய்தான். இந்த வருமானத்தில் அவன் கட்டக்கூடிய வரியைக் கணக்கிட்டால் அதாவது 930 ரூபாயை கணக்கிட்டால் வருகிற வருமானத்தில் 25 சத விகிதம் அவன் வரியாகக் கட்டவேண்டியதாக இருக்கிறது. இதை கொஞ்சம் பரிசீலனை செய்து பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். தஞ்சை ஜில்லாவில் சி.எம்.பி. கெனல் வந்த பிறகு டெயில் எண்டுக்கு தண்ணீர் கிடைப்பதாக இல்லை. இந்த முறையில் புதிய பாசன திட்டத்திற்கு 100 சத விகிதம் என்றால் அது கட்டுப்படியாகாது. ஆகவே வரி விதிக்கும்போது இவைகளையெல்லாம் நன்றாக பரிசீலனை செய்து வரி போட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பாபநாசம், மன்னார்குடி தாலுகாக்களுக்கு 60 பர்சென்ட் போடப்பட்டிருக்கிறது. அவற்றையும் நன்றாக பரிசீலனை செய்து போடவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவைகளை திருத்தி அமைக்கவேண்டியதாக இருக்கிறது என்பதை சொல்லிக்கொண்டு எனக்கு பேசுவதற்கு வாய்ப்பு அளித்தமைக்கு என் நன்றியை தெரிவித்துக் கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

*திரு. சோ. ஆறுமுகம்: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63 ஆண்டுக்கான நிதிநிலை அறிக்கையின்மீது பேசுகின்ற வாய்ப்பினை அளித்தமைக்கு என்னுடைய நன்றியை முதற்கண் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இன்றைய தினம் நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் 1962-63-க்கான நிதிநிலை அறிக்கையை ஒரு பெரிய புத்தக ரூபமாக—ஐம்பது பக்கங்கள் கொண்ட ஒரு புத்தகத்தை கொடுத்திருக்கிறார். அதில் குறிப்பாக நாற்பது பக்கங்கள் கனம் அங்கத்தினர்களை மிகவும் கவர்ந்திருக்கிறது. அவற்றில் சிறு சிறு திட்டங்களை எடுத்துச் சொல்லியும் அந்த அறிக்கையில் இருக்கிறது. பிறகு ஒன்பது அல்லது பத்து பக்கங்கள் நாட்டில் இருக்கிற ஏழை விவசாய மக்கள் உபயோகப்படுத்தும் மின்சாரம், ஏழை மக்களுக்கு பிரயோசனமாக இருக்கிற, மக்கள் பிரயாணம் செய்கிற பஸ் கட்டணம் இவைகளையெல்லாம் உயர்த்தும் வகையில் வரியைக் காண்பித்திருக்கிறார்கள். உள்ளபடியே 85 கிராமங்களில் இருக்கக்கூடிய விவசாயிகளுடைய நிலைமையை ஆராய்ந்து பார்த்தால் மிகவும் வருந்தவேண்டிய நிலையில்தான் அவர்கள் இருக்கிறார்கள். இன்றைக்கு சர்க்கார் நிர்ணயித்திருக்கிற வரியைக்கூட சரியான நிலையில் கட்ட முடியாத நிலைமையில் இவர்கள் இருக்கிறார்கள். இப்பொழுதுள்ள நில வரியை நான்கு தவணைகளில் கட்டவேண்டும் என்று சொல்லியும் கூட கிராமங்களிலுள்ள முன்சிப், கர்ணங்களிடத்தில் அவற்றை நான்கு தவணைகளில்கூட கட்ட முடியாத நிலையில் அவர்கள் இருக்கிறார்கள். அதன் காரணமாக அவர்களுடைய சொத்தை ஜப்தி செய்யக்கூடிய நிலைமைகூட ஏற்படுகிறது. இந்த நிலைமையில்தான் அவர்கள் இருந்துகொண்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட விவசாயிகளுக்கு இன்னும் அதிகப்படியாக வரி விதிப்பது என்றால் நம் மக்களை நாம் மதிக்காமல் மக்களுடைய நிலையை அறியாமல் அவர்களுக்கு நாம் வரி விதிக்கிறோம் என்ற அளவில் நினைக்க வேண்டிய நிலைமையில் இருக்கிறோம்.

குறிப்பாக சேலம் மாவட்டத்தை எடுத்துக்கொண்டால் அது நம்முடைய மாநிலத்திலேயே பெரிய மாவட்டமாகக் கருதப்படுகிறது. அங்கே பல அரிய கனிப் பொருள் இருந்துகொண்டிருக்கின்றன. நமது சர்க்கார் கடந்த 14 ஆண்டு காலமாக சேலம் மாவட்டத்தை ஆண்டுகொண்டிருந்தபோதிலும் அங்கே எந்த விதமான நன்மையையும் செய்யவில்லை, நன்மையும் ஏற்படவில்லை என்பதை அழுத்தம் திருத்தமாகச் சொல்ல விரும்புகிறேன். சேலம் மாவட்டமானது இஸ்ரேல் நாட்டை விட பெரியது, சுவிட்ஜர்லண்ட் நாட்டை விட சரிபாதி பெரிய அளவில் இருக்கிறது. அங்கே இரும்பு கிடைக்கிறது. அங்கே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கின்றன. அப்படி இருந்தும் அந்த மாவட்டம் ஏன் புறக்கணிக்கப்படுகிறது என்று கனம் அமைச்சரை நான் கேட்க விரும்புகிறேன். இப்படிப்பட்ட நிலைமை சேலம் மாவட்டத்திற்கு நீடித்துக்கொண்டேபோனால் அதனால் என்ன உண்டாகும் என்பதைப் பார்க்க எங்களைப் போன்றவர்களுக்கு பயமாக இருக்கிறது. நேற்றையதினம் பேசிய சேலம் மாவட்ட அங்கத்

3rd July 1962] [திரு. சோ. ஆறுமுகம்]

தினர் ஒருவர் பேசுகிறபோது மக்களுடைய தேவை பூர்த்தியாக வேண்டுமானல் சர்க்காருடைய திட்டங்கள் நிறைவேற்றப்பட வேண்டுமானல் வரி விதித்துத்தானகவேண்டும் என்று சொன்னர். அத்துடன் திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்களுக்கு கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை என்று சுட்டிக்காட்டியும் பேசினர். அதே நேரத்தில் நேற்று பேசிய திருமதி குழந்தை அம்மாள் பேசுகிறபோது "உழவனுடைய கணக்கைப் பார்த்தால் உழவுகோலுக்குக் கூட ஆகவில்லை" என்று குறிப்பிட்டார். ஆனல் பேசுகிற கனம் அங்கத்தினர்கள் இப்பொழுது போடப்படுகிற வரி மக்களை பாதிக்குமா பாதிக்காதா என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பஸ் கட்டணத்தை உயர்த்தவேண்டும் என்று சொன்னல் அதை வரவேற்க வேண்டியதுதான். பஸ் கட்டணத்தை உயர்த்துகிற நேரத்தில் பஸ்ஸில் டிக்கட் கட்டணத்தை உயர்த்தக்கூடாது. அப்படி உயர்த்தாமல் இருக்கும்படியாக சர்க்கார் பார்த்துக்கொள்ளவேண்டும். பஸ் கட்டணத்தை உயர்த்துவதாக இருந்தால் அதைச் சரிக்கட்டுவதற்கு பஸ் முதலாளிகள் டிக்கட் கட்டணத்தை உயர்த்த முற்படுவார்கள். அப்படி உயர்த்தாமல் இருக்கும்படியாக கனம் நிதி அமைச்சர் அவர்கள் பார்த்துக்கொள்ளவேண்டும். அப்படி மக்களுக்கு பாதுகாப்பு கொடுக்கிற அளவில் வரி விதிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். 'பிள்ளை பெறுகின்றவர்களுக்குத்தான் பிள்ளையினுடைய வருத்தம் தெரியும், மலடிக்குத் தெரியாது' என்று சொல்வார்களே, அது போல, நாட்டில் இருக்கின்ற மக்கள் ஆண்டுதோறும் புதிய புதிய வரிகளை ஏற்றுக்கொண்டு கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறர்கள். இந்த நிலைமையை நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் கொஞ்சம் சீர்தூக்கிப் பார்க்கவேண்டும். இந்த ஆண்டு முதன்முதலாக அவர் நிதி அமைச்சர் பதவியை ஏற்றிருக்கிறர். அதற்குள்ளாக நிலத்திற்கும், மின்சாரத்திற்கும், பஸ்ஸுக்கும் வரி உயர்வுக்கான திட்டங்களை வகுத்திருக்கிறர்கள். பஸ்மீது வரியை உயர்த்தினலும், பஸ்ஸில் பிரயாணம் செய்வதற்கான டிக்கட்டுக்குரிய கட்டணத்தை பஸ் சொந்தக்காரர்கள் உயர்த்தாத வண்ணம் சர்க்கார் கொண்டுவர இருக்கிற சட்டத்தில் வகை செய்வார்களானல் நாம் அனைவரும் அவரைப் பாராட்டக் கடமைப்பட்டவர்களாவோம்.

இனி, சேலம் மாவட்டத்தைக் குறித்து, அங்குள்ள சில குறைகளை இங்கே எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். சேலம் மாவட்டத்தில் சேர்வாராயன் மலையில் தோன்றி, மஞ்சவாடிக் கணவாய் வழியாக திருமணிமுத்தாறு செல்கிறது. அந்தத் திருமணிமுத்தாற்றில் ஓடுகின்ற தண்ணீரைப் பிரித்து விடுவார்களானல், இராசிபுரம், நாமக்கல், சேலம் வட்டம், திருச்செங்கோடு போன்ற பகுதிகளில் இருக்கின்ற விவசாயிகளுக்கு நீர்ப்பாசன வசதி செய்து தர முடியும். அந்த ஆற்றின் வழியாக அந்தத் தண்ணீரைத் திருப்பிவிடுவார்களானல் இராசிபுரத்தில் இருக்கும் குடி தண்ணீர்ப் பிரச்சினையும் ஓரளவு தீர முடியும். எப்படி என்றல், இப்பொழுது அங்கு விவசாயிகள் குடிதண்ணீர்க்

[திரு. சோ. ஆறுமுகம்] [3rd July 1962

கிணறுகள் வெட்டும்போது, ஐம்பது அடிக்குக் கீழே வெட்டினாலும் தண்ணீர் கிடைப்பதில்லை. ஆற்றின் வழியாகத் தண்ணீர் சென்றால், 25, 30 அடிக்குள்ளாகவே தண்ணீர் கிடைக்கும். இதனால் சிறிய சிறிய கிராமங்களிலே ஏற்பட்டிருக்கின்ற குடிதண்ணீர்ப் பிரச்சினைகள் தீரும். அதோடு அங்கிருக்கின்ற விவசாயிகளுக்கும் நாம் நன்மை செய்துகொடுத்தவர்களாவோம். ஆகவே, இந்தத் திட்டத்தில் திருமணிமுத்தாறு திட்டம் இல்லை. இருந்தாலும், மணிமுத்தாறு திட்டத்தோடு வழியாக அந்த வாய்க்காலை வெட்டிவிடுகின்ற திட்டத்தையும் நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும் என்று நான் மிகவும் பணிவன்போடு கேட்டுக் கொள்கின்றேன்.

பஞ்சாயத்துக்களுக்கு அதிக அதிகாரங்களை வழங்கியிருக்கிறோம் என்று நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கின்றார்கள். உள்ளபடி என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும். நடைமுறையில் அந்த அதிகாரங்களைச் செலுத்திக்கொண்டிருக்கிற பஞ்சாயத்துத் தலைவரை அணுகிக் கேட்போமானால், அது வெறும் பகட்டாக இருக்கிறது என்ற முடிவுக்குத்தான் வர முடியும். ஒரு பஞ்சாயத்து எல்லையில் ஒரு பாதை போடவேண்டுமென்றால், அதற்குப் பத்து நிலச் சொந்தக்காரர்கள் தங்களுடைய நிலத்தைத் தர ஒத்துக்கொண்டுவிட்டு, ஒருவர் மறுத்தாலும் கூட, அதைப் போட முடியாத நிலை இருக்கிறது. பத்தாயிரம் பேர்களுக்கு சௌகரியம் ஏற்படக்கூடிய ஒரு பாதை அமைக்கும் வேலை இப்படி தடைப்பட்டுவிடுகிறது. இப்படிப்பட்ட நிலையில், அந்த நிலத்தைத் தனிப்பட்ட நபரிடமிருந்து ஆர்ஜிதம் செய்து பெற சட்டத்தின்மூலமாக பஞ்சாயத்துக்கு அதிகாரம் இருக்கிறதா என்றால், இல்லை. அந்த நிலைமையில் தான் கிராமப் புறங்களில் சரியான பாதை வசதிகள் அமைத்துக் கொடுக்க முடியாத நிலைமையில் இருக்கிறோம்.

குறிப்பாகச் சொல்லவேண்டுமானால், பாதை அமைப்பதற்கான செலவில் 75 சத விகிதம் சர்க்காரும், 25 சத விகிதம் பஞ்சாயத்தும் பொதுமக்களும் சேர்ந்து கொடுக்கவேண்டுமென்ற நிலைமை இருக்கிறது. இந்த முறையை மாற்றியமைக்கவேண்டுமென்று நான் இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கின்றேன். கிராமப்புறங்களில் குடி தண்ணீர் வசதி, ரோடு வசதி, பள்ளிக்கூட வசதி இவைகளுக்கெல்லாம் அரசாங்கம் ஒதுக்குகின்ற நிதி செலவிடப்படாமல் அரசாங்கத்திற்குத் திரும்ப வருகிற நிலைமை ஏற்படுகிறது. அதற்குக் காரணம், பொதுமக்கள் கொடுக்க வேண்டிய தொகையை அவர்களால் கொடுக்க முடியவில்லை என்பதுதான். அந்த அளவுக்கு மக்களுடைய நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. 75 சத விகிதம் சர்க்காரும், 25 சத விகிதம் பஞ்சாயத்தும் பொதுமக்களும் கொடுக்கவேண்டுமென்ற முறையை மாற்றி, பஞ்சாயத்து மட்டும் பத்து சத விகிதச் செலவையும், பாக்கி 90 சத விகிதச் செலவை சர்க்காரும் ஏற்றுக்கொள்கின்ற ஒரு அமைப்பை ஏற்படுத்தி, அதற்கான திட்டத்தைக் கொண்டு

3rd July 1962] [திரு. சோ. ஆறுமுகம்]

வருவார்களானல், நிச்சயமாக இந்த ஆண்டு கிராமப் புறங்களில் இருக்கின்ற குடி தண்ணீர்ப் பிரச்சினையைத் தீர்த்துக்கொள்ள முடியும், பாதை வசதி இல்லாமலிருக்கின்ற பல கிராமங்களுடைய தேவைகளையும் நாம் பூர்த்தி செய்துகொள்ளக்கூடிய நிலைமை ஏற்படக்கூடும் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியன் பகுதியிலும் ஒவ்வொரு வட்டத்திலும் ஒரு ஆஸ்பத்திரி கட்டப்பட வேண்டுமென்ற முறையைச் சர்க்கார் வகுத்திருக்கிறார்கள். ஆனல், ஒரு இடத்தில் ஒரு ஆஸ்பத்திரி கட்டவேண்டுமென்றால், அதற்குத் தேவையான மூன்று ஏக்கர் நிலம் வேண்டுமென்று கேட்கிறார்கள். அத்துடன், பத்தாயிரம் ரூபாய் நன்கொடையாக மக்கள் கட்டவேண்டுமென்ற நிலையும் இருக்கிறது. என்னுடைய வட்டம் வறண்ட பிரதேசம். அங்கே மக்களிடத்தில் அணுகி நன்கொடை கேட்டால் யார் கொடுப்பார்கள் ? மூன்று ஏக்கர் நிலம் தேவை என்று கேட்கும்போது, அந்த நிலம் வாங்க கிட்டத்தட்ட பதினையாயிரம் ரூபாய்க்கு மேல் ஆகிறது. இப்படி பதினையாயிரம் ரூபாய் பெறுமான நிலத்தை வாங்கிக் கொடுத்து, அத்துடன் பத்தாயிரம் ரூபாய் நன்கொடையும் கொடுத்துத்தான் ஒரு ஆஸ்பத்திரி ஏற்படுத்திக்கொள்ளவேண்டுமென்றால், பொதுவாக சேலம் மாவட்டத்திலுள்ள வட்டத்தில் யாரும் முன்வரமாட்டார்கள். இப்படியெல்லாம் போடப்பட்டிருக்கும் திட்டங்களினால் சேலம் மாவட்டத்திலுள்ளவர்கள் முன்னேறுவார்களா என்றால், நிச்சயமாக முன்னேற முடியாது. ஏனென்றால், அங்குள்ள வறுமைதான் அதற்குக் காரணம். சேலம் மாவட்டத்தில் இருக்கின்ற சாதாரண விவசாயிகூட, இரண்டு, மூன்று ஏக்கர் நிலம் வைத்திருக்கிறவன் கூட, கூலி வேலை செய்யக்கூடிய நிலைமையில் இருக்கிறான். இதற்குத் தண்ணீர் இல்லாத கஷ்டம்தான் முதல் காரணமாக இருக்கிறது. காவிரியாறு சேலம் மாவட்டத்தின் வழியாகத்தான் செல்கிறது என்றாலும், அதனல் சேலம் மாவட்டத்திற்குப் பயன் ஏற்படவில்லை. தஞ்சை மாவட்டத்திலிருந்து வந்திருக்கின்ற அன்பர்கள் கேட்டார்கள், எங்களுக்கு மேலும் வாய்க்கால்கள் வெட்டித் தர வேண்டும் என்று. அப்படித்தான் காவிரித் தண்ணீர் பிற மாவட்டங்களுக்கு உபயோகப்படுகிறது. எங்கள் மாவட்டத்திற்குப் பயன்படாத நிலைமையில் இருக்கிறது. ஆகவே, நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் சற்று கருணை கூர்ந்து, சேலம் மாவட்டம் செழிப்படைய வேண்டுமானல், இந்த ஆண்டுக்குள் திருமணிமுத்தாறு திட்டத்தோடு மணிமுத்தாறு திட்டத்தையும் சேர்த்துக் கொண்டு, திருமணிமுத்தாறு வழியாக வாய்க்காலை வெட்டி விடுகின்ற ஏற்பாட்டைச் செய்வதோடு, சேலம் மாவட்டத்தில் பல தொழில்களையும் ஏற்படுத்திக்கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என்னுடைய உரையை முடிக்கின்றேன். வணக்கம்.

* **திரு. ஏ. எஸ். தட்சிணமூர்த்தி கவுண்டர் :** *கனம் உதவி சபா நாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டுக்கான நிதி நிலை அறிக்கையை நான் கூர்ந்து படித்தேன். அப்படி படிக்கின்றபோது, இந்த நிதி*

[திரு. ஏ. எஸ். தட்சிணாமூர்த்தி கவுண்டர்] [3rd July 1962

நிலை அறிக்கையை வரவேற்கத்தான் வேண்டுமென்ற நிலைக்கு நான் வந்தேன். ஆகையால், அதை வரவேற்கின்ற நிலையில் யான் சில கூற ஆசைப்படுகின்றேன்.

பொதுவாக, 'அரசாட்சி' என்று சொன்னாலே, அதன் பொருள் 'வரி' என்பதுதான், என்னுடைய எண்ணம். வரி போடாத ஒரு அரசு எப்போதாவது இருந்திருக்கிறதா என்பதைப் பற்றி நாம் சிந்திப்போமேயானால், அனேகமாக கிடையாது என்றே நாம் முடிவு கட்டவேண்டும். நாணயம் புழக்கத்தில் வருவதற்கு முன்பெல்லாம் பண்டமாற்றுமுறை இருந்து வந்தது. அதாவது, அவரவர் உற்பத்தி செய்கின்ற பொருளிலே ஒரு கூறை அரசாங்கத்திற்குக் கொடுப்பது என்ற நிலை இருந்து வந்தது. அதைக் குறித்துத் தான், 'ஆறில் ஒன்று கொற்றவர் கடமை கொள்ள' என்ற நிலை இருந்தது என்பது என்னுடைய தாழ்மையான எண்ணம்.

11-30 a.m. அதாவது ஒரு விவசாயி தான் உண்டாக்கிய உணவு தான்யத்திலே ஆறில் ஒரு பங்கை களத்து மேட்டிலேயே அரசனுக்குக் கிஸ்தியாகக் கொடுத்துக்கொண்டிருந்தார்கள் என்பதை பழைய இலக்கியங்களில் இருந்து தெரிந்துகொள்ளலாம். ஆகவே வரியில்லாமல் ஒரு அரசாங்கம் நடைபெற முடியாது. அதுவும் 3-வது ஐந்தாண்டுத் திட்டத்தின் தொடக்கத்திலே இருக்கும்பொழுது இந்த ஆண்டு புதிய வரிகள் வரும் என்பதை மக்கள் அனேகமாக எதிர்பார்த்துக்கொண்டுதான் இருந்தார்கள். புதியதாக ஒன்றும் இல்லை. இந்தப் புதிய வரிகளைப் பற்றி முதல் அமைச்சர் அவர்களோ, நிதி அமைச்சர் அவர்களோ முன்கூட்டியே சொல்லித் தெரியவேண்டுமென்ற நிலை மக்களிடத்திலே இல்லையென்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்றைய தினம் புதிய வரிகள் என்ற தலைப்பில் விவசாய நிலங்களுக்கு வரி போடப்பட்டிருக்கிறது. அதிலே முக்கியமாக மாமூலாக உள்ள நஞ்சை பூமிகளுக்கு வரியை உயர்த்துவது என்ற நிலையை இந்த அறிக்கையில் நாம் பார்க்கிறோம். அப்படிப் போடும்போது கனம் நிதி அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன், ஆலோசனை கூறுகிறேன். பல வகையான வரிகள் இப்போது இருக்கின்றன. நிலத் தீர்வை, இரண்டாவது தண்ணீர்த் தீர்வை, மூன்றாவது அந்த அந்த பிரதேசத்திலுள்ள பஞ்சாயத்துக் குழுக்கள் போடுகிற தீர்வை, நான்காவது பஞ்சாயத்து யூனியன் சார்பாக போடப்படுகிற தீர்வை—இப்படியாக பல நிலைகளில் தீர்வை விதிக்கப்படுகிறது. அப்படி விதிக்கும் போது இவற்றையெல்லாம் ஒன்று சேர்த்தாலும்கூட சுமார் ஒரு எக்கருக்கு மாமூலான நஞ்சை நிலத்திற்கு 23 ரூபாய்க்கு மேல் போகாமல் அரசாங்கம் பார்த்துக்கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். அதற்குக் காரணம் என்னவென்றால் ஏதோ இப்போது உணவு தானியத்தின் விலை கொஞ்சம் கூடுதலாக இருப்பதை நினைத்து வரி விதித்துவிடக் கூடாது. உணவு தான்யங்களின் விலை எப்போது எப்படி இருக்கும் என்று சொல்வது நம் கையில் இல்லை. அந்த அந்தச் சமயத்தில் இருக்கிற பொருளாதார

3rd July 1962] [திரு. ஏ. எஸ். தட்சிணாமூர்த்தி கவுண்டர்]

நிலைக்கேற்ப உயரவோ, குறையவோ கூடும். ஆகவே இன்றைய அகவிலையை நினைத்து வரிபோடாமல், திடீரென்று அகவிலை குறைந்தாலும் இந்த வரியைக் கூடக் கட்ட முடியாமல் விவசாயிகள் கஷ்டப்படாதிருக்க நியாயமான ஒரு நிலை அடிப்படையில் வரி போடுவதே சிறந்தது. அதோடு இந்த நஞ்சைப் பயிருக்கு ரசாயன உரம் மிகவும் தேவையாக இருக்கிறது. இந்த ரசாயன உரம் கிடைப்பதிலே எங்கே சீர்கேடு இருக்கிறது என்பதையும் அரசாங்கம் கவனிக்கவேண்டும். காரணம் கண்ட்ரோல் ரேட் என்று அமோனியம் சல்பேட்டுக்கு 33 ரூபாய் நிர்ணயித்து அரசாங்கம் சார்புள்ள கூட்டுறவு முறையில் கொடுக்கிறார்கள். ஆனால் 33 ரூபாய்க்கு வேண்டிய அளவுக்கு நமக்கு ரசாயன உரம் கிடைப்பது இல்லை. அதே சமயத்தில் மூட்டை 70 ரூபாய் என்றால் எந்த இடத்திலும் கிடைக்கிறது. ஆகவே பண்டம் இருக்கிறது. ஆனால் இந்த விலை ஏற்றத்தாழ்வினால் பண்டம் பதுக்கப்பட்டு கிடைக்காமலும் போகிறது. இந்தச் சீர்கேடான நிலைமையைப் போக்கி விவசாயிகளுக்கு மூட்டை 33 ரூபாய்க்கு எல்லா இடத்திலும் உரம் கிடைக்கும்படியாகச் செய்யவேண்டும். அல்லது இந்த கண்ட்ரோலையே நீக்கிவிடலாம் என்ற யோசனையைச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். எப்போது எந்த பொருளுக்கு கண்ட்ரோல் என்று வந்தாலும் அந்தப் பொருளுக்கு விலையுயர்வு தானாக வந்து கொண்டிருக்கிறது என்பதைப் பிரத்யட்சமாகப் பார்த்து வருகிறோம். இந்த உறவுதான் உர விநியோகத்திற்கும் இருக்கிறதோ என்று ஐயப்படுகிறேன்.

அடுத்தபடியாக, நீர்ப்பாசன வசதியுள்ள புஞ்சைக்கு இந்த ஆண்டிலே அதிக வரி விதிப்பதாக இந்த அறிக்கையில் பார்த்தேன். அதிலே என்னுடைய ஈரோடு தொகுதியில் இருக்கிற காளிங்கராயன் வாய்க்கால் பாசனத்திலே வலதுபுறம் இருக்கிற பாசனம் நீர்ப்பாசன வசதியுள்ள புஞ்சை என்று இருக்கிறது. வாய்க்காலின் தண்ணீரை கிடங்குகள் மூலம் கிணறுகளுக்கு தண்ணீரை நிரப்பி பாய்ச்சி கிணற்றில் இருந்து இறைவை மூலம் தண்ணீர் பாய்ச்சி பயிரிட்டு வருகிறோம். அந்தக் கிணறுகளுக்கு ஆயில் பம்புகளையோ அல்லது மின்சார பம்பு செட்டுகளையோ வைத்தால் வசதியாக இருக்கும் என்று கோவை மாவட்ட கலெக்டருக்கு பம்பு செட்டுகள் வைக்க அனுமதி கோரியிருந்தோம். நான்கைந்து ஆண்டுகள் ஆகியும்கூட அந்த விண்ணப்பங்கள் கவனிக்கப்படவில்லை. ஏதோ மூன்று நான்கு பேர்களுக்கு மட்டும் அனுமதி கொடுத்திருப்பதாகத் தெரிகிறது. இந்த நிலையைப் போக்கி கூடிய சீக்கிரம் காளிங்கராயன் வாய்க்கால் ஆயகட்டுப் பகுதியில் இறைபாசனக் கிணறுகளுக்கு ஆயில் பம்புகள் அல்லது மின்சார பம்பு செட்டுகள் வைத்துக்கொள்ள அனுமதி கொடுக்கவேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அதோடு இல்லாமல் இந்த நிதி நிலை அறிக்கையில் கீழ் பவானி ஆயக்கட்டுப் பிரதேசத்திற்கு அதிக வரி விதிப்பில் இருந்து விலக்குக் கொடுத்திருப்பதை மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்களை மனமார வாழ்த்துகின்றேன். அதோடு

கூட கீழ் பவானி ஆயக்கட்டுப் பிரதேசத்தில் ஒரு ஏக்கருக்கு பயிர்களின் மேல் வரி வசூலிக்கப்படுகிறது. அதை நீக்கி, நிலத்தின் தரத்தை நிர்ணயித்து, ஏக்கர் அடிப்படையில் வரி விதிக்க வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். ஒரு ஏக்கரில் பல பட்டாதார்கள் இருக்கமுடியும். எல்லோரும் ஒரே வெள்ளாமை வைப்பார்கள் என்று சொல்லமுடியாது. ஆகையால் பயிருக்குத் தக்கபடி வரி என்ருல் சரியாக அமையவில்லை. தொந்தரவு அதிகம். ஆகவே ஏக்கர் அடிப்படையில் நிலத்தின் தரத்திற்கு ஏற்ப வரியை நிர்ணயித்தால் மிகவும் உதவியாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். அதோடு கீழ்பவானி பாசனத்தில் மூன்று கிராமங்கள் விடப்பட்டிருக்கின்றன. உதாரணமாக கானமங்கலம், ஊத்துக்குளி, நல்லகவுண்டன்பாளையம் ஆகிய இந்த மூன்று கிராமங்களையும் அந்தப் பாசனப் பகுதியோடு சேர்த்து தண்ணீர் வழங்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* **திரு. எஸ். சின்னய்யன் :** கனம் சபாநாயகர் அவர்களே, 1962-63-ஆம் வருஷத்து நிதி நிலை அறிக்கையை வரவேற்றுச் சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். அதாவது சென்ற இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நமது அரசாங்கம் நிறைவேற்றி வந்திருக்கக்கூடிய காரியங்களை எல்லாம் பார்க்கின்ற போது இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கை மிகச் செவ்வையாக அமைந்திருக்கிறது என்பது நன்ருக விளங்குகிறது. எந்தக் கோணத்தில் இருந்து பார்த்தாலும் சரி, எந்த நிலையில் இருந்து கவனித்தாலும் சரி இந்த மாகாணம் மிக அபரிமிதமான முறையில் முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்பதைப்பற்றிச் சந்தேகம் இல்லை. கனம் நிதி அமைச்சர் அவர்கள் மிக விளக்கமாகச் சொல்லியிருக்கிருர்கள். விவசாயத் துறை ஒன்றை மட்டும் எடுத்துக்கொண்டால் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் இருந்து இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் கழித்து மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இருக்கிற இப்போதுள்ள நிலையைப் பார்க்கின்றபோது ஒரு மாபெரும் முன்னேற்றத்தைக் கண்டு இருக்கிறோம் என்பதில் சந்தேகம் இல்லை. கிராமப் பகுதியானுலும் சரி, வட்டார வளர்ச்சிப் பகுதிகளானுலும் சரி, வட்டார வளர்ச்சி அதிகார வர்க்கத்தினர் (அந்த அலுவலர்கள்) விவசாய காரியங்களை எங்கு பார்த்தாலும் எந்த குக்கிராமமாக சரி இருந்தாலும் விவசாய அபிவிருத்தி வேலைகள் வெகுவேகமாக முன்னேறுவதற்கு வகை செய்திருக்கிருர்கள் என்பதை நன்ருகக் காணலாம்.

இரசாயன உரங்கள், உள்ளூரில் இருக்கும் கழிவுப் பொருள்களை எல்லாம் அப்புறப்படுத்தி எருக் குழிகளுக்கு மாற்றி அங்கே எரு உரம் தயார் செய்வதற்குச் செய்கிற ஒவ்வொரு காரியங்களையும் கவனித்தால் உள்ளபடியே வளர்ச்சி அடைகிற நாடு, வளர்ச்சியடைய வேண்டிய நாடு, வளர்ச்சியடைந்து கொண்டே இருக்கிறது என்பதைத் தைரியமாகச் சொல்லலாம். மழைக் காலங்களில் அரித்துக் கொண்டு போகும் மண்ணையெல்லாம் தேக்கி நல்ல வளமுள்ள வயல்களாக ஆக்குவதற்காக ஆங்காங்கு இருக்கும்

3rd July 1962] [திரு. எஸ். சின்னய்யன்]

அதிகாரிகள் எடுத்துக் கொண்டிருக்கும் நடவடிக்கைகளைப் பார்க்கும்போது உள்ளபடியே மகிழ்ச்சியடையவேண்டிய ஒரு காரியமாகும். விவசாய ஆராய்ச்சி வகைகளில் ஏற்கனவே பல ஆராய்ச்சிப் பள்ளிகளை நிறுவி காரியமாற்றி வருகிறார்கள். இந்த நாட்டிலே விவசாய ஆராய்ச்சி இன்னும் அதிகமாக நடத்தப்பட வேண்டுமென்பதற்காக மேலும் ஆறு பள்ளிகளைத் திறந்திருப்பது பாராட்டத்தக்கது. இவைகளையெல்லாம் பார்க்கும்போது, இந்த நிதி நிலை அறிக்கையை யாரும் மறுக்கமுடியாது என்பது நன்கு விளங்குகிறது. எதிர்க்கட்சி அங்கத்தினர்கள்கூட மனதார இதை ஒப்புக் கொள்ளுவார்கள் என்றாலும் கூட எதிர்க்கட்சி என்ற ஹோதாவில் ஏதாவது அதற்கு மறுப்பு சொல்லியாகவேண்டுமென்ற முறையிலே பேசுகிறார்களேயொழிய வேறொன்றுமில்லை.

பஞ்சாயத்து ஆட்சி முறை வெகு அழகாக நல்ல முறையில் நடைபெற்று வருகிறது. பஞ்சாயத்து அலுவலகங்களில் இருக்கிற ஒவ்வொரு அதிகாரியும் இந்த நாடு முன்னேறவேண்டும், நாமும் இந்த நாட்டின் பிரஜை என்ற உன்னதமான தத்துவத்தை மனதிலே கொண்டு வெகு நல்ல முறையிலே பணியாற்றி வருகிறார்கள். அதற்கு நமது அரசாங்கம் நல்ல ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறது.

மின்சார அபிவிருத்தியைப் பொறுத்தவரை, நாம் வெகுவேகமாக வளர்ந்து வருகிறோம். மலை போல் வளர்ந்திருக்கிறோம் என்றுகூட சொல்லலாம். அதன் மூலம் விவசாயிகள் மிகவும் பயன் அடைகிறார்கள். இரவு நேரங்களில் நடு நிசியில் கவலையோடு சென்று தண்ணீர் இறைத்த விவசாயிகள் இன்று கவலை நீங்கி பகல் நேரத்தில் சென்று (விசையை அழுத்தியவுடன்) ஸ்விட்சைப் போட்டவுடன் தண்ணீர் பாய்ச்சுகிற நிலையைப் பெற்றிருக்கிறார்கள். இவற்றையெல்லாம் பார்த்து இது முன்னேற்றம் அடைந்திருக்கிற நாடா, பின்னேற்றம் அடைந்திருக்கிற நாடா என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இந்த மின்சார வளர்ச்சியின் காரணமாக ஒரு சில தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். தோப்பரை முதலியன செய்யக்கூடிய தொழிலாளர்கள் இரண்டொரு ஜில்லாக்களில் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். கிணறுகளுக்கு பம்ப் செட் வைத்து விட்டதன் காரணமாக அந்தத் தொழில் நசித்து விட்டது. சேலம் ஜில்லாவில் நாமக்கல், திருச்செங்கோடு, ராசிபுரம், சேலம், ஆத்தூர், ஓமலூர் ஆகிய தாலூகாக்களில் இருக்கிற ஆயிரக்கணக்கான குடும்பங்கள் இதனால் பாதிக்கப்பட்டிருக்கின்றன. அவர்களுடைய நலனைக் கவனிப்பதற்கு கனம் நிதியமைச்சர் அவர்கள் வழி செய்வார்கள் என்று நம்புகிறேன்.

கல்வித் துறையைப் பொறுத்தவரை, இன்று ஒரு சிறந்த மாறுதலை நாம் அடைந்திருக்கிறோம். வேறு எந்த மாகாணமும் இந்த அளவுக்கு வளர்ச்சி பெறவில்லை. இதுபற்றி நாம் பூரிப்பு அடையாமல் இருக்க முடியாது. இந்த ஆண்டில் மட்டும் 195 உயர் நிலைப் பள்ளிகள் ஏற்படுத்தத் திட்டமிடப்பட்டிருக்கிறது. அவற்றில் 39 பெண்களுக்காக ஒதுக்கப்பட்டிருப்பது மகிழ்ச்சிக்குரியது.

[திரு. எஸ். சின்னய்யன்] [3rd July 1962

என்னுடைய தொகுதியைப் பொறுத்தவரை, நாமக்கல் தாலுகா ஒரு வரண்ட பிரதேசம். மழை இல்லாத காரணத்தால் தண்ணீர்க் கஷ்டம் மிக அதிகமாக இருக்கிறது. அந்தப் பகுதியில் ஒரு வாய்க்கால் வெட்ட வேண்டுமென்று பல ஆண்டுகளாக மாநாடுகள் மூலமும், பொதுக்கூட்டங்கள் மூலமும் மகஜர்கள் மூலமும் கேட்டு வருகிறோம். இன்னும் அது நிறைவேற்றப்படவில்லை. எந்தத் திட்டமாக இருந்தாலும் சரி, ஹோகனேகல் திட்டமாக இருந்தாலும் சரி, ஜோடர்பாளையம் திட்டமாயிருந்தாலும் சரி வாய்க்கால் திட்டம் ஆரம்பித்து ஏரிகளில் தண்ணீர் நிரம்பி விவசாயிகளுக்கு வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என்னுடைய சிற்றுரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

*திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் நிதியமைச்சர் அவர்கள் அளித்துள்ள 1962-63 ஆண்டு நிதிநிலை அறிக்கையைப்பற்றி என்னுடைய கருத்தைச் சொல்வதற்கு முன்னல் தமிழகத்திலே இருக்கிற ஏழைகளும் பாட்டாளிகளும் இந்த பட்ஜட்டினல் பசியும் பட்டினியும் போகுமா என்று எதிர்பார்த்திருந்தார்கள். ஆனல் பசியை நீக்குவதற்குப் பதிலாக பட்டினியை நீக்குவதற்குப் பதிலாக, நம்முடைய கனம் நிதியமைச்சர் அவர்கள் பேதி மருந்திலே இனிப்பைத் தடவி, 'இந்த மாத்திரை உங்களுடைய பசியைப் போக்கிவிடும்' என்று கூறும் முறையில் இந்த பட்ஜெட்டை கொண்டு வந்திருக்கிறார்கள். வெளியே போய்விட்டு வரும் தகப்பன் வீட்டில் இருக்கும் குழந்தைகளுக்குப் பொட்டலங்கள் வாங்கிக்கொண்டு வருவான் என்று குழந்தைகள் எதிர்பார்த்துக்கொண்டிருக்கும். அதேபோல் தமிழகத்திலுள்ள ஏழை மக்கள் இந்த பட்ஜெட்டில் தங்களுக்கு நல்வாழ்வு கிடைக்காவிட்டாலும் ஏதாவது வரிச் சலுகையாவது கிடைக்குமா என்று எதிர்பார்த்திருந்தார்கள். ஆனல் ஒன்றைக் கூட இதில் காணேம். மாருக நான் முன்பே குறிப்பிட்டதுபோல் ஷுகர் கோட்டட் பேதி மருந்தைத்தான் தந்திருக்கிறார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தினர் திட்டம் வேண்டுமென்று சொல்கிறார்கள். ஆனல் வரி வேண்டாமென்று சொல்லுகிறார்கள் என்று எதிர்தரப்பிலுள்ள சில கனம் அங்கத்தினர்கள் சொன்னர்கள். அவர்கள் புரியாது சொல்லிவிட்டார்களோ அல்லது வேண்டுமென்றே கட்சிக் கட்டுப்பாட்டிற்கு அடங்கித்தான் சொன்னர்களோ என்று என்னல் புரிந்துக்கொள்ள முடியவில்லை. நாங்கள் திட்டத்தை வரவேற்கிறோம், கொள்ளைக் கொடுங்கள். கடிவாளத்திற்கும் தயார். ஆனல் கடிவாளத்தைப் போடுவதற்கு முன்னர் கொள்ளைக் கொடுங்கள் என்று கேட்கிறோமே தவிர கொள் இன்றி கடிவாளம் தேவையில்லையென்றுதான் சொல்கிறோம். ரெவின்யூ அக்கவுண்டில் சொல்லுகிறார்கள் சென்ற ஆண்டு 63 கோடிக்கு பதிலாக இந்த ஆண்டு 76 கோடிக்கு அபிவிருத்தி வேலை செய்கிறோம், 13 கோடிக்கு அதிகமாக அபிவிருத்தி வேலை செய்கிறோம், அதற்காகத்தான் வரி போடுகிறோம் என்று சொல்லுகிறார்கள், பட்ஜெட் மெமாரண்டத்தில், மூன்றாவது நிதிக் கமிஷன் திட்டத்திற்குப் பிறகு மத்திய அரசாங்கத்திலிருந்து கிறாண்ட்-இன்-எயிட்லிருந்து மூன்று கோடி ரூபாய் நமது

3rd July 1962] [திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி]

மாநிலத்திற்குச் சாதகமாகக் கிடைத்திருக்கிறது. நான்-டாக்ஸ் ரெவின்யூவிலிருந்து இந்த ஆண்டு நமக்கு பத்து கோடி ரூபாய் அதிகமாகக் கிடைத்திருக்கிறது. சென்ற ஆண்டு 18 கோடி கிடைத்தது இந்த ஆண்டு 28 கோடியாகியிருக்கிறது. ஆக இந்த இரு திட்டங்களிலிருந்து மட்டும் நமக்கு 13 கோடி ரூபாய் உபரியாகக் கிடைக்கிறது. க்ரேண்ட்-இன்-எயிட்-ல் 3 கோடி ரூபாய், நான்-டாக்ஸ் ரெவின்யூவிலிருந்து 10 கோடி ரூபாய் இவை இரண்டையும் சேர்த்து அந்தத் தொகையைக் கொண்டு நமது உபரி அபிவிருத்தித் திட்டங்களை சரி செய்ய முடியாதா என்று கேட்கிறேன். எதற்காக வரி போடுகிறீர்கள்? அபிவிருத்தித் திட்டங்களுக்காக வரி போடுகிறீர்கள் என்றால் அதை ஆதரிக்க நாங்கள் தயாராயிருக்கிறோம். ஆனால் அபிவிருத்தித் திட்டங்களுக்காக வரி போடவில்லை. நான்-டெவலப்மெண்ட் எக்ஸ்பென்டிச்சருக்காக அபிவிருத்தியில்லாத திட்டங்களுக்காக வரி போடுகிறார்களே தவிர வேறு இல்லை. நான்-டெவலப்மெண்ட் எக்ஸ்பென்டிச்சருக்காக சென்ற ஆண்டு 32 கோடி ரூபாய், இந்த ஆண்டு 39 கோடி ரூபாயாக ஆகியிருப்பதனால் 7 கோடி துண்டு விழுகிறது. அபிவிருத்தியில்லாத திட்டங்களுக்காக வரி போட்டு விட்டு, அபிவிருத்தி திட்டங்களுக்காக போடப்படுகிற வரிகளை ஏன் எதிர்க்கிறீர்கள் என்று எதிர்தரப்பிலுள்ள நண்பர்கள் அழகாகப் பேசுகிறார்கள். இதில் பல செலவுகள் ஊதாரித்தனமாகவும், வீண் விரயமாகவும் ஆக்கப்படுகிறதென்று காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்கள் கனம் சுப்பிரமண்யம் அவர்களும், கனம் கோசல்ராம் அவர்களும் நேற்று எடுத்துச் சொன்னார்கள். நாங்கள் சொல்லவில்லை. காங்கிரஸில் உள்ளவர்கள், காங்கிரஸில் பல்லாண்டு காலம் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணித்து அதன் அவசியத்தைப் புரிந்து கொண்டவர்களே சொல்கிறார்கள், பல கோடி ரூபாய் வீண் விரயத்திற்காக வரிபோடுகிறீர்களா? ஊதாரித்தனத்திற்காக வரிபோடுகிறீர்களா? எதற்காக வரி போடுகிறீர்கள்? மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காக நீங்கள் வரி போடுகிறீர்கள் என்றால் நாங்கள் எதிர்க்கட்சியில் இருந்தாலும் எங்கள் உண்மையான ஆதரவைத் தர நாங்கள் தயாராயிருக்கிறோம். வரி போடத்தான் வேண்டும். வரி போடாது எந்த ஆட்சியும் நடைபெறாது என்பதை பொருளாதாரம் படித்து அறிந்த நான் உணருகிறேன். யாரிடம் போடவேண்டும்? எங்கு போடவேண்டும்? ஏழைகளுக்கு போடவேண்டுமா அல்லது பணக்காரர்களுக்குப் போடவேண்டுமா என்று பார்த்துபோட வேண்டிய இடத்தைப் பார்த்து போடுங்கள் என்று சொல்லுகிறோமே தவிர வேறொன்றுமில்லை. ஏழைகள் மீது போடாதீர்கள், பணக்காரர்கள் மீது போடுங்கள் என்றுதான் சொல்கிறோம். எனது அருமை நண்பர் கனம் கோசல்ராம் அவர்கள் சொன்னார்கள், இந்த தமிழகத்தில் 30 கோடி ரூபாய் வரை வரியை ஏமாற்றுகிற திமிங்கிலங்கள் இருக்கின்றன என்று. அவர்களுக்கு எனது வணக்கத்தையும், நன்றியையும் தெரிவிக்க விரும்புகிறேன். 30 கோடி ரூபாய் வரை இன்கம் டாக்ஸை ஏமாற்றும் திமிங்கிலங்களை ஏன் இந்த நாட்டில் விட்டு வைத்திருக்கிறீர்கள்? ஏன் போலீஸ் இலாகாவை சரியாகப் பயன்படுத்தவில்லை? 30

கோடி வசூல் செய்தால் இந்திய அரசியல் சட்டப்படி 2/3 பங்கு நமக்கு கிடைக்காதா? நமக்கு அதில் 20 கோடி கிடைக்காதா? அந்த 20 கோடியை வைத்துக்கொண்டு நமது அபிவிருத்தித் திட்டங்களை நிறைவேற்ற முடியாதா? ஏன் அப்படிப்பட்ட திமிங் கிலங்களை இந்த நாட்டில் வாழ விடுகிறீர்கள்? அமைச்சரவைக் குத் தெரியாமலா இந்த திமிங்கிலங்கள் வாழ்கின்றன? அவர் களுக்கும் இந்த திமிங்கலங்களோடு ஏதாவது தொடர்பு உண்டா? கனம் அமைச்சர் அவர்கள் பட்ஜெட் விவாதத்திற்கு பதில் உரை அளிக்கும்போது தயவுசெய்து இதைப்பற்றி கூறவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

திருமதி பி. கே. ஆர். லக்ஷிமிகாந்தம்: ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர், ஸார், அமைச்சரவைக்கு இதில் ஏதாவது சம்பந்தமுண்டா என்று இந்த அவையில் அவதூறாகக் கேட்கலாமா என்று கேட்க ஆசைப்படுகிறேன்.

திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி: நேற்றைய தினம் காங்கிரஸ் உறுப்பினர் சொன்னதற்கு நான் வியாக்கியானம்தான் சொல்கி றேன். தவிரவும் அமைச்சரவைக்கு சம்பந்தமுண்டா என்று கேள்வியாகக் கேட்கிறேனே தவிர அமைச்சர்களிடம் குற்றம் இருக்கிறது என்று சொல்லவில்லை. ஆகவே இதில் பாயின்ட் ஆப் ஆர்டர் எதுவும் இல்லையென்று சொல்ல ஆசைப்படுகிறேன்.

கனம் உதவி சபாநாயகர்: கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்ன விளக்கத்தில் அவர்கள் ஒன்றும் குற்றமாகச் சொல்லவில்லை என்று சொன்னதால் இதில் பாயின்ட் ஆப் ஆர்டர் ஒன்றும் இல்லை என்று சொல்கிறேன்.

திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி: திரு. கோசல்ராம் அவர்கள் சொன்ன சமயத்தில் எதிர்கட்சியினர் அட்டையைத் தூக்கிக் கொண்டு செல்கிறார்களே இதனால் விலை குறையுமா என்று சொன் னார். தங்கள்மூலம் நான் அவர்களுக்கு சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன், கனம் நிதியமைச்சர் அவர்கள் அட்டையாக இருந்து திமிங்கிலங்களின் ரத்தத்தை உறுஞ்சுங்கள் என்று எடுத்துச் சொல்வதற்காகத்தான் அப்படிச் சென்றது. அட்டை திமிங்கி லங்களின் ரத்தத்தை உறிஞ்சட்டும், ஆனால் சின்னஞ்சிறிய மீன் களின் ரத்தத்தை உறிஞ்சினால் அவை செத்து விடும். ஆக சின்ன மீன்களை வாழ விட்டுவிட்டு அவை வாழ திமிங்கிலங்களை அழியுங் கள் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்து வரிகளை பற்றி பேசும்போது, பஸ்களுக்கு போட்டிருக்கும் வரியை நாங்கள் ஆதரிக்கிறோம். அது மக்களைப் பாதிக்காமல் இருந்தால் அதை ஆதரிக்கிறோம். கனம் வெங்கட்ராமன் அவர்கள் சொன்னது போல் சர்க்காரில் இயங்கு கிற பஸ்ஸில் நாங்கள் கட்டணத்தைக் கூட்ட வில்லையென்று சொன்னார். அதேபோல் கனம் அமைச்சர் அவர்கள் முன்வந்து தனிப்பட்ட பஸ்களின் கட்டண விகிதாசாரங்கள் உயராது என்று சொல்வார்களானால் நாங்கள் சிரம் தாழ்ந்து இந்த வரி இனத்தை ஏற்றுக் கொள்ளத் தயாராயிருக்கிறோம். ஒரு சிலர் தவிர மற்ற

3rd July 1962] [திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி]

வர்கள் பஸ் வரியைப் பற்றி சொல்லவில்லை. திருமதி கொளந்தையம்மாள் அவர்கள் நன்கு சொன்னார், இந்த பஸ் வரி மக்களைப் பாதிக்காத முறையில் சட்டத்தை கொண்டுவரவேண்டுமென்று. நேர்மையான உள்ளத்தைப் பாராட்டுகிறேன். கனம் கொளந்தையம்மாள் அவர்கள் பேசியதைப்போல் பஸ் முதலாளிகள் அந்தப் பக்கத்திலிருந்தாலும் சரி, இந்தப் பக்கத்தில் இருந்தாலும் சரி, பஸ் கட்டணம் உயராது நாங்கள் பார்த்துக் கொள்வோம், நாங்களே இதைக் கடைப்பிடிப்போம், நாங்களே இதை செயல் படுத்துவோம் என்று சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, விலைவாசி பற்றிய எனது கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். விலைவாசி உயர்வைத் தடுக்க திராவிட முன்னேற்றக் கழகத்தினர் நல்ல திட்டங்களைக் கொடுக்கலாமே என்று சொல்லுகிறார்கள். உற்பத்திச் செலவை குறையுங்கள் என்று நாங்கள் சொல்கிறோம். உற்பத்திச் செலவைக் குறைத்தால் விலைவாசி குறையும் என்று நாங்கள் சொல்கிறோம். அப்படிச் சொல்லும்போது மின்சாரக் கட்டணத்தை 10 சதவிகிதம் உயர்த்துகிறார்கள். லிப்ட் இர்ரிகேஷன் மூலம், மின்சாரத்தைப் பயன்படுத்தி நெல்லை விளைவிப்பவர்களுக்கு மின்சாரத்திற்கு 10 சதவிகிதம் உயர்த்தி விட்டார்கள். ஆக ஏக்கர் ஒன்றுக்கு ஏறக்குறைய 100 ரூபாய் உற்பத்திச் செலவில் மின்சாரத்தில் மட்டும் கூடியிருக்கிறது. மற்றும் நிலவரி இவைகளை எடுத்துக் கொண்டால் ஏக்கர் ஒன்றுக்கு 150 ரூபாய் அதிகமாகிறது. இப்படி காஸ்ட் ஆப் கல்டிவேஷன் அதிகமாகும்போது விலைவாசி ஏறத்தான் செய்யும், விவசாயத்திற்கு ஆகும் வரியைக் குறைத்தால்தான் மக்கள் சுலபமான முறையில் உணவுப் பொருள்களை வாங்கி வாழ்க்கையை நடத்த முடியும்.

பின்னர் கிராம செஸ் வரி பற்றி ஒரு வார்த்தை. எதிர்க்கட்சி அங்கத்தினர்களின் தொகுதிக்கு, அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்திருக்கும் தொகுதிகளுக்கு நன்மை செய்யாதிருப்பதை இதில் காண்கிறேன். எந்தவிதமான அபிவிருத்தியும் காங்கிரஸ் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்திருக்கும் தொகுதிகளில்தான் செய்யப்படுகிறதே தவிர எங்கள் தொகுதிகளை ஒரு வேளை வேண்டுமென்றே புறக்கணித்து விட்டார்களோ என்று அச்சமாக இருக்கிறது. கனம் சபாநாயகர் அவர்களே, எனக்கு மேலே சுற்றி வரும் விசிறி கூட மெதுவாக சுற்றி வருகிறது. (ஆரவாரம்) அரசாங்க உத்தரவு போட்டு, அரசாங்கச் சிப்பந்திகள் மூலம் எதிர்க்கட்சியில் உள்ளவர்களுக்கு நன்மை செய்யவேண்டாம் என்ற உத்தரவு போடுகிறார்களோ, தெரியவில்லை. ஆனால் உங்கள் அதிகாரத்தில் உள்ள விசிறிகூட சுற்றவில்லை. நாங்கள் உங்களோடு ஒத்துழைக்கவேண்டுமென்றால், உங்களோடு நல்லபடி பாடுபட வேண்டுமென்றால் வரி போடுங்கள். ஆனால் பணக்காரர்களுக்கு வரி போடுங்கள், திமிங்கிலங்களை வெளியே கொண்டு வாருங்கள், கனம் கோசல்ராம் போன்ற ஒரு சிறிய ஆள்ளினால் மட்டும் திமிங்கிலத்தை வெளியே எடுக்கமுடியாது. எதிர்கட்சிகளும், ஆளும் கட்சி

யும் ஒன்று சேர்ந்து ஒத்துழைத்து பெரிய ஹுக்கைப் போட்டு பிடிக்க, எந்தத் திமிங்கிலமாகயிருந்தாலும், நாங்கள் தயாராயிருக்கிறோம் என்று கூறி, இந்தத்திட்டத்தில் ஏழைகளுக்கு நன்மையில்லை, விலைவாசியைக் குறைக்க எந்தவிதமுறைகளும் இல்லை என்று கூறி இந்த பஸ் கட்டணத்தை உயர்த்தாமல் பார்த்துக்கொள்ள அரசாங்கம் முன்வந்தால் நாங்கள் இந்த வரியை வரவேற்கிறோம் என்று கூறி எனது உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

12-00 noon. * திருமதி பி. கே. ஆர். லக்ஷிமிகாந்தம் : கனம் சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கின்ற முதல் பட்ஜெட் இதுவாகும். இந்த வரவு செலவு கணக்கிலே அவர்கள் நல்ல முறையில் விஸ்தாரமான முறையில் தயார் செய்து பல திட்டங்களை அமல் நடத்துவதிலே அக்கறை காண்பிக்கும் முறையிலும் அதற்காக பல நடவடிக்கைகளை துரிதமாக எடுக்கவேண்டிய முறையிலும் கவனம் செலுத்தி இந்த வரவுசெலவு அறிக்கை தயார் செய்யப்பட்டிருக்கிறது. முதன் முதலில் தயார் செய்யப்பட்டிருக்கின்ற இந்த வரவு செலவு அறிக்கையை நான் பாராட்டுவதோடு அதை மகிழ்ச்சியுடன் வரவேற்கின்றேன். இந்த வரவு செலவு அறிக்கையில் வரி போடப்பட்டிருக்கின்றது. இதில் வரி போடப்பட்டிருப்பதைப்பற்றி பலர் தங்களுடைய அபிப்பிராயங்களை கூறியிருக்கிறார்கள். குறிப்பாக எதிர் கட்சி அங்கத்தினர்கள் வரி போடக்கூடாது, வரி இருக்கவே கூடாது என்றும் கூறியிருக்கின்றார்கள். அதற்கு உதாரணமாக எதிர் கட்சிக்காரர்கள் நேற்று முன்தினம் நடத்திய ஆர்பாட்டமே ஒரு சான்றாகும். ஆனால் இதில் ஒன்றை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். வரி வேண்டாம் என்று முதலில் சொல்லிவிட்டு, பின்னால் பேசும்போது, பஞ்சாயத்துகளுக்கு கொடுக்கும் மான்யம் அதிகமாக இருக்கவேண்டும், பள்ளிக்கூட வசதி வேண்டும், ஸ்காலர்ஷிப்கள் போதாது, இன்னும் படிப்பதற்கு கடன் வசதி வேண்டும் என்றெல்லாம் பேசாத அங்கத்தினர்கள் கிடையாது. வரியும் போடக்கூடாது. அதேநேரத்தில் நாம் கேட்கக்கூடியதை எல்லாம் சர்க்கார் செய்துகொடுக்கவும் வேண்டும் என்று சொன்னால் சர்க்காரால் எப்படி முடியும் என்று கேட்கிறேன். சர்க்காரால் கொடுக்கவே முடியாது. ஒன்று பணம் காய்க்கக்கூடிய விதை ஏதாவது இருந்தால் அதையாவது காட்டிலாகாவிடம் கொடுத்து, அந்த விதையைப் போடச்சொல்லி பணத்தை உண்டாக்கி எல்லா விதமான மான்யங்களையும் எந்தவிதமான வரியும் போடாமல் கொடுத்துவிட முடியும். அப்படிப்பட்ட விதை எதுவும் நம் நாட்டிலோ அல்லது எந்த உலகத்திலும் இருப்பதாகத் தெரியவில்லை. இல்லாவிட்டால் ஏதாவது சினிமாவில் காட்டப்படும் பணத்தை வரவழைக்கும் மந்திரக்கோலாவது நம்மிடம் இருக்க வேண்டும். அதுவும் கிடையாது. அது சினிமாவுக்குத்தான் பயன்படுமே தவிர நடைமுறைக்கு பயன்படாது. அப்படி இருக்கும்போது வரி போடாமல் இருக்கவேண்டும் என்று சொன்னால் அது எவ்வாறு முடியும் என்று கேட்கிறேன். திட்டங்களை நிறைவேற்ற வேண்டும் என்றால் வரிகளைப் போட்டுத்தான் தீர வேண்

3rd July 1962] [திருமதி பி. கே. ஆர். லக்ஷ்மிகாந்தம்]

டும். அதை யாரும் மறுக்க முடியாது. இதற்காக ஏற்படும் எத்தனையோ எதிர்ப்புக்களை சமாளித்துத்தான் தீரவேண்டும். அதற்கு சர்க்கார் தயாராக இருக்கிறார்கள். மக்கள் மீது அதிக மான சுமையை ஏற்றக்கூடாது என்று சொல்லுகிறார்கள். அப்படி மக்கள் மீது ஒன்றுமே வரி போட வேண்டாம் என்று சொன்னால் திட்டம் நமக்கு வேண்டாம் என்று திட்டவட்டமாக சொல்லிவிட வேண்டும். திட்டம் வேண்டும் என்று சொன்னால் வரியை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். இப்போது இருக்கின்ற நிலைமையைப் பார்த்தால், நாட்டு மக்கள் எல்லாம் திட்டத்தை வரவேற்கிறார்கள். திட்டம் வேண்டும், திட்டம் வேண்டும் என்கிற உணர்ச்சிதான் மக்களிடம் இருந்துகொண்டிருக்கிறது. இதன் காரணமாக தொழில் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது. சிறுசிறு தொழில்கள் எல்லாம் அதிகமாக பரவவேண்டும் என்கின்ற ஆர்வம் எல்லா இடத்திலும் ஏற்பட்டிருக்கிறது. அந்த முறையில் திட்டமிட்ட பொருளாதாரம் முன்னேறிக்கொண்டிருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. நம் நாடு சுதந்திரம் அடைவதற்கு முன் இந்த உணர்ச்சி இருந்ததில்லை. காரணம் அதற்கான வசதிகள் அப்போது கிடையாது. இப்போது வேண்டிய உதவிகள் கிடைக்கின்றன. சர்க்கார் செய்துகொடுக்கின்ற உதவியின் காரணமாக எல்லா மக்களுடைய உள்ளத்திலும் நாம் தொழில்களில் முன்னேற வேண்டும் என்ற உணர்ச்சி, விவசாயத் துறையாக இருந்தாலும் சரி, வேறு எந்தத் துறையாக இருந்தாலும் சரி, எல்லா இன மக்களுடைய உள்ளத்திலும் முன்னேற வேண்டும் என்கின்ற உள்ளக் கிடக்கை வளர்ந்துகொண்டு வருகிறது. ஆகவே வரியை எதிர்ப்பதில் மட்டும் எந்தவிதமான பிரயோசனமும் இல்லை. மக்கள் இதை தாங்களாகவே எதிர்க்காவிட்டாலும், எதிர்க்கட்சிகள் அவர்களை எதிர்க்கும்படி தூண்டுகிறார்கள். இதிலிருந்து மக்கள் திட்டங்களை எதிர்க்கவில்லை என்று தெரிகிறது. இதை நாம் கவனிக்க வேண்டும். நாம் போட்ட முதலாவது, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலமாக நாம் போட்டிருந்த திட்ட இலக்குகளைவிட அதிகமாகவே உணவு தான்ய உற்பத்தியை பெருக்கியிருக்கிறோம். அதுபோலவே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் திட்ட இலக்குக்கு மேலாக உற்பத்தி செய்ய முடியும் என்ற நம்பிக்கை நமக்கிருக்கிறது. ஆனால் சிலர் கேட்கிறார்கள், உற்பத்தி அதிகமாக செய்திருக்கின்றோம், அப்படியானால் பற்றாக் குறை ஏன் ஏற்படுகிறது என்று கேட்கிறார்கள். இதைப்பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். நாம் அதிகப்படுத்துகின்ற உணவு உற்பத்தியைவிட, மக்களுடைய உற்பத்தி அதிகமாக இருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆகவே மக்களுடைய உற்பத்திக்கு ஏற்றவாறு உணவு உற்பத்தி ஆகவில்லை என்பதைத் தவிர உணவு உற்பத்தி அதிகமாகவில்லை என்று சொல்ல முடியாது.

மேலும், நாம் பல திட்டங்களைப் போட்டிருக்கிறோம். பெரிய கனரகத் தொழில்களை எல்லாம் ஏற்படுத்தியிருக்கிறோம். சிறிய சிறிய தொழில்களை ஏற்படுத்துவதற்கெல்லாம் வழிவகை செய்திருக்கிறோம். முக்கியமாக நூற்பு ஆலைகளைப் பொறுத்த வரையில், சிறிய சிறிய யூனிட்டுகளாக அமைக்கவேண்டும் என்று

திட்டமிட்டிருந்தோம். ஆனல் இப்போது அதற்கான சூழ்நிலை இல்லாதவாறுதான் இந்த புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறது. ஒரே இடத்தில் கதிர்கள் குவிந்து கிடக்காமல் பல யூனிட்டுகளாக அமைந்திருந்தால், அதன் காரணமாக பல குடும்பங்கள் பிழைப்பதற்கு ஏதுவாக இருக்கும். அதன் மூலம் கைத்தறி நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் உதவியாக இருக்கும் என்பதையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே சிறிய சிறிய யூனிட்டுகளாக ஏற்படுத்தி அமல் நடத்தவேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மதுரையில், மனநோய் ஆஸ்பத்திரி ஒன்று ஏற்படுத்தவேண்டும் என்று கேட்டிருந்தோம். அது இப்போது மூன்ருது திட்டத்தில் சேர்க்கப்போவதாக கூறப்பட்டிருக்கிறது. அதற்காக அரசாங்கத்திற்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். அந்த ஆஸ்பத்திரியை சிக்கிரமாக ஏற்படுத்தி தர வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

(திருமதி ராஜாத்தி குஞ்சிதபாதம் தலைமை.)

நகரசபை எல்லைக்குள் மூன்று குதிரை வேக ஓட்டமுள்ள மோட்டார்களை வைத்துக்கொண்டு பயன்படுத்திக்கொள்ளலாம் என்ற விதி அமலில் இருந்து வருகிறது. ஆனல் எல்லோரும் எல்லா காரியங்களுக்கும் மூன்று குதிரை வேக ஓட்ட முள்ள மோட்டாரை உபயோகப்படுத்துவதில்லை. அரை குதிரை வேக ஓட்டமுள்ள மோட்டார், ஒரு குதிரை வேக ஓட்டமுள்ள மோட்டார், ஒன்றரை குதிரை வேக ஓட்டமுள்ள மோட்டார் இவைகளைத் தான் சிறிய சிறியத் தொழில்களுக்கு—அருணைக் கயிறு தொழில் போன்ற தொழில்களுக்கு—உபயோகிக்கின்ருர்கள். ஆனல் மூன்று குதிரை வேக ஓட்டமுள்ள மோட்டார் உபயோகித்தாலும் இல்லாவிட்டாலும் ஒரே மின்சார கட்டணத்தைக் கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்தப்பட்டுவருகிறது. இதை மாற்றி எந்தெந்த மோட்டார் உபயோகிக்கப்படுத்துகிருர்களோ அதற்குத் தகுந்தவாறு கட்டணத்தை கொடுக்கக்கூடிய வகையில் விதிகள் இருக்கவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

மருத்துவக் கல்லூரியில் படிக்கும் மாணவர்கள் 7½ வருஷம் படிக்கிருர்கள் என்பது இங்கு இருக்கக்கூடிய எல்லோருக்கும் தெரியும். ஐந்து அல்லது 4½ வருஷம் படித்து பரிட்சை எழுதி முடித்தபிறகு, ஒரு வருடம் இன்டர்னி என்றும், அதற்கடுத்து ஹவுஸ் சர்ஜன் என்றும் இப்படியாக 7 அல்லது 7½ வருஷங்கள் அவர்கள் படிக்க வேண்டியிருக்கிறது. ஹவுஸ் சர்ஜனுக இருக்கும் மாணவர்களுக்கு, அதுவும் இன்டர்னி பதவி முடிந்து, அவர்கள் பட்டம் பெற்ற பிறகு ஒரு வருஷம் வேலை பார்க்கிருர்கள். இது அனுபவத்திற்காக. அந்தக் காலத்திலே ஒரு சிலருக்கும் மட்டும் மாதம் 100 ரூபாய் கொடுக்கப்படுகிறது. சிலருக்கு கொடுப்பதில்லை. அது எதற்கு? இந்த பாகுபாடு ஏன் என எனக்குப் புரியவில்லை. 6½ வருஷம் சர்க்கார் ஸ்காலர்ஷிப் பெற்ருே அல்லது தாய், தந்தையரின் பராமரிப்பிலோ கஷ்டப்பட்டு படித்துவிட்டு, பட்டம் பெற்ற பிறகு எல்லா மாணவர்களுக்கும் ஒரேமாதிரியாக மாதம்

3rd July 1962] [திருமதி பி. கே. ஆர். லக்ஷ்மிகாந்தம்]

இல்லாது போனாலும் உடனடியாக போட வேண்டுமென்று கனம் சுகாதார அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்கிறேன். அவர்கள் மதுரைக்கு வந்திருந்தபோது, இதற்கு ஒரு அப்பீல் செய்துக்கொண்டிருக்கிறோம். ஆகவே, இதை கவனிப்பார்கள் என்று நான் கருதுகிறேன். ஏனென்று கேட்டால், முன்பு எல்லாம் ஹவுஸ் சர்ஜனாக இருக்கும்போது, வீட்டில் இருந்துகூட வரலாம் என்று விதி இருந்தது. இப்போது அது தவிர்க்கப்பட்டு ஹவுஸ் சர்ஜனாக இருக்கும்போது ஆஸ்பத்திரியிலேயே இருக்கவேண்டு மென்று முடிவு செய்திருக்கிற காரணத்தினாலும், அதனால் அவர்கள் அங்கு சாப்பாட்டுக்குரிய 75 ரூபாய் கொடுக்கவேண்டி இருப்பதாலும், எல்லா மாணவர்களுக்கும் ஒரே மாதிரியாக 100 ரூபாய் கொடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

மதுரைக்கு சர்வகலாசாலை கூடிய சீக்கிரம் வந்து விடுமென்று நான் எதிர்பார்க்கிறேன். கனம் கல்வி அமைச்சர் அவர்கள் அதற்கான ஏற்பாட்டைச் சீக்கிரம் செய்யவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன். கல்விச் சலுகையை 1,200 ரூபாயிலிருந்து 1,500 ரூபாயாக உயர்த்தியிருக்கிறார்கள். அதற்கு நன்றி தெரிவித்தாலும்கூட, இத்தொகை போதாது. இதை 2,000 ரூபாய் என்று உயர்த்தினால் மிகச் சுலபமாக இருக்கும்; அந்தச் சூழ்நிலையிலே மிகவும் எளியவர்கள் பயன்பெற முடியும் என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். மதுரை சர்க்கார் ஆஸ்பத்திரியிலே இப்போது 4 யூனிட்தான் இருக்கிறது. இதை 6 யூனிட்டாக அதிகரித்து மாற்றியமைக்க வேண்டுமென்று, கேட்டுக்கொள்கிறேன். மதுரை சர்க்கார் ஆஸ்பத்திரியில், சென்னையைக் காட்டிலும் அதிக படுக்கைகள் உள்ளன. ஆகவே, அதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய பாய், பெட்ஷீட், தலையணை முதலியவைகளையாவது வாங்கிக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பெண்களுக்கு பாலிடெக்னிக்கு மதுரையில் கூடிய சீக்கிரம் ஏற்படுத்த வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

விலைவாசியைப் பற்றி ஒரு வார்த்தை சொல்லிக்கொண்டு, நான் என் பேச்சை முடித்துக்கொள்கிறேன். இப்போது விலைவாசி உயர்ந்திருக்கிறது என்பது வாஸ்தவம்தான். ஆனால், அரிசி விலை சமீபத்தில் ஏறவில்லை. ஒரேமாதிரியாக இருந்துகொண்டே வருகிறது. மல்லி, மிளகாய், புளி ஆகியவற்றின் விலை இப்போது குறைந்திருக்கிறது. உளுத்தம் பருப்பு, துவரம் பருப்பு விலை சற்று அதிகமாக இருக்கிறது. அதுவும்கூட பற்றாக்குறையின் காரணமாக என்று நான் கருதுகிறேன். ஆகவே, அதற்கு வேண்டிய ஒரு சூழ்நிலையை உண்டாக்கி, அதன் விலையையும் குறைத்துவிட வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். ஸ்டாம்பு சம்பந்தமாக மூன்று ரூபாய் . . (மணியடிக்கப்பட்டது).

* **திரு. கே. எஸ். அர்த்தநாரீஸ்வர கவுண்டர்:** கனம் சபைத் தலைவர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கக்கூடிய 1962-63-ம் ஆண்டு நிதி அறிக்கையை

[திரு. கே. எஸ். அர்த்தநாரீஸ்வர கவுண்டர்] [3rd July 1962

ஆதரித்து நான் சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். குறிப்பாக, கனம் அமைச்சர் அவர்கள் இந்த நிதி இலாகாவின் பொறுப்பை ஏற்றுக்கொள்வதற்கு முன்பாக, அநேகமாக எல்லா இலாகாக்களேயும் நிர்வகித்து, இப்போது இந்த நிதி இலாகாவை ஏற்றுக் கொண்டிருக்கிருர்கள். அதனுல் நன்ருக பரிசிலனே செய்து, எல்லா இலாகாக்களும் நல்ல முறையிலே பணியாற்றக் கூடிய முறையிலே, இந்தத் திட்டத்தைத் தயாரித்து இருக் கிருர்கள் என்பதற்காக நான் அவர்களேப் போற்றுகின்றேன்.

குறிப்பாக, எனக்கு முன்பு பேசிய கனம் எதிர்க்கட்சி அங்கத்தினர் ஒருவர், எதிர்க்கட்சியிலே இருக்கக்கூடிய மின்சார விசிறிகூட ஓடவில்லே என்று சுட்டிக்காட்டிஞர். உண்மை யிலேயே, வரி போடவில்லே என்ருல் இந்த விசிறி ஓடாது என்பதை அவர்கள் நன்ருகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அதற்கு உதாரணமாகத்தான் அவர்களுக்கு மேலே உள்ள விசிறி யானது அந்தச் சமயத்தில் ஓடாமல் நின்றது என்பதை அவர்கள் உணரவேண்டும். இந்த நாட்டிலே வரி போடாவிட்டால், நிச்சய மாக எந்தவிதமான திட்டத்தையும் நிறைவேற்ற முடியாது என்பதை நாம் உணரவேண்டும். அவர்கள் சொன்ஞர்கள், சர்க்கார் கட்சியில் உள்ள அங்கத்தினர்கள் பலர், சர்க்கார் கட்சியின் திட்டங்களே ஆதரிக்காமல் பேசினர்கள் என்று. ஆனுல் அவர்களே நான் ஒன்று கேட்கிறேன். சர்க்கார் செய்யக்கூடிய திட்டங்களில் குறைபாடுகள் இருந்தால், அதை எதிர்க் கட்சியினர் தான் சொல்லவேண்டுமென்பதில்லே. ஆளும் கட்சியிலே இருக்கக் கூடிய கனம் அங்கத்தினர்களும் சொல்லவேண்டுமென்பதை அவர் கள் உணரவேண்டும். அதேமாதிரி, ஆளும் கட்சியினர் வரி போட வேண்டுமென்பதை எதிர்க் கட்சியினர் எதிர்க்கத்தான் வேண்டு மென்று எவ்வித விதியும் கிடையாது. எதிர்க்கட்சியிலே இருக்கக் கூடியவர்கள் இதுவரையிலும் பேசி வந்தவர்கள், இன்னும் யார் யார் மீது எவ்வித புதிய வரிகள் போடலாமென்று குறிப்பிடு வார்கள் என்று எதிர்பார்த்தேன். ஆனுல் போட்டுள்ள வரியைப் பற்றி குறை சொன்ஞர்களே தவிர, இன்னும் பல திமிங்கலங்கள் இருக்கின்றது என்பதை மறந்து விட்டார்கள் என்று நான் நினேக் கிறேன். குறிப்பாக, சினிமா அதிபர்களுக்கு, பட முதலாளி களுக்கு, படம் எடுப்பவர்களுக்கு, அந்த சினிமாக்களுக்கு கதை எழுதுகிறவர்களுக்கு எல்லாம் எத்தனே லட்சக் கணக்கான ரூபாய், கோடிக்கணக்கான ரூபாய் கருப்பு மார்க்கெட்டில் கொடுக்கப்படுகிறது என்பதை குறிப்பிட விரும்புகிறேன். இதைப் பற்றி நண்பர் கிருஷ்ணமூர்த்தி அவர்கள் எடுத்துச் சொல்லி இருப்பார்களேயாஞல், உண்மையிலேயே அது வரவேற்கக் கூடிய தாக இருக்கும். நண்பர் கருணுநிதி அவர்கள் பேப்பர் கோட்டா விற்கு வரி போடவேண்டுமென்று கூறுகிருர். அப்படி அதற்கு வரி போட்டால், நாங்கள் நிச்சயமாக அதை எதிர்க்கமாட்டோம் என்று நண்பர் கோசல்ராம் அவர்கள் கூறுவார்கள் என்று நினேக் கிறேன். இதிலே கொஞ்சம்கூட சந்தேகப்பட வேண்டியதில்லே. ஆகவே, நாட்டினுடைய முன்னேற்றத்தைப் பாதுகாக்க நல்ல முறையிலே கொண்டு வரப்படுகின்ற இத்தகைய வரிகளே எதிர்க் கட்சிக்காரர்களும் பாகுபாடு இல்லாமல் வரவேற்க வேண்டும்.

3rd July 1962] [திரு. கே. எஸ். அர்த்தநாரீஸ்வர கவுண்டர்]

நாட்டிலே வறுமையிலே வாடியுள்ளவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டுமென்றால், திட்டங்கள், தொழில்கள் நல்லமுறையிலே நடக்கவேண்டுமென்றால், நாடு சோஷலிஸ பாணியில் முன்னேற்றம் அடைய வேண்டுமென்று சொன்னால், வரி போட்டுத்தான் ஆகவேண்டும். இதை நான் வரவேற்கிறேன்.

அதேமாதிரி இங்கு கனம் அமைச்சர் அவர்கள் நம்முடைய விவசாய அபிவிருத்தியைப் பெருக்குவதற்காக நிறைய புல்டோசர்களை வரவழைத்திருப்பதாக சொல்லியிருக்கிறார்கள். அது வரவேற்கக்கூடிய விஷயமாகும். இப்போதுள்ள முறையிலே நாட்டிற்கு இப்போது இருக்கக்கூடிய அளவிற்கு புல்டோசர்கள் போதாது. அதேமாதிரி டிராக்டர்களைப் பொருத்த அளவிலேயும், விவசாயத்தைப் பெருக்க வேண்டுமென்று சொன்னால், அதிகமாக டிராக்டர்களை வாங்க வேண்டுமென்று சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். குறிப்பாக, சேலம் ஜில்லாவைப் பொறுத்தவரையிலே தொப்பையாறு திட்டத்தை நீர்ப்பாசன திட்டத்திலே சேர்க்கப் படாமல் இருப்பதானது மிகவும் வருத்தப்படக்கூடிய விஷய மாகும். அதேமாதிரி மேட்டூர் அணைக்கட்டைப்பற்றி நான் ஏற்கனவே இந்த சட்டசபையில் பல தடவை பேசியிருக்கிறேன். மேட்டூர் அணைக்கட்டைக் கட்டிய என்ஜினியர் அவர்கள் அந்த மேட்டூர் அணைக்கட்டைப் பற்றி எழுதியிருக்கக்கூடிய புஸ்தகத் திலே, அந்த அணையை இன்னும் 10 அடி உயர்த்திக் கட்டலாம், அதற்கு வேண்டிய அஸ்திவாரம் போட்டிருக்கிறோம்; ஆனால் அப்போது பாய்வதற்குப் போதிய நிலங்கள் இல்லை என்று குறிப் பிட்டிருக்கிறார்கள். ஆகவே, அந்த விதத்திலே இப்போது இருக்கக் கூடிய மின்சார வெட்டு வாராமல் இருப்பதற்கு மேட்டூர் அணைக் கட்டில் மேலும் 10 அடி தண்ணீர் கட்டுவதற்கான வழிவகைகளைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதேமாதிரி, சேலம் ஜில்லாவிலுள்ள ஹொகனேக்கல் திட்டத் தையும் அதோடு எடுத்துக்கொள்ள வேண்டும். மேட்டூர் அணையை 10 அடி உயர்த்தினால்தான் அங்கிருக்கக்கூடிய வறுமையைப் போக்க முடியும். அப்படி 10 அடி உயர்த்திக் கட்டினால்தான், திருமணியாறு திட்டத்தையும் கொண்டு வருவதற்கு முடியும் என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்ததாக, பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களைப் பொறுத்த வரையிலே அங்கிருக்கக்கூடிய ஆரம்பப் பள்ளிக்கூடங்களிலே தேர்ந்தெடுக்கப்படும் புஸ்தகங்களுக்கு நல்ல கல்வி நிபுணர்கள் அடங்கிய ஒரு கமிட்டியைத் தேர்ந்தெடுத்து, அவர்கள் புஸ்தகங்களை தேர்ந்தெடுக்கச் செய்யவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இப்போது அவர்களிடம் புதிதாக நிர்வாகத்தை நாம் ஒப்படைத் திருக்கிறோம். அதுவும் நாட்டிலே குறிப்பாக ஏழை மக்களின் கல்வித்தரம் நல்லமுறையிலே உயரவேண்டுமானால், ஆரம்பப் பள்ளிக்கூடங்களிலே உள்ள குழந்தைகளின் கல்வி நல்லமுறையில் அமைவதற்கு, நல்ல புஸ்தகங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியது அவசியம். ஆகவே, அதற்கு நிபுணர்கள் கொண்ட ஒரு

[திரு. கே. எஸ். அர்த்தநாரீஸ்வர கவுண்டர்] [3rd July 1962

கமிட்டியை நியமிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதைப் பொருத்தவரையிலும், பஞ்சாயத்து யூனியன்களிடமிருந்து ஆரம்பப் பாடசாலேகளை சர்க்காரே நேரடியாக எடுத்து நடத்தினுல் நன்ருக இருக்கும். ஏனென்ருல், அங்கு இருக்கக் கூடிய ஆசிரியர்கள் பஞ்சாயத்து யூனியன் தலேவர்களிடத்தில் பெரும் அவதியுற்றிருக்கிருர்கள். இதை சர்க்கார் கவனத்தில் எடுத்துக்கொண்டு, சர்க்காரே நேரடியாக ஆரம்பப் பள்ளிக் கூடங்களை எடுத்துக்கொண்டு கவனித்தால் நலமாக இருக்கும். உயர்நிலே பள்ளிகளைப் பொருத்தவரைக்கும், அநேக பள்ளிகள் புதியதாக திறக்கப்பட்டிருக்கின்றன. ஆனுல், அவைகளுக்கு கட்டிடம் கட்டுவது எந்தத் திட்டத்திலும் சேர்க்கப்படாமல் இருக்கிறது. அவைகளுக்கு புதிய கட்டிடங்கள் கட்டுவதற்கு சர்க்கார் வழிவகை செய்யவேண்டும் என்று நான் சொல்லிக் கொள்ளுகிறேன். சென்னேயில் இருக்கக்கூடிய ஆரம்பப் பள்ளிகளுக்கும், கிராமங்களில் இருக்கக்கூடிய ஆரம்பப் பள்ளிகளுக்கும் கல்வியிலே மிக வித்தியாசம் இருக்கிறது என்பதை நான் கனம் அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஏனென்ருல், இப்பொழுது என்ஜினியரிங் கல்லூரிகளுக்கோ மருத்துவ கல்லூரிகளுக்கோ அல்லது விவசாய கல்லூரிகளுக்கோ மாணவர்களை தேர்தெடுக்கும்போது பார்த்தால் அநேகமாக நகரத்திலுள்ள மாணவர்கள்தான் நல்ல மார்க்குகள் வாங்குகிருர்கள். காரணம் கிராமங்களில் கல்வித் தரம் குறைந்திருப்பதுதான். அங்கு கல்வித் தரத்தை உயர்த்தவேண்டுமென்று நான் அவர்களுக்கு சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, மேட்டூரில் நல்ல மேய்ச்சல் தரை ஏற்படுத்துவதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஆகையால், அங்கே ஒரு நல்ல காட்டு வளம் இருக்கிறது. ஆகையால், அங்கே ஒரு கால்நடைப் பண்ணேயையும், பால் பண்ணேயையும் ஏற்படுத்துவதற்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது. அதைப் பரிசீலனே செய்து அங்கே ஒரு கால்நடைப் பண்ணேயையும், பால் பண்ணேயையும் ஏற்படுத்த வேண்டுமென்று சர்க்காரின் கவனத்திற்கு கொண்டுவருகிறேன்.

தொழில் பேட்டையைப் பொருத்தவரையில், மேட்டூரில் 100-க்கு 95 பேர்கள் தொழிலாளர்களாக இருக்கிருர்கள். ஐந்து சதவிகிதத்தினர்தான் அங்கு கடைகள் வைத்துக்கொண்டிருக்கிருர்கள். அங்கு இருக்கக்கூடிய அத்தனே பேர்களும் தொழிலாளர்களாக இருக்கிருர்கள். அவர்களுடைய குழந்தைகள் நல்ல முறையில் கல்வி கற்க வேண்டுமென்ருல் அங்கு ஒரு தொழில் பேட்டையை உருவாக்கினுல் நலமாக இருக்கும். அந்தத் தொழில் பேட்டையை நல்ல முறையில் லாபகரமான முறையில் நடத்துவதற்கு அங்கு தொழிலாளர்கள் இருக்கிருர்கள் என்று நான் சொல்லிக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக சேலம் ஜில்லாவில் இரும்புக் கனி இருக்கிறது என்று சொல்லிக்கொண்டிருக்கிருர்கள். அங்கே இரும்புத் தொழிற்சாலே எப்பொழுது வரக்கூடும் என்று சொல்லக்கூடிய நிலேமை இல்லே. அப்படி வந்தாலும்கூட, அதை நெய்வேலியில் வைப்பதா, சேலத்தில் வைப்பதா என்ற பிரச்னே இருந்து

கொண்டிருக்கிறது. சேலத்திலுள்ள மக்கள் மிகவும் பிற்போக்கான மக்கள். ஆகவே, இரும்புத் தொழிற்சாலை சேலத்தில் இருப்பது அவசியம், அதை அங்கே அமைக்க வேண்டுமென்று நான் கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பித்த போது 18.5 லட்சம் குழந்தைகள் துவக்கப் பள்ளியில் இருந்தார்கள். இன்று 39.3 லட்சம் குழந்தைகள் கல்வி பயில்கிறார்கள் என்று கனம் அமைச்சர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் 10 ஆண்டுகளுக்கு பிற்பாடு நல்ல வேலை வாய்ப்பு கிடைக்கவேண்டுமென்றால், அந்தக் குழந்தைகளுக்கு பிற்காலத்தில் என்ன வேலை வாய்ப்பு கிடைக்கும் என்பதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிடவில்லை. கல்வி மானிய விவாதத்தின்போது அதைப்பற்றி விரிவாகக் குறிப்பிடுவார்கள் என்று நினைக்கிறேன். படித்தவர்களுக்கு என்ன வேலை வாய்ப்பு கொடுக்கிறோம் என்பதை விரிவாகச் சொல்லவேண்டும் என்று நான் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். ஏனென்றால் 'எஜுகேடட் அன் எம்ப்ளாய்மெண்டு' வராமல் பார்த்துக்கொள்ளுவதற்கு சர்க்கார் இப்பொழுதிருந்தே அதற்கு வேண்டிய திட்டங்களைப் போட்டு வழி வகைகள் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

சேலம் ஜில்லாவை இரண்டாகப் பிரிக்கவேண்டும் என்று ஒரு திட்டம் இருக்கிறது. சேலத்தை மட்டும் வைத்துக் கொள்ளாமல், பக்கத்தில் இருக்கும் வட ஆற்காடு ஜில்லாவையும் வைத்துக்கொண்டு, சேலத்தை மூன்றாகப் பிரித்தால் நன்றாக இருக்கும். குறிப்பாக ஓமலூர் தாலூகாவை தென் சேலத்தோடு சேர்த்துக்கொண்டால் அங்கு இருக்கக்கூடிய தலைநகரத்திற்கு பக்கத்தில் இருக்கும். இருபது, 25 மைல் பக்கத்தில் இருக்கும். ஆகவே, ஓமலூர் தாலூகாவை சேலம் தலைநகரத்தோடு இணைக்க வேண்டுமென்று நான் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, சேலம் ஜில்லாவிலே குறிப்பாக என்னுடைய தொகுதியிலே சேலம் ஜில்லாவிற்கும் மைசூர் மாகாணத்திற்கும் இணைப்பாக 15 லட்சம் ரூபாய் செலவிலே ஒரு ரஸ்தா அமைப்பதாக இருந்து, அதற்காக மத்திய சர்க்காரும் தொகை ஒதுக்கியிருக்கிறார்கள். அதேமாதிரி காவேரி ஆற்றில் ஒரு பாலம் கட்டுவதற்கு திட்டமிருக்கிறது. அதற்கு மத்திய சர்க்காரும் மான்யம் கொடுத்திருக்கிறார்கள். இந்த வரவு செலவுத் திட்டத்தில் இந்த இரண்டு திட்டங்களும் சேர்ந்திருப்பதாகத் தெரியவில்லை. அவர்கள் அனுமதி கொடுத்த திட்டத்தை உடனடியாக நிறைவேற்றிக் கொடுக்கவேண்டுமென்று கனம் நிதி அமைச்சர் அவர்களை கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

* **திரு. செ. சதாசிவம்:** மதிப்பிற்குரிய சபைத் தலைவர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கக் கூடிய 1962-63-ம் ஆண்டுக்கான நிதிநிலை அறிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல அனுமதி கொடுத்ததற்கு

உங்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நாம் சென்ற இரண்டு திட்டங்களிலே பெற்ற அனுபவத்தைக் கொண்டு, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முதல் ஆண்டிலே நடந்த சில திட்டங்களேயும் வைத்து, இந்த ஆண்டிலே என்ன வேண்டுமென்பதற்கு ஒரு அறிக்கையை தயாரித்து, அதை நாம் நிறைவேற்றக்கூடிய நிலைமையிலே இருக்கிருேம். கனம் நிதி அமைச்சர் அவர்கள் கூறியதுபோல, சென்ற இரண்டு ஐந்தாண்டு திட்டங்களில் நாம் வெகுவாக முன்னேறியிருக்கக்கூடிய அம்சங்களே எடுத்து உரைத்திருப்பதைப் பார்க்கும்பொழுது, விவசாயத் துறையில் நாம் வெகுவாக முன்னேறியிருக்கிருேம் என்பதை நாம் குறிப்பாக காண்கிருேம். அதிலும் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் ஓரளவுக்கு நாம் விவசாய பொருள்களே அதிகமாக உற்பத்தி செய்திருக்கிருேம். இரண்டாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் குறிப்பாக 9 லட்சம் டன்கள் அதிகமாக உற்பத்தி செய்திருக்கிருேம் என்று குறிப்பிட்டிருப்பதை நாம் காண்கிருேம். உற்பத்தி அதிகரிப்பு நாம் எதிர்பார்த்த அளவுக்கு இல்லாததற்குக் காரணம், நமக்கு வேண்டிய செயற்கை உரங்கள் போதவில்லே என்று கூறப்பட்டிருப்பதை நாம் காண்கிருேம். அதுமட்டும் காரணம் இல்லே என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சென்ற 10 ஆண்டுகளில் பருவ மழை தவறியிருப்பதால், நம்முடைய ராஜ்யத்திலுள்ள அதிகமான வரண்டுள்ள பிரதேசங்களில் உற்பத்தி செய்யக்கூடிய மாவாரி பயிர்கள் மிகவும் பாதிக்கப்பட்டு, அநேகமாக 10 ஆண்டுகளிலே புஞ்சை தானியங்கள் உற்பத்தி செய்யப்படவில்லே என்பதை நாம் உணர்கிருேம். அந்தப் பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்டிருந்தால், அதற்கு வேண்டிய வாய்ப்புகள், வசதிகள் இருந்தால், நிச்சயம் நாம் அடைய எண்ணியிருந்த உற்பத்தி அளவுக்கு அதிகமாகவே உற்பத்தி பெற்றிருப்போம் என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதேபோன்று பருவ மழை தவறியதின் காரணமாக, நஞ்சைப் பயிர்களிலும் அதிக உற்பத்தியை காணமுடியாத சூழ்நிலேயையும் அடைந்தோம். அதை விவசாயிகள் நன்கு உணர்வார்கள். பருவ மழை தவறியும், சில சமயங்களில் பெய்யக்கூடிய மழையை உபயோகித்து, உணவு உற்பத்தியை அதிகரிப்பதற்கு வேண்டி நமது சர்க்கார் திட்டங்களேத் திட்ட தவறவில்லே. குறிப்பாக நான் இருக்கிற பிரதேசங்களேப்போன்று பல வரண்ட பிரதேசங்களில் அதிகமான கிணறுகளே வெட்டி, அந்தக் கிணறுகள் மூலம் தண்ணீரை இறைத்துப் பாய்ச்சக்கூடிய வசதிகளேயும், வாய்ப்புகளேயும் சர்க்கார் ஏற்படுத்திக் கொடுத்திருக்கிருர்கள். கிணறு வெட்டும் திட்டங்கள் அதிகமாக போடப்பட்டு, பல இடங்களில் புதிய கிணறுகள் வெட்டிவருகிற சமயத்தில் ஊற்று நீரானது தரை மட்டத்திலிருந்து அதிக ஆழத்திற்கு செல்லக்கூடிய ஒரு சூழ்நிலே அமைந்து வருகிறது. பருவ மழை தவறியதின் காரணமாகவும் அதிகமாக கிணறுகள் வெட்டுவதின் காரணமாகவும், அதிகக் கிணறுகள் வெட்டினுலும், அதன் மூலம் பாசன வசதி குறைந்த அளவுக்குத் தான் கிடைத்து வருகிறது. அந்த நிலேயில் ஆங்காங்கு மழை பெய்யும் காலத்தில், அதுவும் குறிப்பாக எங்கள் பிரதேசத்தில்

3rd July 1962] [திரு. செ. சதாசிவம்]

கரூர் தாலூகாவில் அரவக்குரிச்சி தொகுதியில் அதிகமாக மேடு பள்ளத்தாக்குகள் நிறைந்த இடங்கள் இருப்பதால் மழை தண்ணீர் பெய்யும்பொழுது, அந்தத் தண்ணீர் அதிகமாக பூமியிலே தங்காமல், சிறு சிறு ஓடைகள் வழியாகச் சென்று ஆற்றிலே விழுகின்றன.

(கனம் உதவி சபாநாயகர் தலைமை.)

இதைத் தடுத்து, 'செக் டாம்ஸ்' என்று சொல்லும் சிறிய தடுப்பு அணைகளைக் கட்டி தண்ணீரை தேக்கினால், அதிகமாக கிணறுகள் வெட்டக்கூடிய நேரத்திலும், கிணறு ஊற்று மேலே இருந்து அதிக நன்மையும் கொடுக்கும் என்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இந்தத் திட்டம் புதிதல்ல. இதை நிறைவேற்றுவதற்கு சர்க்கார் பாதித் தொகையை மானியமாகக் கொடுத்து, மீதி பாதித் தொகையை அங்கேயுள்ள பொது மக்களிடமிருந்து பெற்றுக்கொண்டு செய்யக்கூடிய திட்டமாக இருக்கிறது. ஆனால் நான் சென்ற சட்டசபையிலே கூறிய பொழுதுகூட இதைச் சொன்னேன். இந்த திட்டமானது எந்த பகுதியில் உள்ள கிணறுகளுக்கும் நன்மை தரக்கூடியது என்ற அம்சமும் போதிய பொருளாதார வசதியும் இல்லாத காரணத் தால் அதை அமுலாக்க முடியாத சூழ்நிலையில் இருக்கிறோம் என்று. அதற்குக் காரணம் இந்த திட்டமானது பொதுப்பணி இலாகா அல்லது சிறுநீர்ப்பாசன இலாகா ஆகிய இவர்களின் நேரடியான திட்டம் இல்லை, இது ஒரு மறைமுகமான திட்டம் என்று குறிப்பிட்டு அவர்களே செய்ய சட்டம் இடம் கொடுக்கவில்லை என்றார்கள். ஆனால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் குறிப்பிலே, கோயம்பத்தூர், சேலம் மாவட்டங்களுக்கு தனியாக ஒரு சலுகை கொடுத்து இந்தத் திட்டத்தை அந்த இரண்டு இலாகாவினரும் செய்யலாம் என்ற ஒரு குறிப்பு காணப் படுகிறது. கோயம்பத்தூர் ஜில்லாவின் ஒரு பகுதியாகத்தான் எங்கள் பகுதி விளங்குகிறது. நான் இதைப்பற்றி கனம் பொதுப் பணி இலாகா அமைச்சர் அவர்களுக்கு அதிகம் சொல்லவேண்டி யது இல்லை. என்னுடைய பகுதியைப் பற்றி அவர்களுக்கு நன்கு தெரியும். கோயம்பத்தூர் ஜில்லாவுக்கு என்ன சலுகைகள் கொடுக்கப்படுகின்றனவோ, அவைகளை எங்களுக்கும் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றால், இந்தத் தண்ணீரை தடுத்து நிறுத்தினால்தான் எங்கள் பகுதிக்கு ஓரளவு நன்மை ஏற்படும். இந்தத் தண்ணீரை தடுப்பதற்கு தடுப்பு அணை கட்டுவதோடு, மண் அரிப்பு தடுப்புத் திட்டத்தையும் மேற்கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால்தான், கோயம்பத்தூர் எல்லை யிலுள்ள ஒவ்வொரு பகுதியிலும் மண் அரிப்பு தடுப்பு திட்டத்தால் பயனடையும்போது, எங்கள் பகுதிக்கும் நன்மை ஏற்படும். கோவை மாவட்டத்திலே மூன்று வட்டாரங்களிலே இந்த மண் வளப் பாதுகாப்புத் திட்டத்தை நிறைவேற்றப் போவதாக குறிப் பிட்டிருக்கிறார்கள். அந்த அடிப்படையிலே, எங்கள் பகுதியிலே இந்தத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமென்று 12 30 p.m.

[திரு. செ. சதாசிவம்] [3rd July 1962

கேட்டுக்கொள்கிறேன். என் தொகுதியை கோயம்புத்தூர் ஜில்லா அடிப்படையிலேயே அமைக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள் கிறேன்.

இதுபோன்று பல திட்டங்களைச் செய்தால், பருவமழை தவறினாலும் நிச்சயமாக நாம் எதிர்பார்க்கக்கூடிய அளவுக்கு மேல் உணவு உற்பத்தியைப் பெருக்க முடியும். இன்றைய தினம் உணவு தானியங்களின் விலைவாசி ஏறி வருகிறது என்று பெரும் பான்மையான நகர மக்கள் சொல்லுகிறார்கள். இதைப் பற்றி நேற்று எதிர்க்கட்சி கனம் அங்கத்தினர்கள், குறிப்பாக எதிர்க்கட்சியின் கொறடா நல்ல முறையில் எடுத்துரைத்தார். அவர்கள் ஒரு நல்ல விவசாயி என்பதை நான் அறிவேன். அவர் கள் சொன்னார்கள், "உழுபவன் கணக்குப் பார்த்தால் உழவுகோல் கூட மிஞ்சாது" என்று. ஆகவே விவசாயிகளுடைய கஷ்டத்தை அவர்கள் நன்கு உணர்ந்தவர்கள். ஆனால் 30-ஆம் தேதி நடந்த மறியலால் உணவு பொருள்கள் எல்லாம் ஒரேயடியாக விலை ஏறி விட்டது என்று சொன்னார்கள். அந்த அளவுக்குப்போகக் கூடாது. இதை நன்றாகப் பரிசிலனை செய்து விட்டு சொல்ல வேண்டும். விவசாயத்தைப் பொறுத்தவரையில் இப்போது என்ன நிலைமை நிலவி வருகிறது என்பதைப் பார்க்கவேண்டும். ஒரு விவசாயி தன்னுடைய நிலத்தை விற்று, அந்தப் பணத்தை வேறொரு தொழிலிலே முதலீடு செய்தால், நிச்சயமாக விவசாயத் தில் கிடைப்பதைவிட பன்மடங்கு அதிகமாகக் கிடைக்கும் என் பதில் சந்தேகமில்லை. அந்த அளவுக்கு விவசாயிகள் கிராமங்களை விட்டு நகர்ப்புறங்களுக்குச் செல்லுகிறார்கள். இந்த நிலைமை யைத் தடுப்பதற்கு எதிர்க்கட்சி கொறடா உதவுவார்கள் என்று நம்புகிறேன்.

விவசாயத்தைப் பெருக்குவதற்காக என்னுடைய பகுதியில் செய்யவேண்டிய ஒரு சில திட்டங்களை கனம் அமைச்சர் அவர் களுடைய கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். குறிப்பாக எங்கள் பகுதியிலுள்ள நொய்யல் ஆறு திட்டத்தை, அதிலே பல கஷ்டங்கள் இருந்தாலும், சீக்கிரமாக நிறைவேற்றவேண்டும். அதன் மூலமாக சுமார் 25,000 ஏக்கர் நிலம் பயிராகும். கீழ்ப் பவானியின் கீழ் பகுதியிலுள்ள எங்கள் பிரதேசங்களுக்கு அதன் மூலம் குறைந்த பாசன வசதிதான் கிடைக்கிறது. இந்த கீழ்ப் பவானி அணைக்கட்டு அமைக்கப்பட்ட காலத்திலே, கடைக்கோடி யில் துக்காச்சி, கார்வளியில் உள்ள எங்கள் பகுதி சர்வே செய்யப் பட்டு, அந்த பகுதியிலே வெட்டுப்படுவதாக இருந்த ஒரு வாய்க் கால் இன்னும் வெட்டப்படாமல் இருக்கிறது. கீழ்ப் பவானி தண்ணீரைக் கொண்டு இந்த வரண்ட பிரதேசத்தை வளம்பெறச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதேபோன்று பரம் பிக்குளம்-ஆளியாறுத் திட்டம் நிறைவேறக்கூடிய காலத்திலே, பரம்பிக்குளம் கழிவு தண்ணீர் அமராவதிக்கு வந்து சேரும். ஆதலால், அமராவதியில் ஊற்று அதிகமாகும். புதிய ஆயக்கட்டு கள் எல்லாம் கோயம்பத்தூர் ஜில்லாவில் உள்ள மூன்று தாலூகாக் களில் இருப்பதால், தொடர்ந்து வரக்கூடிய நீரை கரூர் தாலூகா விற்குக் கொடுக்கவேண்டும் என்றும், பரம்பிக்குளத் திட்டத்தை

3rd July 1962] [திரு. செ. சதாசிவம்]

விஸ்தரிக்கவேண்டுமென்றும், ஆனைமலையாறு திட்டத்தை உருவாக்கும் நேரத்திலே மிகவும் வறண்ட பிரதேசமாகிய கரூர் தாலுகாவிற்கு அதிக வாய்ப்பு கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

திரு. கோ. சி. மணி: மாமன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கையைப் பற்றிய விவாதத்தில் எதிர்க்கட்சியின் சார்பாக கலந்து கொண்டு பேச நல்லதொரு வாய்ப்பினை அளித்தமைக்கு என்னுடைய வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஜூன் மாதம் 30-ம் தேதியன்று இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையை நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் இங்கே சமர்ப்பித்து, ஏறத்தாழ ஐம்பது பக்கங்கள் கொண்ட அந்த புத்தகத்தை மிகவும் சிரமப்பட்டு இங்கே படித்துக் காட்டினார்கள். அவர்கள் படித்ததை ஒவ்வொரு வரியாகக் கேட்டுக் கொண்டு வருகிறபொழுது, முதியதோர் பழமொழிதான் எங்கள் நினைவுக்கு வந்தது. "பட்ட காலிலே படும், கெட்ட குடியே கெடும்" என்று சொல்வார்கள். அதைப்போலத் தான் யார் இதுவரையில் வரியை சுமந்து தவித்துக் கொண்டிருக்கிறார்களோ, யார் வரியை கொடுக்க முடியாமல் அல்லல் பட்டுக் கொண்டிருக்கிறார்களோ அத்தகைய பொதுமக்களை மேலும் பாதிக்கும் வகையில்தான் இந்த நிதி நிலை அறிக்கையில் வரிகளை போட்டிருக்கிறார்கள். இதை எடுத்துச் சொல்கின்ற நேரத்தில் தான், ஆளும் கட்சியில் இருக்கின்ற அருமை காங்கிரஸ் கட்சியினர் "திராவிட முன்னேற்றக் கழகத்தினருக்கு கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை" என்று கூறுகின்றனர். உள்ளபடியே அவர்களுக்கு இந்த சந்தர்ப்பத்தில் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். திராவிட முன்னேற்றக் கழகத்தினருக்கு கூழுக்கும் ஆசை, அதே நேரத்தில் மீசைக்கும் ஆசைதான். காரணம் என்னவென்றால், மீசையை வைத்துக்கொண்டு கூழையும் குடிக்க முடியும் என்ற நம்பிக்கை பெற்றிருக்கிறார்கள் அவர்கள். (சிரிப்பு.) ஆனால் வைத்துக் கொள்கிற மீசை அளவோடும் தரத்தோடும், குடிக்க வேண்டிய கூழை குடிக்கக் கூடிய வகையில் இருக்க வேண்டும். அப்படி அல்லாமல் இன்று ஆட்சி பீடத்தில் உள்ளவர்கள் ஆட்சி நடத்துகிறார்களே என்று எண்ணுகிற பொழுதுதான் உண்மையிலேயே வருத்தப்படவேண்டியிருக்கிறது. ஆனால் நாங்கள் மீசையை வைத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்வதை, ஏதோ வரியே கூடாது என்று கண்டித்துச் சொல்வதுபோல் கூறுகிறார்கள். நாங்கள் சொல்வது எல்லாம், "போடவேண்டியவர்களுக்கு வரி போடுங்கள், போடவேண்டிய முறைப்படி போடுங்கள்" என்பது தான். வசூலிக்க வேண்டிய முறையில் வசூலிக்க வேண்டும், திட்டத்தைப் போட வேண்டிய முறையில் போட வேண்டும், திட்டத்தை போட்டு அதை முடிக்க வேண்டிய முறையில் அதை முடிக்கவேண்டும். திட்டத்தை முடிக்கும் போது எவ்வளவு சிக்கனமாக முடிக்க வேண்டுமோ, அவ்வளவு சிக்கனமாக முடிக்க வேண்டும். இதைப்பற்றி நாங்கள் சட்ட மன்றத்தில் மட்டுமல்ல வெட்ட வெளியிலும் சொல்லிக்கொண்டு

தான் வருகிறோம். விவசாயிகளுடைய பிரச்னைகளைப் பற்றி பேசும்போது விவசாயிகளைப் பற்றி எங்களுக்குத் தெரியுமா? ஏர் பிடிக்க தெரியுமா? என்றெல்லாம் கேட்கிறார்கள். மண் வெட்டி எடுத்து வெட்டத் தெரியுமா? என்றும் கேட்கிறார்கள். அதைக் கேட்டு உள்ளபடியே நாங்கள் வேதனைப்படுகிறோம், வருத்தப்படுகிறோம். எங்களுடைய பேரணியைப்பற்றியெல்லாம் சொல்லுகிறார்கள். நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் சாதாரணமாக காங்கிரஸ் கட்சியில் ஈடுபட்டவர். காங்கிரஸ் கட்சிக்காக போராடியவர். எவ்வளவோ தியாகம் செய்தவர். போராட்டத்தைப்பற்றியும் பேரணியைப் பற்றியும் நல்ல அனுபவம் உள்ளவர். இவற்றை எல்லாம் அறிந்தவர்தான் இந்த நிதிநிலை அறிக்கையை சமர்ப்பித்திருக்கிறார் போராட்டம் என்றால் என்ன என்பதும் பேரணி என்றால் என்ன என்பதும் அவருக்கு நன்றாகத் தெரியும். சும்மா அட்டையை தூக்கிக்கொண்டு கூக்குரலிட்டால் விலை குறைந்துவிடுமா என்று கேட்கிறார்கள். அப்படியே இந்த மன்றத்திலும் சொல்லுகிறார்கள், வெட்ட வெளியிலும் சொல்லுகிறார்கள். இந்த சட்ட மன்றத்தில் சொல்லும்போது உள்ளபடியே வேதனைப்பட வேண்டியதாக இருக்கிறது. போராட்டம் என்றால் என்ன என்பது அவருக்கு நன்றாக தெரியும். நாங்கள் ரயில்களை கவிழ்த்து, தண்டவாளங்களைப் பிடுங்கி, தந்திக் கம்பிகளை அறுக்கவில்லை. இவர்கள் என்ன அட்டையை பிடித்து காட்டுகிறார்களே, அதனால் விலை இறங்கி விடுமா என்று கேட்கிறார்கள். எங்களுக்கு ஏர் பிடிக்கத் தெரியுமா என்று கேட்கிறார்கள். அவர்கள் முன் ஏர் ஓட்டினால், நாங்கள் பின் ஏர் ஓட்டுவதற்குத் தயாராக இருக்கிறோம். எற்கெனவே கவர்னர் பெருமான் உரையின் மீது விவாதிக்கும்போது, நான் பேசிய பிறகு, ஒரு அம்மையார் பேசினார். இவர்கள் விவசாயக் கருவிகளைப்பற்றியும், விவசாயத்தைப்பற்றியும் பேசுகிறார்களே, இவர்களுக்கு விவசாயிகளைப்பற்றி என்ன தெரியும்? நாங்கள் வெறும் முதலைக் கண்ணீர் வடிக்கிறோம் என்று குறிப்பிட்டார். விவசாயக் கருவிகளைப்பற்றி எங்களுக்கு என்ன தெரியும் என்று சொன்னதைக் கேட்டு நாங்கள் வேதனைப்படுகிறோம். அப்படிப் பேசிய அம்மையார் எவ்வளவு சால் நடவு நடுகிறார்களோ, அதைவிட 3 சால் அதிகமாக எங்களால் நடவு நட முடியும் என்பதை மட்டும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அத்துடன் திராவிட முன்னேற்றக் கழகத்திலுள்ளவர்களில் 90 சதவீதம் விவசாயத்தில் ஈடுபட்டவர்கள் என்பதையும் நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

**கனம் உதவி சபாநாயகர் :** ஒரு அங்கத்தினரைப் பற்றி குறிப்பிட்டுப் பேசக்கூடாது. பொதுவாகப் பேசலாம்.

**திரு. கோ. சி. மணி :** கனம் அங்கத்தினர் என்னை வேறு வழியில் திருப்பிவிட்டதால்தான். அதைப்பற்றி சொல்ல வேண்டியதாக இருக்கிறது. அப்படி திருப்பாமல் இருந்தால், இனிமேல் நானும் சொல்லாமல் இருக்கிறேன். இப்பொழுது அப்படி திருப்பிவிட்டதால் அதைப்பற்றி சொன்னதற்கு கனம் தலைவர் அவர்கள் பொறுத்தருளவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

3rd July 1962] [திரு. கோ. சி. மணி]

நிச்சயமாகச் சொல்லுகிறேன், உழவர்களுடைய நிலை எங்களுக்கு நன்ருகத் தெரியும். உழவர்களுடைய நிலையைக் குறித்து ஆராய்ந்து அறிய அரசாங்கத்தால் ஒரு ஆய்வுக்குழு அமைக்கப் பட்டது. அந்தக் குழுவினர் 1956-57-ம் ஆண்டு ஒரு அறிக்கையை வெளியிட்டிருக்கிருர்கள். அந்தக் குழு இந்தச் சர்க்காரால் அமைக்கப்பட்ட குழுதான். அது தன்னுடைய அறிக்கையையும் சமர்ப்பித்திருக்கிறது. அந்தக் குழு சுமார் 3,600 சிற்றூர்களைச் சுற்றிப்பார்த்து விட்டு வந்து ஒரு அறிக்கையை சமர்ப்பித்திருக் கிறது. அதைப் பற்றி கேட்டால் உடனே என்ன செய்ய முடியும், அப்படி மாற்றி அமைப்பதற்கு மந்திரக்கோலா இருக்கிறது என்று கேட்பார்கள். அப்படி சினிமாவில்தான் காட்டமுடியுமென்று சொல்லுவார்கள். அப்படி சினிமாவில்தான் வரமுடியுமே தவிர உண்மையில் உடனே வராது என்று சொல்லுவார்கள். ஆனல் திட்டங்களை எடுத்துப்பார்த்தால் அவைகள் எல்லாம் தேடிப் பிடிக்க வேண்டியதாக இருக்கிறது. படங்கள் மூலமாகத்தான் காட்டுகிருர்கள். நாடகம் போட்டு காண்பிக்கிருர்கள். கடைசியில் பார்த்தால் திட்டம் எங்கே என்று கண்டு பிடிக்க வேண்டியதாகத் தான் இருக்கிறது. ஐந்தாண்டு திட்டங்களைப்பற்றி நாடகம் போட்டு காண்பிக்கிருர்கள். கடைசியில் பார்த்தால் திட்டமே மறந்து போய் விடுகிறது. சில நிகழ்ச்சிகள் அப்படித்தான் இருக் கிறது. திட்டத்தைப்பற்றி கேட்டால், கல் நாட்டு விழா நடக் கிறது, திறப்பு விழாக்கள் நடக்கின்றன. அதன் பிறகு ஒன்றுமே இல்லை. பிறகு திட்டத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அந்தக் குழு உழவர்களின் நிலையைக் குறித்து 1956-57-ல் வெளி வந்த அறிக்கையில் சில உண்மைகளைக் குறிப்பிட்டிருக்கிருர்கள். 3,600 கிராமங்களின் நிலைமைகளைக் கண்டறிந்து அறிக்கை தயாரிக்கப் பட்டிருக்கிறது. அந்த ஆய்வுக்குழுவினர் தந்த உண்மைகள்: உழவர்கள் நிலை நாளுக்கு நாள் தேய்ந்து கொண்டே வருகிறது. நிலமற்ற உழவர்களின் தொகை அதிகமாகிக்கொண்டே வருகிறது, உழவுத்தொழிலில் உள்ளவர்களின் கூலி குறைக்கப்பட்டு வருகிறது. முன்பு 109 புதுக் காசுகள் கூலி பெற்றவர்கள் இப்பொழுது 96 புதுக் காசுகள் பெற்றுக்கொண்டு வருகின்றனர். உழவுத் தொழிலில் ஈடுபட்டுள்ள பெண்கள் முன்பு 68 புதிய காசுகள் பெற்றவர்கள் இப்பொழுது 50 புதுக் காசுகள் பெறுகின் றனர். அதே போன்று விவசாயிகளுடைய ஆண்டு வருமானம், 1951-ம் ஆண்டு கணக்குப்படி ஒரு உழவன் குடும்பத்திற்கு கிடைத்த வருவாய் 447 ரூபாய். 1957-ம் ஆண்டு கணக்குப்படி ஒரு உழவன் குடும்பத்திற்கு கிடைத்த வருவாய் ரூபாய் 437. ஆகவே ஆறு வருடத்திற்குள் வருவாய் பத்து ரூபாய் குறைந்து விட்டது. இதற்கு முன்னல் வாழ்க்கைச் செலவு 1951-ம் ஆண்டிற்கு முன்பு 461 ரூபாய் இருந்தால்; சிரமப்பட்டேனும் ஒரு குடும் பத்தை நடத்தி விடலாம். இப்பொழுது ஒரு குடும்பத்தை நடத்த வேண்டுமானல் ஒரு ஆண்டிற்கு ரூபாய் 618 இருந்தால் தான் சிரமப்பட்டேனும் நடத்த முடியும். 1951-லிருந்து 57 வரை அதிகரிக்கும் செலவு ரூபாய் 157. 1960-ம் ஆண்டில் டில்லியில் நடைபெற்ற விவசாயக் கண்காட்சியில் ரஷ்ய நாட்டுக்காரர் ஒருவர் அங்கே பேசிய பேச்சு கனம் அமைச்சருடைய கவனத் திற்கு வந்திருக்கும் என்றே நினைக்கிறேன். அவருடைய பெயர்

[திரு. கோ. சி. மணி] [3rd July 1962

எப். ஆர். கோஸ்லோ. அவர் என்ன சொல்லி இருக்கிறூர் என்றல், விவசாயம் ஒரு நாட்டின் முதுகெலும்பு போன்றது. விவசாயம் வளர வேண்டுமானுல் உருக்கு ஆலைகள் தேவை. அப்போதுதான் பொருளாதாரமும் சீர்படும். அப்போதுதான் விவசாய இயந்திர சாதனங்கள் அதிக உற்பத்தி செய்ய முடியும், அப்படிச் செய்தால் தான் விவசாயம் தழைக்கும் என்று பேசியிருக்கிறூர். இதைப் பற்றி யாரும் மறுப்புக் கூறியதாகத் தெரியவில்லை. அவர் சொல் லியபடி விவசாயக் கருவிகளை குறைந்த விலைக்குக் கொடுத்தால் தான், விலைவாசிகள் குறைவதற்கு இடம் இருக்கும். இதைப் பற்றி நான் பத்திரிகையில் படித்தேன். அதை மறுத்து யாரும் பத்திரிகையில் எழுதியதாக நான் இதுவரையிலும் பத்திரிகையில் படிக்கவில்லை. ஆகவே விவசாயிகளுடைய நிலைமை நாளுக்கு நாள் குறைந்துகொண்டேதான் வருகிறது. விவசாயிகளுக்கு பாதுகாப்பு அளிக்க வேண்டுமென்று பல சட்டங்களை போட்டிருப் பதாகச் சொல்லுகிறூர்கள். விவசாயிகள் பாதுகாப்புச் சட்டம், பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம், விவசாயிகளை வெளி யேற்றத்தைத் தடுக்கும் சட்டம் முதலியவைகள் இயற்றப்பட் டிருக்கின்றன. இவைகள் எல்லாம் 1952 முதற் கொண்டு 1955-ம் ஆண்டு வரையில் வந்திருக்கின்றன. ஆனுல் விவசாயிகளுக்கு எந்த முறையில் பாதுகாப்பு ஏற்பட்டிருக்கிறது என்பது தெரிய வில்லை. அப்படி பாதுகாப்பு கொடுக்கிறோம் என்று சொல்லி விட்டு இப்போது அவர்களுக்கு வரி வேறு போடப்போகிறூர்கள். நிலத்தைப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும் என்று சொல்லி நில உச்சவரம்புச் சட்டத்தைக் கொண்டுவந்து விட்டு, நிலம் யார் யாருக்குப் போகவேண்டும் என்று நினைத்தார்களோ, அவர்களுக் குக் கொடுத்து விட்டார்கள். உழவனுக்கு நிலம் என்ற வகையில் கொடுத்துவிட்டார்கள். அப்படிக் கொடுத்து விட்டு உழவனுக்கு நிலம் போனவுடன் அவனுக்கு இப்பொழுது அதிகப்படியான வரி போடப் போகிறூர்கள். விவசாயிகளுக்கு பாதுகாப்பு அளிக் கிறோம் என்று சொல்லிவிட்டு விவசாயிகளுக்கு நிலம் வந்த வுடன், அவர்களுக்கு அதிகப்படியான வரி போடுவதற்கு முற்பட் டிருக்கிறூர்கள். இந்த வரியை ஏன் முன்னதாகவே போட்டிருக் கக்கூடாது. விவசாயிகளுடைய கைக்கு நிலம் வருவதற்கு முன்னதாகவே ஏன் அந்த வரியைப் போட்டிருக்கக்கூடாது? என்று கேட்கிறேன். ஆனுல் சொல்லுகிறூர்கள், முப்பது ஆண்டு காலமாக வரி மாற்றப்படவில்லை என்று. அப்படிப்பட்ட நிலைமை யில் விவசாயிகளுடைய கைக்கு நிலம் போனவுடன் இப்பொழுது வரி போடுவானேன். அப்படி வரி விதிக்கும்போதும் நிலத்தைப் பிரித்துக்கொடுக்கும்போதும் சில விதிவிலக்கு அளித்திருக்கிறூர் கள். குறிப்பாக தமிழகத்திலுள்ள பெரிய கோவில்களுக்குள்ள நிலங்களை பிரிப்பதிலும் மடங்களுக்குள்ள நிலங்களை பிரிப்பதிலும் விதி விலக்கு அளித்திருக்கிறூர்கள். பல தர்ம ஸ்தாபனங்களுக்கு விதி விலக்கு அளித்திருக்கிறூர்கள். இப்பொழுது தமிழகத்தில் சுமார் 30,106 தர்ம ஸ்தாபனங்கள் இருக்கின்றன. அவைகளுக்கு மொத்தம் எட்டு லட்சம் ஏக்கர் நிலம் இருக்கிறது. அவைகளி லிருந்து வரக்கூடியதை வைத்துக்கொண்டு சாப்பாடு கொடுக் கிறூர்கள். கோவில்களில் ஆறு வேளை சாப்பாடு போடாவிட்டாலும்,

3rd July 1962] [திரு. கோ. சி. மணி]

மூன்று வேளை சாப்பாடு போட்டாலும், அதைப்பற்றி கவலைப்பட வேண்டியதில்லை. சர்க்கரைப் பொங்கல் சாப்பிடுகிற ஆண்டவன் வெண் பொங்கல் சாப்பிடலாம். அதுகூட இல்லாத மக்கள் அந்த ஆண்டவனைப் பணிந்து கொண்டிருக்கிறார்கள். அரசாங்கம் அதைச் செய்தால் ஓரளவு நில வரியும் கிடைக்கும்.

என்னுடைய தொகுதியில் நிறைவேற்ற வேண்டிய ஒரு சிறிய நீர்ப்பாசனத் திட்டத்தைப்பற்றி மட்டும் கூறி என் உரையை முடித்துக்கொண்டுவிடுகிறேன். ஆடுதுறை தொகுதியில் ஓடுகின்ற வட வாற்றில் ஒரு ரெகுலேடர் கட்டவேண்டுமாய்க் கேட்டுக்கொள் கிறேன்.

**கனம் திரு. பூ. கக்கன் :** 'திராவிட முன்னேற்றக் கழகம் தெய்வ பக்தியுள்ள கட்சி, தெய்வத்தின்மீது நம்பிக்கை கொண்டிருக்கிற கட்சி' என்று அவர்கள் பறைசாற்றிக் கொண்டு வந்தார்கள். ஆனல், கனம் அங்கத்தினர் பேச்சிலிருந்து எவ்வளவு தூரம் அவர் கள் தெய்வ பக்தி உள்ளவர்கள் என்று நன்றாகத் தெரிகிறது.

**திரு. மு. கருணாநிதி :** சாப்பாட்டிலே மாறுதல் செய்யச் சொல் வதன் காரணமாக தெய்வத்தின் மீது நம்பிக்கை இல்லை என்ற அடிப்படையில் கனம் அமைச்சர் அவர்கள் சொல்கிறாரா என்று அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** தெய்வத்தின் மீது நம்பிக்கை இருந்தாலும் இல்லாவிட்டாலும், தெய்வத்திற்குப் படைக்கிறதை மனிதன்தான் சாப்பிடுகிறான் என்பதைக் கனம் அங்கத்தினருக் குத் தெரிவித்துக்கொள்கிறேன். (சிரிப்பு.)

**திரு. மு. கருணாநிதி :** தெய்வத்திற்காவது படைக்கப்படுகிறதா?

**கனம் உதவி சபாநாயகர் :** குறுக்கே ஒருவருக்கொருவர் பேசிக் கொள்கின்ற விவாதமாக இதை ஆக்கவேண்டாம்.

* **திரு. க. தா. பெருமாள் ராஜு :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையின்மீது பேச எனக்கு அனுமதி தந்ததற்காக தங்களுக்கு என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

நிலவரி அதிகமாக்கப்படுகிறது. இதை விதிக்கும்போது, மேட்டுப் பாங்கான நிலம், வடிகால் நிலம் என்று இரண்டாகப் பிரித்து தக்க விதத்தில் வரி விதிப்பது நலம் என்று நான் கருது கிறேன். பத்து ஏக்கர்வரையில் ஒரு பிரிவாகவும், இருபது ஏக்கர் வரையில் ஒரு பிரிவாகவும், முப்பது ஏக்கர் வரையில் ஒரு பிரிவாக வும் பிரித்து, தக்கபடி வரி விதித்தால் சிறிய விவசாயிகளுக்கு நலம் என்று நான் நினைக்கின்றேன்.

அபிவிருத்தி அடையாத பிரதேசங்களுக்கு அதிகமாகச் செல விட்டு, அங்கெல்லாம் அபிவிருத்தி வேலைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். குறிப்பாக, அந்தியூர் பிர்க்கா, தாளவாடி பிர்க்கா இவைகள் மிகவும் பிற்போக்கான நிலையில் இருக்கின்றன என்பது

[திரு. க. தா. பெருமாள் ராஜு] [3rd July 1962

கனம் திரு. கக்கன்ஜி அவர்களுக்கு மிக நன்ருகத் தெரியும். அந்த வட்டாரங்களில் அவர்கள்தான் அதிகமாக வந்து போகிருர்கள். ஹோகனக்கல் திட்டத்தை நிறைவேற்றி பாசன வசதி ஏற்படுத்தலாம். மணியாச்சி, கரும்பாறைத் திட்டம் நிறைவேற்றப் பட வேண்டும். அரக்கன்கோட்டை வாய்க்காலிலிருந்து அத்தாணி—பெருமுகை வாய்க்காலில் ஒரு பிரிவு ஏற்படுத்தியிருக்கிருர்கள். அதை அகலப்படுத்தியும், ஆழப்படுத்தியும் செய்தால், ஆயிரக் கணக்கான ஏக்கருக்குப் பாசன வசதி அளிக்கலாம். அரக்கன் கோட்டை வாய்க்காலில் மேலும் பிரிந்து மலையோரங்களில் வாய்க்கால் வெட்டி அதிக பாசன வசதி ஏற்படுத்தலாம்.

பஞ்சாயத்து யூனியன்கள் மிகவும் பிற்போக்கான நிலையில் இருக்கின்றன. தாளவாடி பஞ்சாயத்து யூனியனில் 90 சதவிகிதம் அரசாங்க சப்ஸிடி கொடுக்கப்பட்டு வந்தது, இப்பொழுது நிறுத்தப்பட்டிருக்கிறது. அதை மறுபடியும் நீடிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அந்தியூர் பிர்க்காவிலும் 90 சதவிகிதம் அரசாங்க சப்ஸிடி கொடுத்து உதவக்கோருகிறேன். அவை வறண்ட பிரதேசங்களாகையால் ஜனங்கள் சகாயத் தொகை கொடுக்க முடியாமல் அபிவிருத்தி வேலைகளில் தடங்கல் ஏற்பட்டு, ஒன்றும் செய்ய முடியாத சூழ்நிலை இருக்கிறது என்பதைக் கனம் அமைச்சர் அவர்கள் நன்ருக ஆராய வேண்டும்.

அந்தியூர் பிர்க்காவில் பர்கூர்மலைப் பிரதேசத்தில் பள்ளிகளுக்கு உபாத்தியாயர்கள் சரியாகப் போய் கல்வி கற்பிக்க முடியாத நிலை இருக்கிறது. அந்தப் பகுதிக்கு ஜீப் சர்வீஸ் ஏற்படுத்திக்கொடுக்க வேண்டுமாய் கேட்டுக்கொள்கின்றேன்.

கரும்பின்மீது வரி விதிப்பதைச் சற்று தளர்த்தவேண்டும். சர்க்கரை பொதியொன்று 100 ரூபாய்க்கு விற்றது இப்பொழுது 50 ரூபாய்க்கு விற்கிறது. ஆகையால், வரி குறைவுபடுத்தப்பட வேண்டும் என்று கேட்டுக்கொள்கின்றேன்.

எனது தாலுகாவில் பெருந்தலையூர் பக்கத்தில் ஒரு சர்க்கரை ஆலை ஏற்பட்டிருக்கிறது. சுற்று வட்டாரத்தில் இருக்கும் விவசாயிகள் ஆயிரக்கணக்கான ஏக்கர் விவசாயம் செய்துகொண்டிருக்கிருர்கள். ஆனல், பக்கத்திலேயிருக்கும் ஆலையில் பங்குதாரராகச் சேரமுடியாத நிலையில் கஷ்டப்படுகிருர்கள் என்ருல், இதற்கு சர்க்கரையினுடைய விலையில் குறைவு ஏற்பட்டிருப்பது தான் காரணம் என்று நான் சர்க்காருக்கு எடுத்துக் கூற விரும்புகிறேன்.

கிராமக் கூட்டுறவு விவசாய பாங்குகளில் கடன் வாங்கும் அங்கத்தினர்கள் ஒரு வருஷத் தவணையில் கடனைத் திருப்பித்தர வேண்டுமென்ற விதி இருக்கிறது. அதை இரண்டு வருஷங்கள் அல்லது மூன்று வருஷங்களாக நீடிக்கவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

ஹரிஜன மான்யத்திலே மூன்று கோடி 55 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதுகுறித்து சந்தோஷப்படுகிறோம். ஆனல், தமிழ் நாட்டிலே ஹரிஜனங்களுக்கு வீடு கட்டும்

3rd July 1962] [திரு. க. தா. பெருமாள் ராஜு]

திட்டத்தை நிறுத்திவிட்டு, ஒவ்வொரு ஊரிலும் இட வசதி செய்து கொடுக்கவேண்டியது அவசியம். ஒவ்வொரு சேரியிலும் இட வசதி இல்லாமலிருக்கிறது. இடம்தான் ஒவ்வொருவருக்கும் மிகவும் முக்கியமாக இருக்கிறது. அதைச் செய்துகொடுக்கவேண்டும். ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் இடம் வேண்டுமென்று விண்ணப்பங்கள் அனுப்பப்பட்டால், அதற்கு எதிராக நிலச் சொந்தக்காரர்கள் முன்னதாகவே அந்த இடத்தை விற்றுவிடுகிறார்கள். இப்படி ஐந்து வருஷங்களுக்குள்ளாக இட வசதி செய்து தரமுடியாத நிலையில் இருக்கிறோம். ஆகவே, அந்தந்த ஜில்லாக் கலெக்டருக்கு அதிக அதிகாரம் கொடுத்து, குறிப்பிட்ட இடத்தை குறித்து நோட்டீஸ் கொடுத்து, அங்கு ஒன்றும் செய்யக்கூடாது என்று தெரிவித்துவிட்டு, ஹரிஜனங்களுக்கு அந்த இடங்களை வாங்கிக் கொடுக்கவேண்டுமாய்க் கேட்டுக்கொள்கின்றேன்.

ஹரிஜன ஹாஸ்டல்களை கமிட்டி மூலம் நடத்துவதுதான் நல்லது. சர்க்கார் எடுத்து நடத்துவதில் சில சிரமங்கள் இருக்கின்றன. ஹரிஜனங்களிலே பல பிரிவுகள் இருப்பதால், ஒரு ஹாஸ்டலுக்காக ஏற்படுத்தப்பட்ட அதிகாரி எந்த பிரிவினரோ அந்தப் பிரிவினருக்குத்தான் சலுகை அளித்து, அவர்களை அதில் சேர்த்துக் கொள்கிறார்கள். மற்ற பிரிவினரை சேர்த்துக்கொள்ளாத நிலைமை இருக்கிறது. முன்பு இருந்ததுபோல், கமிட்டி மூலமாகவே ஹரிஜன ஹாஸ்டல்கள் இயங்க வேண்டும். கோபியிலுள்ள ஹரிஜன ஹாஸ்டல், கமிட்டி மூலமாகத்தான் நடைபெறுகிறது. அதனால் தவறு ஏற்படவில்லை. சர்க்காரே எடுத்து நடத்துவதற்கு ஆட்சேபணை செய்கிறார்கள். கமிட்டியிடம் நிர்வாகம் இருக்கட்டும் என்ற உத்தேசம் இருந்துகொண்டிருக்கிறது.

அந்தியூர் தொகுதியில் மேற்படி திட்டங்களெல்லாம் வருவதற்கு முன்பாக, குழாய் கிணறுகள் (ட்யூப் வெல்ஸ்) ஏற்படுத்தி, அங்கு விவசாய அபிவிருத்தி செய்யவேண்டுமாய் கேட்டுக் கொள்கிறேன்.

ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியன் பகுதியிலும் ஒரு தொழிற்சாலையாவது ஏற்படுத்தி, தொழில் அபிவிருத்தி செய்யவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கின்றேன்.

ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியன் பகுதியிலும் லேடி டாக்டர் ஒருவர் நியமிக்கப்படுவது மிகவும் அவசியம். தற்சமயம் குடும்பக் கட்டுப்பாடுத் திட்டம் நடைபெற வேண்டிய அவசியம் இருப்பதால், ஒவ்வொரு சுகாதார விடுதியிலும் ஒரு லேடி டாக்டர் நியமிக்கப்படுவது மிகவும் முக்கியம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தாளவாடி பிர்க்காவில் ஆசனூர், திம்பம் வரையில் ஜீப் சர்வீஸ் நின்றுவிடுகிறது. அதை சத்தியமங்கலம் வரையில் நீடித்தால், பண்டங்கள் ஏற்றியனுப்புவதற்கு வசதி ஏற்படும் என்பதைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

[திரு. க. தா. பெருமாள் ராஜு] [3rd July 1962

எனக்குப் பேசுவதற்கு இந்தச் சந்தர்ப்பத்தை அளித்த உதவி சபாநாயகருக்கு நன்றியைத் தெரிவித்து இத்துடன் என் உரையை முடித்துக்கொள்கின்றேன்.

* **திரு. மா. இராசாங்கம்:** சட்டமன்றத் துணைத்தலைவர் அவர்களே, 1962-63-ஆம் ஆண்டுக்குரிய நிதிநிலை அறிக்கையின்
1-00 p.m. மீது ஒருசில வார்த்தைகள் கூற முற்பட்டுள்ளேன். இந்த அறிக்கையில் பணம் ஏராளமாகச் செலவிடத் திட்டமிடப் பட்டிருக்கிறது. பணம் எந்த அளவு செலவாகியிருக்கிறதோ, அந்த அளவு முன்னேற்றம் ஏற்படவில்லையென்பதற்கு இதிலேயே ஆதாரங்கள் இருக்கின்றன. ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களே கூட லாலி பாடி, இடையில் சுருதி குறைந்து, முடிவில் ஒப்பாரி வைக்கிறபோது நானும் என்னுடைய தொகுதியைச் சேர்ந்த சில குறைகளைச் சொல்லக் காத்து இருக்கிறேன்.

**கனம் உதவி சபாநாயகர்:** கனம் அங்கத்தினர் "ஒப்பாரி வைப்பது" என்ற வார்த்தையை உபயோகிப்பது சட்டசபை முறைக்கு பொருத்தமானது அல்ல.

* **திரு. மா. இராசாங்கம்:** வேதனைக்குரிய காரியங்கள் ஒன்றிரண்டை நான் சொல்ல முற்படுகிறேன். என்னுடைய தொகுதி உத்தமபாளையம் வரை இருக்கக்கூடிய பிரதேசம், மலையால் மூன்று பக்கமும் சூழப்பட்ட இடம். மழைகாலங்களில் ஏராளமான வெள்ளம் ஊருக்குள் நுழைந்துவிடக்கூடிய நிலையிலேயே அது இருக்கிறது. இதனால் ஏறத்தாழ இருபது முப்பது கிராமங்கள் கம்பம் முனிசிபல் பிரதேசம் உட்பட மேஜர் பஞ்சாயத்து கூடலூர் உட்பட பலமாகப் பாதிக்கப்படுகிறது. ஊருக்குள் மழை பெய்யாமல் திடீரென்று மலைப்பிரதேசங்களில் பெய்கிற மழை நீர், இரவுக்காலங்களில் கூட ஊருக்குள் புகுந்து அதிக சேதத்தை விளைவித்துவிடுகிறது. இதை ஏற்கனவே மராமத்து மந்திரியாக இருந்த திரு. கக்கன் 1960-ஆம் ஆண்டு வந்தபோதே கூறியிருக்கிறோம். இதையும் கூறியிருக்கிறோம். மற்றவைகளையும் கூறியிருக்கிறோம். கவனிப்பதாகக் கூறினார். கவனித்திருப்பதுபோல பல கட்டிடங்கள் கட்டப்பட்டு வருகின்றன என்றாலும், லட்சக் கணக்கான ரூபாய் செலவில் பாலத்தைக் கட்டியிருக்கிறார்களே தவிர, மறுபடியும் அந்தத் தண்ணீர் ஊருக்குள்தான் வருகின்றன. ஊருக்குள் வரும் தண்ணீரை வாய்க்காலாக வெட்டி வெளியே போகச் செய்தால்தான் அந்த ஊர்களுக்குத் திடீர் திடீரென்று ஏற்படும் சேதத்தைத் தவிர்க்க முடியும். அப்படி செய்யாத காரணத்தினால் அடிக்கடி அந்த வழியே செல்லும் ரோடுகள் அரித்துக்கொண்டு செல்லப்படுகின்றன. அந்த ரோடுகளை அடிக்கடி மராமத்து செய்யமுடியாத நிலையில் கூடலூர் பஞ்சாயத்து இருக்கிறது. ஏற்கனவே தண்ணீர் குழாய்க்காக அவர்கள் பட்டிருக்கும் கடன்பளு மிகமிக அதிகமானது. தங்களுடைய வருவாயில் பெரும்பகுதி இந்தக் கடனுக்கே அவர்கள் கொடுத்துக்கொண்டு வருவதனால் திட்டவேலைகள் நடைபெற முடியாமலேயே போகிறது. அவர்களுக்கு 65 ஆயிரம் ரூபாய் வருகிறது என்றால் 40 ஆயிரம் ரூபாய்க்குமேல் சர்க்காரின்

3rd July 1962] [திரு. மா. இராசாங்கம்]

தண்ணீர் குழாய் கடனுக்குச் செலவழித்துவிடுகிறார்கள். எஞ்சியுள்ள 20 ஆயிரம் அலுவலர்களுக்குச் செலவாகிவிடுகிறது. திட்டச் செலவுக்கு கைக்கு வருவது இரண்டாயிரம் அல்லது மூவாயிரம் ரூபாய்தான். இந்த மூவாயிரம் ரூபாயைக்கொண்டு அடிக்கடி சேதம் அடைந்துவிடுகிற ரோடுகளைப் பராமரிப்பதா? கல்வியைக் கவனிப்பதா? வைத்திய வசதியைக் கவனிப்பதா? இவற்றையெல்லாம் அரசாங்கம் கவனித்துப் பார்க்கவேண்டும். ஏற்கனவே இதுபற்றி சர்க்காருக்கு மகஜர்கள் அனுப்பியிருக்கிறார்கள். நான் இந்த மாமன்றத்தில் உங்கள் மூலமாக அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்வது என்னவென்றால், கடன் பளு தாங்க முடியாது இருக்கிற காரணத்தினால் கிருபை கூர்ந்து அந்தக் குழாய் கடன் தொகையை வஜா செய்துகொடுக்கும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து குளத்தின் நீரைக் கொண்டுதான் விவசாயம் செய்கிறார்கள். ஒரு குளம் என்றால் அதற்குப் பின்னால் வயல்கள் இருக்கும். அந்தக் குளங்களையும் ஏ 1 டாங்க், ஏ 2 டாங்க் என்று பிரித்திருக்கிறார்கள். ஒரு குளத்திலிருந்து இன்னொரு குளத்திற்குச் சென்று நிரம்பினால்தான் கீழே இருக்கும் நிலங்கள் பாசனம் பெறும். அப்படி ஒன்றிலிருந்து இன்னொன்றுக்குத் தண்ணீர் பாய்கிற வாய்க்கால்களை சிமிண்டினாலாவது கட்டிக் கொடுத்துத் தண்ணீர் சேதம் இல்லாமல் பாசனத்திற்குப் பயன் படும்படி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதே போல குளத்தின் மேற்புறங்களில் சிலர் பல வருஷங்களாகப் பயிரிட்டு வந்திருக்கிறார்கள். தண்டத் தீர்வை இருபது பத்து மடங்கு, எட்டு மடங்கு, என்று கட்டி வந்தவர்கள் இப்போது 2 மடங்கு கட்டுகிறார்கள். இனிமேல் தீர்வை கட்டாமல் அந் நிலங்கள் அவர்களுக்குப் பட்டா செய்துகொடுக்க வசதி செய்யப் படும் என்று எண்ணினார்கள். ஆனால் இவ்வாண்டு கலெக்டர் அவர்கள் "அவ்வாறு நாங்கள் செய்ய முடியாது, மேலிடத்தில் சென்று பார்த்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லிவிட்டார்கள். அவ்விஷயம் போர்டில் இருக்கிறது. அந்த நிலங்களின் தண்டத் தீர்வை கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து வந்ததனால் முடிவில் தங்களுக்கே அளிக்கப்படும் என்று எண்ணி ஏழை எளிய மக்கள் தங்களுக்கு இருந்த வேறு சொத்துக்களையும் விற்று, கை ரொக்கத்தையும் இந்தப் பூமியை வளப்படுத்துவதில் செலவிட்டுவிட்டு நிற்கிறார்கள். ஆகவே அவர்களுக்கே உடனடியாக அந்த நிலத்தை அசெய்ன் பண்ணிக்கொடுக்கும்படியாக நான் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக கம்பம் கூடலூர் இவற்றை சேர்க்கிற பாதையில் சுருளியாற்றுக்குப் பாலம் கட்டப்படவில்லை. அதைக் கட்டுவதற்கு ரூபாய் 2 லட்சம் ஆகும் என்று திட்டமிட்டு பஞ்சாயத்து யூனியனில் இருந்தும், மற்றவர்களிடமிருந்தும் அரசாங்கத்திற்கு விண்ணப்பங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதன்பேரில் 2 லட்சம் சாங்ஷன் ஆகியிருக்கிறதே தவிர இன்னும் பாலத்தைக் கட்ட ஆரம்பிக்கவில்லை. நாள் ஆகிக்கொண்டிருக்கிறது. இதனால் என்ன ஏற்படுகிறது என்றால் அந்தப் பாலம் வரையில் போடப்பட்டிருக்கிற பாதையில் ஆறு வரையில் தான்

[திரு. மா. இராசாங்கம்] [3rd July 1962

போக முடிகிறது. அந்தப் பாதையும் அடிக்கடி சிரழிந்து போகிறது. அந்தப் பாலம் உடனடியாக கட்டிக்கொடுக்கப்பட வேண்டும். இல்லாவிடில் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் ஆண்டவன் பேரில் எதிர்ப்பு தெரிவிப்பவர்கள் என்ற கெட்ட பெயர் வரும். எங்களுக்காக இல்லாவிட்டாலும் சுருளி ஒரு தலம். பல யாத்ரிகர்கள் வருகிருர்கள். அவர் களுடைய வசதியை உத்தேசித்தாவது உடனடியாக அந்தப் பாலத்தைக் கட்டி, பாதையையும் செப்பனிட்டுத் தரும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக உத்தமபாளையத்தில் முன்சிப் கோர்ட் ஏற்படுத்துவதாக முன்பு இருந்தது. இதுபற்றி கனம் அமைச்சர் அவர்களிடத்தில் நெருங்கிக் கேட்டபோது கூட "நாள் ஆகட்டும், நாளாவட்டத்தில் ஏற்படுத்தவேண்டிய அவசியம் இருக்கிறதா என்று பார்க்கலாம்" என்ருர்கள். பார்க்கலாம், பார்க்கலாம் என்று தள்ளிப்போடாமல் இப்பொழுதே ஏற்படுத்தினுல் நலம் என்று தெரிவித்துக்கொள்கிறேன். அங்கே முன்சீப் கோர்ட் இல்லாத காரணத்தினுல் முப்பது நாற்பது மைல் தள்ளி இருக்கும் பெரியகுளத்திற்குச் செல்லவேண்டிய நிலைமை இருக்கிறது. பெரியகுளத்தில் இருக்கும் முன்சீப் கோர்ட் காரியங்களை எடுத்துப் பார்த்தால் பெரும்பாலும் இங்கேயிருந்து அங்கே போகிறவர்களுடைய காரியங்களாகத்தான் இருக்கும். பெரிய குளத்திற்குப் பக்கத்தில் இருப்பவர்களின் காரியங்களாக இராது. ஆகவே இதையும் கவனித்து உடனடியாக உத்தமபாளையத்தில் ஒரு முன்சிப் கோர்ட் ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

மேலும் முதல் அமைச்சர் அவர்கள் கூடலூர் வந்து ஆஸ்பத்திரியை திறந்து வைத்தார். ஆயினும் அந்த ஆஸ்பத் திரியில் பஞ்சு கூடக் கிடையாது. ஆஸ்பத்திரிகள்தான் வசதியாக இருக்கின்றனவே தவிர, மருந்துகள் உத்தரவாதமாக இல்லை. "நீங்கள் எல்லாம் சென்னைக்குச் செல்கிறீர்களே, அரசாங்கத் திடம் எடுத்துச் சொல்லவேண்டும், இங்கே மருந்துகள் எதுவும் கிடையாது என்று" என அங்குள்ளவர்கள் சொல்லுகிருர்கள். ஆஸ்பத்திரிக்குச் சென்ருல் நோய் குணமாகி திரும்பி வருவோம் என்று நல்ல தைரியமான உள்ளத்தோடு சீக்காளிகள் அங்கே போகவேண்டும் என்ருல் உடனடியாக மருந்துகள் அனுப்பி வைக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

அடுத்தபடியாக இரண்டு மாதங்களுக்கு முன்பாக கூடலூரில் ஒரு லட்சம் பெருமான வைக்கோல் தீயுக்கு இரையாயிற்று. தீ பிடித்துக்கொண்டவுடன் பக்கத்தில் 35 மைல்களுக்கு அப்பா லுள்ள தீயணைக்கும் படையினருக்குத் தெரியப்படுத்தினேம். அவர்கள் வரும்போது வைக்கோல் எரிந்து சாம்பல்தான் இருந் தது. சாம்பல் பறக்காமல் இருக்க தண்ணீர் ஊற்றினுர்களே தவிர தீ அணைக்கும் என்ஜின் தீயை அணைக்க வரமுடியவில்லை. ஆகவே முனிசிபல் இடமாகிய கம்பத்தில் தீயணைக்கும் படை ஒன்றை நிறுவவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

3rd July 1962] [திரு. மா. இராசாங்கம்]

அடுத்து, உள்ளூர் எரு பொருள்களின் உற்பத்திக்கான ஏற்பாடுகளை 52 வட்டாரங்களில் ஆரம்பிக்கப் போவதாகச் சொல்கிறார்கள். விவசாயத்தையே பெரும் பணியாகக்கொண்டு பணியாற்றி வரும் எங்கள் பகுதியையும் அந்த 52 வட்டாரங்களில் ஒன்றாகச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். விதைப் பண்ணை ஆராய்ச்சி நடைபெற்று வருவதாகவும் கூறியிருக்கிறார்கள். இந்த விதைப் பண்ணை ஆராய்ச்சி நிலத்தில் ஒரு கலம் தான்யம் விதைத்தால் ஒரு மாக்கால் தான் விளையக்கூடிய நிலைமை இருக்கிறது. நன்கு விளைகிற, பலன் கொடுக்கிற நிலங்களாகப் பார்த்து வாங்கவேண்டும். பெரிய பெரிய அதிகாரிகள் வந்து இந்த நிலங்களை வாங்குவதால் அவர்களால் நல்ல நிலமா இல்லையா என்று பார்த்து வாங்க முடிவதில்லை. நல்ல அனுபவம் உள்ள விவசாயிகளைக்கொண்டு இந்த நிலங்களை வாங்கினால் நஷ்டம் ஏற்படாது என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நிலக்கடலை தீவிர சாகுபடித் திட்டத்தைத் தென்னாற்காடு மாவட்டத்தில் ஆரம்பிக்க இருக்கிறார்கள். நிலக்கடலை விவசாயம் மிக மிகக் கூடுதலாக நடைபெறக்கூடிய மதுரை மாவட்டத்தில் எங்கள் பகுதியிலும் நிலக்கடலை தீவிர சாகுபடித் திட்டத்தை அமுல் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். வட்டார வளர்ச்சிக் கூட்டத்தில் கம்பளிப் பூச்சி தொல்லை பற்றி எடுத்துச் சொல்லப்பட்டது. அந்தப் பூச்சிகளை ஆட்களை விட்டுப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தப் பூச்சிகளை அழிக்க முடியாத அளவுக்கு அவை 'அண்டர் கிரவுண்டிற்குள்' போய்விடுகின்றன என்று சொல்கிறார்கள். அவை எங்கேயும் போவதில்லை. உழவர்களுக்கு நல்ல இரும்புக் கலப்பைகள் கொடுத்து ஆழ உழுதால் கம்பளிப் பூச்சிகள் எல்லாம் செத்துவிடும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். (மணி அடிக்கப்பட்டது.)

* **திரு. கி. இரா. சம்பந்தம்:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த வரவு செலவுத் திட்டத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளைச் சொல்ல முற்படுகிறேன். இங்கே பேசிய எதிர்க் கட்சித் தோழர்கள் இந்த வரிகளை எல்லாம் போடக்கூடாது என்று சொல்கிறார்களே, ஏதாவது அவர்கள் வரி போடாமல் வருவாய்க்கு வழி சொல்வார்களா என்று நான் நேற்றும் இன்றும் கவனித்துப் பார்த்தேன். கடைசியாக ஒருவர் 'கோயில் நிலங்களுக்கு வரி போட்டால் நிறைய வருவாய் வரும்' என்று சொன்னார். அந்த மாதிரி கோயிலுக்கு இருக்கக்கூடிய நிலங்களுக்கு மாத்திரம் வரியைப் போட்டால் துண்டு விழும்படியான 7 கோடி ரூபாய் கிடைத்து விடுமா? இந்த மாதிரி ஏதாவது உதவாக்கரை சங்கதிகளைச் சொல்லி எதிர்க்கிறார்களே தவிர, 'கன்ஸ்ட்ரக்டிவ் க்ரிடிசிசம்' ஏதாவது சொல்கிறார்களா என்றால் இல்லை. ஆளும் கட்சியைச் சேர்ந்த திரு. கோசல்ராம் அவர்கள் கண்டுபிடித்த திமிங்கிலத்தை வைத்துப் பேசுகிறார்களே தவிர புதிதாக எதுவும் கண்டுபிடித்துச் சொல்லிவிடவில்லை. எந்த நாடாக இருந்தாலும், ஸ்விட்சர்லாண்டாக இருந்தாலும் சரி, இங்கிலாந்தாக இருந்தாலும் சரி, வரி போடாமல் ஆட்சி நடத்த முடியாது. மேல்நாடுகளில் எல்லாம்

[திரு. கி. இரா. சம்பந்தம்] [3rd July 1962

வருமானக் கணக்கை அவர்களாகவே கொடுக்கிறார்கள். அங்கு இதற்காகத் தனிப்பட்ட அதிகாரிகள் கிடையாது. வருமான வரி கொடுப்பதை அவர்கள் 'அஸெட்' ஆகக் கருதுகிறார்கள். நம் நாட்டில் அதிக வருமானம் வரக்கூடியவர்கள் இரண்டு மூன்று கணக்கு வைத்துக் கொண்டிருக்கிறார்கள். வருமான இலாகா அதிகாரிகள் திருடனைப் பிடிப்பதுபோல் இவர்களைப் பிடித்து வருமானக் கணக்கைக் கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது. இந்த நிலைமை மாறும் வரையில் நாட்டின் அபிவிருத்திக்காக இந்த வரி களைப்போட வேண்டிய நிலைமைதான் இருக்கிறது.

விவசாயத்தைப்பற்றி தங்களுக்கு அதிகமாகத் தெரியுமென்றும் நாங்கள் ஒன்றும் தெரியாதவர்கள் என்றும் கனம் தி.மு.க. அங்கத்தினர் சொன்னார். மூன்றும் சால் அடித்துவிட்டு நட வேண்டு மென்று சொன்னார். சாதாரணமாக விவசாயம் பண்ணுவது என்றால், குறுக்கு நெடுக்காக 4 அல்லது 6 சால் அடித்தால்தான் நடலாம். இப்படி இரட்டிப்பாக நிலத்திற்குத் தக்கவாறு அடித்துக்கொண்டு போகவேண்டும். ஆனால் தி.மு.க. அங்கத்தினர் மூன்று சால் அடித்து நடவேண்டுமென்கிறார். இவர்களுக்கு இங்கு கொடுக்கப்பட்ட அருமையான நேரத்தையெல்லாம் இந்த நாட்டின் அபிவிருத்திக்காகச் செலவழிக்காது, இந்த மாதிரி அர்த்தமற்ற குற்றங் குறைகளைச் சொல்லிக் கொண்டிருப்பது மிகவும் வருந்தத்தக்கது.

அடுத்து, இன்றைக்கு மானேஜ்மெண்டால் நடத்தப்படும் உயர் நிலைப் பள்ளிகளில் ஆசிரியர்களுக்குச் சம்பளம் கொடுக்கமுடியாத நிலைமை இருந்து வருகிறது. சம்பளம் கொடுக்க முடியாமல் மானேஜ்மெண்டார் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இப்போது ஏழைகளுக்கும், பிற்பட்டவர்களுக்கும், என்.ஜி.ஓ.-க்களுக்கும் சம்பளம் கிடையாதாகையால் சம்பள வருமானமில்லாதிருப் பதால் மானேஜ்மெண்டால் ஆசிரியர்களுக்குச் சம்பளம் கொடுப் பது கடஷ்மாக இருக்கிறது. கேரளாவில் ஒவ்வொரு மாதமும் தலைமை ஆசிரியர் பில் கொடுத்து விட வேண்டும். அந்த 'பில்லை' சர்க்கார் சாங்ஷன் செய்துவிட்டு வருஷக் கடைசியில் ஆடிட் செய்யும்போது கொடுத்தது போக மீதியைக் கொடுக்கிறார்கள். நானும் ஒரு பள்ளியை நடத்தி வருகிறேன். தஞ்சையில் பல உயர்நிலைப் பள்ளிகளில் 3, 4 மாதங்களுக்கு மேலாக சம்பளம் கொடுக்கப்படாமல் இருக்கிறது. இதுபற்றிக் கனம் கல்வி மந்திரி யவர்கள் பரிசீலித்து ஒரு முடிவு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மாலை நேரத்தில் படிக்க 'ஈவினிங் காலேஜ்'-களை சென்னையைத் தவிர மற்ற மாகாணங்களில் உள்ள பெரிய நகரங் களில் நடத்துகிறார்கள். அந்த முறையில் நமது மாகாணத்திலும் அதைக் கொண்டுவரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். தஞ்சையில் எஞ்சினியரிங் கல்லூரி ஒன்றும் அமைத்துக் கொடுக் கும்படியும் கேட்டுக்கொள்கிறேன்.

நாம் ஒவ்வொரு இடத்திலும் ஆஸ்பத்திரிகளைத் திறந்து கொண் டிருக்கிறோம். ப்ரைமரி ஹெல்த் செண்டர், கிராம ஆஸ்பத்திரிகள், சர்க்கார் ஆஸ்பத்திரி என்று திறந்து வருகிறோம். வியாதியஸ்தர் கள் சிறு வியாதியாக இருந்தபோதிலும் ஆஸ்பத்திரிக்குச் சென்று

3rd July 1962] [திரு. கி. இரா சம்பந்தம்]

ஊசி போட்டுக்கொண்டு மருந்து சாப்பிடவேண்டுமென்ற ஒரு அக்கறை ஏற்பட்டிருக்கிறது. இது இந்த நாட்டின் வளர்ச்சியைக் காட்டுகிறது. இப்போது சில ஆஸ்பத்திரிகளில் போதுமான அளவுக்கு மருந்து இல்லாத நிலைமை இருந்து வருகிறது. நோயாளிகளே மருந்தை வெளியில் இருந்து வாங்கிக்கொண்டு வந்து ஊசி போட்டுக் கொள்ளக்கூடிய நிலைமை இருந்து வருகிறது. ஒவ்வொரு ஜில்லாவிலும் மருந்து உற்பத்தி செய்ய வழி செய்தால் இந்த நிலையைப் போக்க முடியும் என்று கூறிக் கொள்ளுகிறேன். அடுத்து, எல்.ஐ.எம். டாக்டர்கள் எல்லாருமே இன்றைக்குத் திரிசங்கு சொர்க்கம் என்ற நிலையில் இருந்து வருகிறார்கள். அவர்களை இன்னும் 'ரெகுலர்' பண்ணவில்லை. நான்கு, ஐந்து டாக்டர்கள் இருக்கும் ஆஸ்பத்திரிகளில் அவர்களை அஸிஸ்டெண்ட் சர்ஜன் என்று போடலாம். சித்த வைத்தியத்திற்கும், ஆயுர்வேத வைத்தியத்திற்கும் ஒரு கல்லூரியை ஏற்படுத்த முடிவு செய்தார்கள். அது எந்த அளவில் இருக்கிறது என்று தெரியவில்லை. அதை எப்போது அமைக்கப் போகிறார்கள் என்பதைப்பற்றியும் கனம் சுகாதார அமைச்சர் அவர்கள் சொல்வார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

பிளாக் டெவலப்மெண்ட் ஆபீஸ், போலீஸ் ஸ்டேஷன், முதலிய இடங்களில் மின்சார வசதி செய்து கொடுத்திருக்கிறோம். விளக்குகள் போடுகிறோம். ஆனால், பல தாலுகாக்களில், தாலுகா ஆபீஸ், ஆர்.டி.ஓ. ஆபீஸில், மின்சார விளக்குகள் போடாமல் "வைத்த விளக்கு மாடத்தில் இருப்பது" போல் இருக்கிறது. ஆபீஸ்களில் மேஜைக்குப் பதிலாக உயரமான கள்ளிப் பெட்டியை வைத்துக் கொண்டு எழுதி வருகிறார்கள். மேலே குறிப்பிட்ட ஆபீஸ்களுக்கு மின்விளக்கு மேஜை நாற்காலிகள் கொடுத்து சர்க்கார் ஊழியர்கள் நல்ல முறையில் வேலை செய்ய வாய்ப்பளிக்க வேண்டும்.

வரி வசூல் செய்யும் காலங்களில் தாங்களே பெட்ரமாக்ஸ் லைட் வாங்கி போட்டு வேலை செய்யும் நிலை இருக்கிறது. பக்கத்தில் மின்சார விளக்கு, மின்சார விசிறி, ஓடிக்கொண்டிருக்கும்போது எவ்வளவோ ஆண்டுகளாக வேலை செய்து வரும் தாலுகா ஆபீஸில் இன்னும் பழைய நிலையே இருந்து கொண்டிருக்கிறது. அதை விரைவில் மாற்றவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஆதி திராவிடர்களுக்கு மனைக்கட்டுகள் உடனடியாக கொடுக்கவேண்டுமென்று சொல்லி அதற்காக இரண்டு தாலுகாவிற்கு ஒரு தாசில்தாரைப் போட்டிருக்கிறார்கள். இப்படி இரண்டு தாலுகாக்களுக்கு என்று போட்டிருக்கிறார்களே தவிர கிட்டத்தட்ட ஒரு கிராமத்தில் ஆர்ஜிதம் செய்து கொடுக்கவேண்டுமென்றால் நாலைந்து வருடங்கள் ஆகின்றன. ஒரு சட்டசபை பீரியட் முடிந்து விடுகிறது. இப்படி காலதாமதமாவதால் மிராசுதார்கள் மனைக் கட்டுகளிலிருந்து விவசாயிகளை வெளியேற்றுகிறார்கள். தஞ்சாவூர் ஜில்லாவில் விவசாயிகள் பெரும்பாலும் மிராஸ்தார்கள் அல்லது கோயில் மனைகளில்தான் குடி இருக்கிறார்கள். புறம்போக்கு நிலங்கள் அதிகமாகக் கிடையாது. கொஞ்சமாகத்தான் இருக்கிறது. அப்படியும் சிலர் இருந்துக் கொண்டிருக்கிறார்கள்.

[திரு. கி. இரா சம்பந்தம்] [3rd July 1962

ஆகவே, மனைக்கட்டுகள் ஆர்ஜிதம் செய்து கொடுப்பதற்கு அதிகாரிகள் போதவில்லையென்றால் ஒரு தாலுகாவிற்கு ஒரு தாசில்தாரைப் போட்டு அதைத் துரிதமாக செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். ஆதி திராவிடர்களைப்போலவே, குடியான விவசாயிகளும் வீடுகளின்றி கஷ்டப்படுகிறார்கள். ஆகவே பரவலாக ஏழை விவசாயிகள் அனைவருக்குமே மனைக்கட்டுகள் வழங்கும்படியானதொரு நிலையை நாம் ஏற்படுத்தினால்தான் ஏழை மக்கள் அதனால் நன்கு பயனடைவார்கள். (மணியடிக்கப்பட்டது.) தென்னிந்தியாவில் ஈஸ்ட் கோஸ்ட் ரோடு என்றும் வெஸ்ட் கோஸ்ட் ரோடு என்றும் இரண்டு பெருஞ்சாலை ரஸ்தாக்கள் இருக்கின்றன. அதில் பின்னது முடிந்து விட்டது. ஈஸ்ட் கோஸ்ட் ரோடு முடிவடையாததால் கடற்கரையோரத்தில் உள்ள மீனவர்கள் மிகவும் கஷ்டத்திற்கு ஆளாகி, அவர்கள் பாதிக்கப்படுகிறார்கள். அவர்கள் பிடிக்கும் மீனை விற்க முடியாமல் கருவாடாக சந்தையில் கொண்டுவந்து விற்கும் நிலைதான் இருக்கிறது. அந்த மீனவர்கள் இருக்கும் இடத்தில் ஒரு ரஸ்தா போடவேண்டுமென்று 1947-லேயே ஒரு திட்டம் உருவாக்கப்பட்டது. அந்த ரஸ்தா இருக்கும் நிலங்கள் பிச்சகடலை எஸ்டேட்டுக்கு சொந்தமாக இருக்கிறது. அதை ஆர்ஜிதம் செய்ய ஒதுக்கப்பட்ட 1, ½ லட்சம் ரூபாய் தூங்கிக் கொண்டிருக்கிறது. இப்படிப்பட்ட அவசரமான தேவைகளை, வார் டயத்தில் ஆர்ஜிதம் செய்ததைப்போல் செய்தால்தான் அவர்கள் பயனடைய முடியுமே தவிர, இல்லாவிடில் முடியாதென்று கூறிக்கொண்டு எனக்கு பேச வாய்ப்பளித்ததற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

* **திரு. சு. அங்கமுத்து நாயக்கர்:** மதிப்பிற்குரிய உதவி சபா நாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தை வரவேற்று ஒரு சில வார்த்தைகள் பேச முன்வந்திருக்கிறேன். இப்பொழுது புதிய வரிகள் போடப்பட்டிருப்பதைப் பற்றி எதிர் கட்சி அங்கத்தினர்கள் சிலர் குறை கூறினார்கள். சிலர் எதிர்த்தும் பேசினார்கள். ஆனால் போடப்பட்டிருக்கும் வரி எதற்காக போடப்பட்டிருக்கிறது என்பதை கனம் நிதியமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கும் அறிக்கையைப் பார்த்தால் தெரியும். போடப்பட்டிருக்கும் வரிகள், ஏழைகள் வாழவே வகை செய்யப்பட்டிருக்கிறது. மதிப்பிற்குரிய நமது கனம் நிதியமைச்சர் அவர்கள் தமது அனுபவத்தை அதில் காட்டியிருக்கிறார்கள் என்றால் அது மிகையாகாது. வேலை இல்லாதவர்களுக்கு வேலை தேடிக்கொடுக்கவும் தொழில் இல்லாதவர்களுக்கு தொழில் கொடுக்கவும், தண்ணீர் வசதி செய்து கொடுக்கவும், படிக்க வசதியில்லாதவர்களுக்கு படிக்க வசதி செய்து கொடுக்கவும் இப்படி முக்கியமானவைகளுக்காக திட்டம் அமைக்கப்பட்டிருக்கின்றன, இந்த வரவு செலவுத் திட்டம். கல்வி, விவசாயம், தொழில் இவைகள் முக்கியத்துவம் வாய்ந்தது என்றால் அது மிகையாகாது. நமது மாநிலத்தில் கோடிக் கணக்கானவர்கள் நிலமில்லாதிருக்கிறார்கள். அவர்களுக்கு வரி போடப்பட்டிருக்கிறதா என்று ஊன்றிப் பார்க்க வேண்டும். தொழிலை எடுத்துக் கொண்டாலும் எல்லா தொழில் செய்யும் மக்களும் வரி கொடுக்கவேண்டுமென்று இத்திட்டத்தில்

3rd July 1962] [திரு. சு. அங்கமுத்து நாயக்கர்]

இருக்கிறதா என்பதையும் ஊன்றிப் பார்க்க வேண்டும். திட்டத்தை போட்டவாறு நடத்தமுடியவில்லை என்று சிலர் சொல்லுகிறார்கள். போட்ட கல் அப்படியே இருக்கிறது, வைத்த சுவர் அப்படியே இருக்கிறது என்று எனக்கு முன்னால் பேசிய ஒரு நண்பர் சொன்னார். முதல் ஐந்தாண்டுத் திட்டம் எப்படி இருந்தது, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நாம் எப்படி இருந்தோம், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் நாம் எப்படியிருக்கிறோம் என்பதையெல்லாம் ஊன்றிக் கவனிக்க வேண்டும். சுதந்திரம் கிடைப்பதற்கு முன்னர் நாம் எப்படி இருந்தோம், இப்பொழுது எப்படி இருக்கிறோம் என்பதை நாம் யோசித்துப் பார்க்க வேண்டும். நாடு முன்னேற வேண்டுமானால், மக்கள் சுகமாக வாழவேண்டுமானால் இத்திட்டத்தை நிறை வேற்றவேண்டும் நல்லபடியாக. அது இங்குள்ள பொறுப்புள்ள அங்கத்தினர்களின் கடமையாகும் என்று உங்களுக்கு சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் முடிவடைந்து, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் நல்ல வழிவகைகள் செய்யப்பட்டு நாடு முன்னேறவும், ஏழை மக்கள் முன்னேற நல்ல வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டிருப்பதால் நாம் அனைவரும் இத்திட்டம் நன்கு வெற்றிகரமாக நிறைவேற நமது ஒத்தாசையைக் கொடுக்கவேண்டுமென்று உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். எங்கள் ஆத்தூர் தாலூகா மிகவும் பிற் பட்ட தொகுதி. விவசாயத்திற்கு வேண்டிய பாய்ச்சல் நிலமே கிடையாது. சிறிய சிறிய ஏரிகள் இருக்கின்றன. எங்கள் தாலுகா வில் முக்கியமானதொரு பெரிய ஏரி பெத்தநாயக்கன்பாளையம் பனை ஏரி. அங்கு பல ஆண்டுகளாக தண்ணீர் வருவதில்லை. அங்கு வாய்க்கால்கள் வெட்டி தண்ணீர் வர நல்ல வழிவகைகள் இருக் கின்றன. ஆனால் அவை கவனிக்கப்படாதிருக்கின்றன. அதைக் கவனித்து அதை சீர் செய்து விவசாயத்திற்கு வசதி செய்து தரும்படி கேட்டுக்கொள்கிறேன். ரெட்டி அணைக்கு வசிஷ்ட நதியிலிருந்து தண்ணீர் வர வழியிருக்கிறது. ஆனால் அந்த அணை கடந்த 30 ஆண்டுகளாக பழுதுபார்க்கப்படாமல் இருக்கிறது. அதற்கு சிறிது செலவு செய்தால் போதும். விவசாய அமைச்சர் அவர்கள் நேரில் வந்து பார்த்து, அதைக் கட்டிக்கொடுக்க ஏற் பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அப்படிச் செய்து கொடுத்தால் 1,000 ஏக்கருக்கு மேல் தண்ணீர் பாய வசதி ஏற்படும். கவர்னர் உரையின்போது கூட, டவுனில் குடி தண்ணீர் வசதியில்லையென்று கூறியிருக்கிறேன். கனம் அமைச்சர் அவர் களிடத்திலும் சொல்லி வந்திருக்கிறோம், அதற்கும் ஆவன செய்ய வேண்டுமென்று வற்புறுத்தி கேட்டுக்கொள்கிறேன்.

சேலத்தில் ஒரு இன்சினியரிங் கல்லூரி ஏற்படுத்தவேண்டும் என்று கோரியிருந்தோம். முன்னாள் கனம் நிதி அமைச்சர் திரு. சுப்பிரமணியம் அவர்கள் இடைக்கால பட்ஜெட் கொண்டுவரும் போது, சேலத்திற்கு ஒரு இஞ்சினியரிங் கல்லூரி ஏற்படுத்தலாம் என்று சொல்லியிருந்தார். ஆனால் இன்றைய பட்ஜெட்டில் அது எங்கேயோ மறைந்துவிட்டது. பட்ஜெட்டில் இருப்பதாகவே தெரியவில்லை. இது மறந்து போய் சேர்க்காமல் விட்டு விட்டார்கள் என்று தெரிகிறது. ஆகவே மீண்டும் இதைச் 1-30 p.m.

[திரு. சு. அங்கமுத்து நாயக்கர்] [3rd July 1962

சேர்த்து அடுத்த வருஷத்திலேயே சேலத்திற்கு ஒரு இன்ஜினியரிங் காலேஜ் ஏற்படுத்தவேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களை மிகவும் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன்.

பல துறைகளிலும் நம் நாடு முன்னேற்றம் அடைந்திருக்கிறது. சிறு சிறு தொழில்கள் எல்லாம் வளர்ந்திருக்கிறது. முக்கியமாக எங்கள் ஆத்தூர் பக்கத்தில் ஒரு நூல் ஆலை ஆரம்பிக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டிருக்கிறோம். இதற்கான இடம் எங்கள் ஆத்தூர் பகுதியில் ஏராளமாக இருக்கிறது. எங்கள் ஊரிலேயே ஒரே இடத்தில் சம பூமியாக 1,000 ஏக்கருக்கு மேலும் இருக்கின்றது. ஆகவே அதில் சீக்கிரமாக ஒரு ஆலை ஏற்படுத்த வேண்டிய நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று சொல்லிக் கொண்டு, இந்த நேரத்தில் பேசுவதற்கு சந்தர்ப்பம் அளித்த கனம் உதவி சபாநாயகர் அவர்களுக்கு நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

**கனம் உதவி சபாநாயகர்:** சபை இப்போது ஒத்திவைக்கப்
1-31 p.m. பட்டு நாளை காலை 8-½ மணிக்கு மீண்டும் கூடும்.

பிறகு சபை ஒத்திவைக்கப்பட்டது.

## V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. Statutory Rules and Orders—*Nil.*

### B. Reports, Notifications and other Papers.

* 59. *Notification issued with G.O. Ms. No. 662, Industries, Labour and Co-operation (Labour), dated 2nd February 1962, regarding amendment to the Madras Factories Rules, 1950, published with the late Development Department Notification, dated the 15th March 1950, at pages 103 to 178 of the Rules Supplement to Part 1 of the Fort St. George Gazette, dated the 25th April 1959, as subsequently amended, the same having been previously published as required by section 115 of the Factories Act, 1948 (Central Act LXIII of 1948).*

* 60. *Notification issued with G.O. Ms. No. 1990, Industries, Labour and Co-operation (Labour), dated 30th March 1962, amending the Minimum Wages (Madras) Rules, 1953, as subsequently amended, the same having been previously published as required by sub-section (1) of section 30 of the Minimum Wages Act, 1948 (Central Act XI of 1948).*

---

* **Laid on the table of the House on 2nd July 1962.**